# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## ஏழாம் மடலம் - மூன்றாம் பாகம்

மெ - மௌ

**Vol. VII - Part - III**

**து. இராசேந்திரன்,** இ.ஆ.ப.,
அரசு செயலாளர்,
தமிழ் வளர்ச்சி அறநிலையங்கள் மற்றும் செய்தித்துறை
மற்றும்
இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு)
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கம்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட
இயக்கக வெளியீடு
2007

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## ஏழாம் மடலம் - மூன்றாம் பாகம்

## (மெ - மௌ)

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## VOL. VII- PART III

து. இராசேந்திரன், இ.ஆ.ப.
அரசு செயலாளர், தமிழ் வளர்ச்சி, அறநிலையம் மற்றும்
செய்தித் துறை
மற்றும்
இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக வெளியீடு

2007

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக வெளியீடு – 21

முதற் பதிப்பு : 2007

A Comprehensive Etymological Dictionary of the Tamil Language, Vol. VII, Part - III

பதிப்புரிமை : தமிழ்நாட்டரசு
Government of Tamilnadu

விலை உருபா 400/–

குறியீட்டெண் Colon No. P.J1-J, 314"K.M4

வெளியிட்டோர் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
சி–48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்
அண்ணாநகர், சென்னை – 600 040.

அச்சீடு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி,
சென்னை 600 113.

நூல் கிடைக்குமிடம் : செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
சி–48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்
அண்ணாநகர், சென்னை – 600 040.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி,
சென்னை – 600 113.

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி
## A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE
**VOL. VII- PART III**

ஏழாம் மடலம் - மூன்றாம் பாகம்
(மெ - மௌ)

பதிப்புக் குழு


து. இராசேந்திரன், இ.ஆ.ப.
*அரசு செயலாளர், தமிழ் வளர்ச்சி, அறநிலையம் மற்றும் செய்தித் துறை*
மற்றும்
இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)
*செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்*

கூர்ந்தாய்வாளர்
திரு.மா.பூங்குன்றன்

தொகுப்பாளர்கள்
திரு.முத்து.பிச்சை
முனைவர் மு.கண்ணன்
முனைவர் பா.வெற்றிச்செல்வன்
முனைவர் ச.செந்திலாண்டவன்
முனைவர் இரா.கு.ஆல்துரை (பகுதிப் பொறுப்பாளர்)
திரு.கா.இளமுருகு
திரு.ச.கி.கணேசன் (ஓவியர்)
*செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்*

மு. கருணாநிதி
முதலமைச்சர்




தலைமைச் செயலகம்
சென்னை - 600 009

நாள் 20.4.2007

## அணிந்துரை

அகரமுதலி திட்டத்தின் ஏழு மற்றும் எட்டாம் மடலங்கள் இதழ்களை விரிப்பது கண்டு என் இதயம் பெருமிதம் எய்துகிறது. ஒவ்வொரு மொழியிலும் அதன் சொற்களுக்கு வேர் மூலம் காண முற்படும்போது, பெரும்பாலான சொற்களின் வேர்மூலங்கள் அடுத்த மொழிகளில் சென்று நிற்கும். ஆனால், தமிழில் உள்ள சொற்களின் மூலங்கள் அனைத்தும் தமிழிலேயே அமைந்துள்ளன. இப்போது நடைமுறையில் வழங்குகிற தமிழ்ச் சொற்களும், உருவாகி வருகின்ற கலைச் சொற்களும், தொழில்நுட்பச் சொற்களும் ஏற்கனவே வழங்கிய வேர் மூலங்களிலிருந்து விரிந்தும் பெருகியும் வந்தனவும் வருவனவும் ஆகும்.

அறிவியல் வளர்ச்சி மிகுந்துள்ள இந்நாளில், செய்தித் தொடர்பாலும் தொழில் நுட்ப வளர்ச்சியாலும் உலகம் சுருங்கிவிட்ட நிலையில், ஒரு மொழியில் அண்டையயல் மொழிச் சொற்களெல்லாம் கலந்து விடுவது இயல்பு. இத்தகைய சூழ்நிலையிலும் தமிழ் தனித்தியங்க வல்லதாக நெடுங்காலமாக இயங்கிக் கொண்டு இருக்கிறது. இதைத்தான் பாவேந்தர் பாரதிதாசனார் 'தனித்தியங்கும் தன்மை தமிழினுக்கு உண்டு; தமிழே ஞாலத்தில் தாய்மொழி பண்டு' என்று ஆணித்தரமாகப் பாடி வைத்தார்.

அவ்வாறு, தமிழ், தான் தனித்தியங்குவது மட்டுமல்லாமல், பிற மொழிகளுக்கும் சொற்களை வாரி வழங்கிக் கொண்டுள்ளது. தமிழகத்திற்கு அப்பால் தனித்தனியே பிரிந்து வழங்கிவரும் திராவிட மொழிகளுக்கெல்லாம் தமிழ்மொழி வேர் மூலங்களை வழங்கியுள்ளதால், அவற்றின் அடிப்படையிலேயே அம்மொழிகளில் சொற்கள் பெருகியுள்ளமையைக் காண்கிறோம். அதனாலேயே, 'தமிழ் திரவிடத்திற்குத் தாய்' என்று தேவநேயப் பாவாணர் பறை சாற்றினார்.

இன்னும் பல மொழிகளிலுமுள்ள சொற்களின் வேர் மூலங்களும் தமிழிலேயே இருப்பதைக் காண நேர்கிறது. இது மொழியியல் உலகின் ஆய்வுப் போக்கைப் பல திருப்பங்களுக்கு உள்ளடக்குகின்றது. நெடுங்காலமாக வழக்கத்தில் இருப்பதும், தனித்தியங்க வல்லதும், பிறமொழிகளுக்குச் சொற்களை வழங்கவல்லதுமான மொழியே 'செம்மொழி' எனச் செம்மொழி இலக்கணம் வரையறுக்கப்படுகின்றது. தமிழின் இலக்கண இலக்கிய நூல்கள் இருட்டடிப்புச் செய்யப்பட்டு மறைக்கப்பட்டிருந்த காலமான கி.பி. 1857 அளவில் தமிழகம் வந்திருந்த கால்டுவெல் பெருமகனார் தமிழ், மலையாளம், தெலுங்கு, கன்னடம் ஆகிய மொழிகளில் ஓர் ஒப்புமையைக் கண்டறிந்து, "திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்" (The comparative grammar of Dravidian Languages) என்ற நூலை வெளியிட்டார். அதன் வழி அவர் தன் ஆராய்ச்சியில் கண்ட முடிவுதான், "தமிழ் ஒரு செம்மொழி" என்பதாகும்.

அதன்பின், ஆங்கில அறிஞர்களான, "மெக்ளின்" போன்றவர்கள் தமிழ்மொழியில் உள்ள பதிவுகளையும், தமிழர்களின் பண்பாடு, நாகரிகம் ஆகியவற்றையும் அறிவியல், வானியல் போன்றவற்றில் அவர்கள் பெற்றிருந்த அறிவாற்றலையும் ஆராய முற்பட்டனர். அவற்றின்வழி அந்த அறிஞர் பெருமக்கள் எல்லாம், 'தமிழ் ஓர் உயர் தனிச் செம்மொழி' (Primary Classical) என்று வழிமொழிந்து சென்றனர்.

இவற்றின் தொடர்ச்சியாகத் தமிழை ஒரு செம்மொழி என அரசே அறிவிக்க வேண்டுமென்று பரிதிமாற் கலைஞர் தன் கோரிக்கையை முதன்முதலில் அரசின் முன்வைத்து வலியுறுத்தினார்.

ஆனால், இதை முழுவதுமாக அறிவியல் வழியாக மொழியியலில் நிறுவுவதற்குச் சொற்களுக்கு உரிய வேர் மூலம் காணும் சொற்பிறப்பியல் பணியே துணை நிற்கும் என்று, தன் வாழ்நாளையே சொல்லாய்வுக்கென ஒப்புவித்துக் கொண்டவர் 'மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர்'. இத்தகைய பலரது தொடர்ச்சியான சிந்தனைகளின், செயல்பாடுகளின் மூலமாகத்தான் தமிழ் ஒரு செம்மொழி என்பதற்கான அங்கீகாரத்தை இன்று நாம் வென்றெடுத்துள்ளோம்; வெற்றிவாகை சூடியுள்ளோம்.

தமிழ்மொழியில் வழங்கும் சொற்களுக்கெல்லாம் வேர்மூலம் காண்பது என்பது ஆழ்கடலில் முத்தெடுக்கும் பணியினும் கடினமானது; இந்தப் பணியொன்றே தமிழ் செம்மொழி என்பதை ஏற்கச் செய்யும் முதன்மைப் பணியாகும். இப்பணியில் மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் பல ஆண்டுகள் உழைத்து ஆராய்ச்சி நூல்கள் பலவற்றை உருவாக்கி வெளியிட்டுள்ளார்; 'உயர்தனிச்செம்மொழி' (The Primary Classical Language of the World) என்ற நூலைப் பல ஆண்டுகளுக்கு முன்னமேயே வெளியிட்டுள்ளார்.

தேவநேயப் பாவாணரின் இந்தச் சொல்லாராய்ச்சித் திறனை அறிந்து, அவர்தம் பணி தமிழ் உலகிற்குத் தேவை என்று நான் கருதியதால் 8.5.1974 அன்று, 'செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்ககம்' என்னும் ஒரு துறையைப் புதிதாக நிறுவி, அதற்குப் பாவாணர் அவர்களையே இயக்குநராகவும் நியமனம் செய்து அகர முதலித் தொகுதிகள் வெளிவர ஆவன செய்ததை இவ்வேளையில் மகிழ்வுடன் நினைவு கூர்கிறேன். அதன் பயனாக, பணிகள் சிறப்பாக நிகழ்ந்து முதல் தொகுதி அணியமாகிக் கொண்டிருக்கும் நிலையில் பாவாணர் அவர்கள் திடீரென மறைந்தார்கள். அதற்குப்பின் அவர்தம் நூல்களை அடிப்படையாகக் கொண்டு, அவரின் அணுகுமுறையிலேயே தொடர்ந்து அகர முதலித்திட்டத்தின் அடுத்தடுத்தத் தொகுதிகள் வெளிவரலாயின.

பாவாணர் மறைவுக்குப் பின்னும், ஒவ்வொரு முறையும் அரசுப்பொறுப்பு ஏற்கிற போதும் இந்தத் துறையின் வளர்ச்சியில் நான் மிகுந்த அக்கறை செலுத்தி வந்துள்ளேன். 1996ஆம் ஆண்டில் தமிழ் ஆட்சி மொழி, தமிழ்ப் பண்பாட்டுக்கு எனத் தனி அமைச்சகம் உருவாக்கப்பட்டுச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்திற்குத் தேவையான கூடுதல் பணியாளர்கள், கணிப்பொறியமைப்பு போன்ற வசதிகள் செய்து கொடுக்கப்பட்டன.

இதுவரை, மும்மூன்று தொகுதிகள் கொண்ட ஆறு மடலங்களாக மொத்தம் 18 தொகுதிகள் சென்ற ஆண்டுவரை வெளிவந்து முடிந்துள்ளன. இப்போது 'ம', 'ய', 'வ' வரிசையில் ஆறு பகுதிகள் வெளிவருவது கண்டு மகிழ்ச்சியடைகிறேன். எஞ்சிய பகுதிகளும் விரைந்து வெளிவர வேண்டும் என்பது என் அவா. இந்த அகரமுதலிப் பகுதிகள் வெளிவர உறுதுணையாய் நின்ற தமிழ் வளர்ச்சி—பண்பாடு (ம) அறநிலையத் துறை சிறப்பு ஆணையர் மற்றும் அரசுச் செயலாளர் மற்றும் அகரமுதலித் திட்ட இயக்கத்தின் பொறுப்பு இயக்குநர் திரு. து. இராசேந்திரன், இ.ஆ.ப. அவர்களுக்கும், நூல்களை உருவாக்கியுள்ள அகரமுதலித் திட்டத்தின் ஆசிரியர், பணியாளர் குழுக்களுக்கும் எனது உளமார்ந்த பாராட்டுகள் உரித்தாகுக.

என்றும்,
அன்புடன்

(மு. கருணாநிதி)



மாண்புமிகு தமிழக முதலமைச்சர்

"முத்தமிழறிஞர்"

**கலைஞர் மு. கருணாநிதி**

தமிழ்நாடு அரசு

**து. இராசேந்திரன், இ.ஆ.ப.,**
**அரசு செயலாளர்,**
**தமிழ் வளர்ச்சி, அறநிலையம் (ம) செய்தித் துறை மற்றும்**
**இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)**
**செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்,**

# பதிப்புரை

மனிதச் சமுதாயத்தை உயர்த்த உதவும் அரியகலை மொழி. ஒரு மொழியின் பழமையை நிலைநாட்டுவதற்குப் பிற அடிப்படைகளைக் காட்டிலும் மொழியாய்வே முதன்மையானது. பிற சான்றுகள் அனைத்தும் வரலாற்றுக் காலம் வரையுள்ள பழமைத் தன்மையை விளக்கவல்லன. வரலாற்றுக் காலத்திற்கு முந்தைய நிலையைக் காட்டக்கூடிய ஒரே சான்றாக மொழி விளங்குகிறது. அவ்வடிப்படையில் தான் தமிழின் தோற்றத்தைப் பற்றி அறிய தமிழாய்வு பெருமளவில் துணைபுரியும் என்று மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் கருதினார்; தம் ஆய்வின் மூலம் தமிழின் பழமையை நிலை நாட்டினர்.

இன்று உலகில் மூவாயிரத்திற்கும் மேற்பட்ட மொழிகள் பேசப்பட்டு வருகின்றன. இம்மொழிகள் பல்வேறு மொழிக் குடும்பங்களைச் சேர்ந்தவையாக வகைப்படுத்தப் பட்டுள்ளன. இவற்றுள் இந்தோ–ஐரோப்பியம், திராவிடம், உரல் – அல்தாயிக், ஆப்பிரோ – ஆசியாடிக்கு (எமைதோ–செமிதிக்கு) ஆகியவை இன்றியமையாத குடும்பங்களாகக் கருதப்படுகின்றன. இந் நான்கு மொழிக் குடும்பங்கள் பொதுவான ஒரு மூலமொழியிலிருந்து தோன்றியிருக்க வேண்டும் என்று ஐரோப்பிய மொழியிலறிஞர்கள் சென்ற நூற்றாண்டு தொடக்கத்திலேயே கருதினர். இத்திசையில் பாவாணரது ஞாலமுதன்மொழி ஆய்வு தமிழின் ஞாலமுதன் மொழித்தன்மையை எடுத்துக் காட்டுகிறது.

மொழி வரலாற்றில் நிலைப்பாடு, வளர்ச்சி ஆகிய இரண்டு தன்மைகள் குறிப்பிடத்தக்கனவாக இருக்கின்றன. தமிழ் மொழியைப் பொறுத்தவரை தொல்காப்பியர் காலத்திற்குப் பன்னெடுங்காலத்திற்கு முன்பே நன்கு நிலைத்த தன்மையினை எய்திவிட்டது.

"மொழியில் இருவகை மாற்றங்கள் ஏற்படுகின்றன. ஒன்று அகக்காரணங்களால் ஏற்படுவது. மற்றொன்று புறக் காரணங்களால் ஏற்படுவது. பெரும்பாலும் சிக்கனம், ஒப்புமை, போன்றவற்றால் நிகழ்வது அகக்காரணங்களால் ஏற்படும் மாற்றமாகும். அரசியல் தாக்கம், சமுதாயப் புரட்சி அல்லது வேற்று நாட்டு வெற்றி ஆகியவற்றால் நிகழ்வது புறக்காரணங்களால் ஏற்படும் மாற்றமாகும்" (மாக்கசுமுல்லர் 1888 முன். XXVIII ). மொழியின் திரிபுக்கு முந்தைய தன்மையைத் திரிபடைந்த தன்மையைக் கொண்டுதான் காணவேண்டியிருக்கிறது. இவ்வகையில் முந்தைய தன்மையை மொழியகழ்வாய்வின் மூலம் காட்டினார் பாவாணர்.

கருத்துப் பொதிந்த கருவூலங்களாக மொழிச் சொற்கள் விளங்குகின்றன. மொழி வழக்காற்றில் காலந்தோறும் நிகழ்ந்துள்ள பண்பாட்டு – அறிவுக் கூறுகள் அனைத்தும் மொழிச் சொற்களில் பொதிந்திருக்கும். சொல்லின் மூலவடிவத்தை அறிந்தால் அதன் பின் அது பெற்று வந்துள்ள மாற்றங்களைக் கணக்கிடலாம். சொல்லின் மூலவடிவத்தைக் காண்பதற்கு நாம் அவ்வடிவத்தின் பழமையைக் காணவேண்டும். இன்றைய நிலையில் பல்கிப் பெருகிக் காணப்படும் மொழிச் சொற்கள் எல்லாம் சிறு எண்ணிக்கையிலான வேர்களினின்று வளர்ந்து வந்துள்ளன. மொழி வளர்ச்சியில் அரிதான சொற்களும் தனிமைப்படுத்தப்படும் சொற்களும் வழக்கிழக்கின்றன. அதே நேரத்தில் புதிய ஆக்கங்களுடன் தேவையான சொற்களை மொழி ஆக்கிக் கொள்கிறது.

உலகமொழிகள் மூவாயிரத்துள்ளும் வேர்ச்சொல் காண்பதற்கு எளிதாகவும் மிகுதியாகவும் இடந்தரும்மொழி தமிழ் ஒன்றே. அஃது இயன்மொழியாதலால் பெரும்பாற் சொற்களின் வேர்வடிவை அல்லது வேருறுப்பை இன்றும் தாங்கி நிற்கின்றது.

"ஒரு மொழியின் பெருமை அல்லது வளமை அதன் சொல்வளத்தால் அறியப்படும். சொல்வளத்தைக் காட்டுவது அகரமுதலி யென்னும் சொற்களஞ்சியம்" (பாவாணர் 1995 : முன் XXII) அகரமுதலி சொற்களை அடிப்படைப் பொருளாகக் கொண்டு சொற்கள் தொடர்பான செய்திகளைத் தருகிறது. இது சொற்களின் தொகுப்பாக இருப்பதால் கடந்த காலத்தையும் வருங்காலத்தையும் இக்காலத்தின் வழியே இணைக்கும் பாலமாக இயங்கி வருகிறது. அகரமுதலி பல கிளை வழக்குகளினூடே மொழியைத் தரப்படுத்தும் தன்மை வாய்ந்தது. தமிழ், சொல்வளமிக்க மொழி. அதன் சொல்வளத்தைக் கொண்டு அதன் நலன்கள் அனைத்தையும் அறிந்துகொள்ளலாம். தமிழ்நலன்கள் அனைத்தையும் காட்டும் வகையில் வடிவமைக்கப்பட்ட செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலியின் ஏழாவது மடலம் மூன்றாம் – பகுதி இது. இது "மெ" முதல் "மௌ" வரையிலான வரிசைச் சொற்களைக் கொண்டது.

இப்பகுதியில் குறிக்கப்பட்டுள்ள சொற்களுக்கான விளக்கம் அருமையாக கொடுக்கப்பட்டுள்ளது. எடுத்துக்காட்டாக 'முல்' என்னும் வேரிலிருந்து 'மெத்தை[1]' என்னும் சொல் பிறந்த வகையாக முல் → மெல் → மென்மை. மெல் → மெலி → மெலிவு. மெல் → மெலு → மெது → மொதுபு → மெதுகு. மெது → மெத்து → மெத்தை = மெல்லணை என்று காட்டப்பட்டுள்ள பொருத்தப்பாட்டினைக் கண்டுகொள்ளலாம்.

மே → மேல்[2] என்று சொல் வளர்ச்சியைக் காட்டும் போது எ, ஏ, சே, தெ, தே, மெ, மே, வே ஆகிய எழுத்துகளில் தொடங்கும் சொற்கள் உணர்ச்சியினைக் குறிக்கின்றன என்று ஒரு புது நெறியைத் தருவதைக் காணலாம்.

மொட்டு[1] என்னும் சொல்லுக்கு வேர் விளக்கம் தரும்போது முள் → முளை = முளைக்கும் வேர் தளிர் முதலியன, மரக்கன்று. முகுள் → முகுளம் = அரும்பு. முகுள் → முகிள் → முகிளம் = அரும்பு. முகிள் → முகிழ் = அரும்பு என்று முகுளம், முகுள், முகிளம், முகிழ் ஆகிய நான்கு சொற்கள் அரும்பு என்று பொருள் கொண்டிருப்பதைக் காட்டிப் பின்னர் முகிழ் → முகிழம். முட்டு → மொட்டு என்று காட்டி விளக்கும் திறத்தைக் காணலாம்.

தமிழ் வளர்ச்சிக்குப் பல்லாற்றானும் ஊக்கம் அளித்து வரும் நம் **மாண்புமிகு முதலமைச்சர்** அவர்களுக்கு எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் வெளிவர அயராதுழைத்த பதிப்பாசிரியர்கள், உதவிப் பதிப்பாசிரியர்கள், பகுதிப் பொறுப்பாளர், தொகுப்பாளர்கள் உள்ளிட்ட அனைவருக்கும் எனது பாராட்டுகள்.

**து. இராசேந்திரன்**

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## மெ

**மெ** *me,* 'ம்' என்ற மெய்யெழுத்தும் 'எ' என்ற உயிரெழுத்தும் இணைந்த உயிர் மெய் (அசை) எழுத்து; the syllable formed by adding the short vowel 'e' to the consonant 'm'.

*[ம் + எ]*

**மெச்சாதவர்** *meccādavar,* பெ.(n.) 1. வரவேற்கத் தக்க விருந்தினர், நல்விருந்து; welcome guest. 2. நண்பர்கள் (வின்.); friends.

*[மெச்சு + ஆ + த + அவர்]*

**மெச்சிக்கொள்(ளு)-தல்** *mecci-k-koḷ(ḷu)-,* 10 செ.குன்றாவி. (v.t.) புகழ்ந்துரைத்தல்; to praise, approve, command. *'மெச்சிக் கொள்கிறதற்கு எச்சிலை எடுக்கிறது' (பழ.). 'தமிழின் தனித்தன்மையை மெச்சிக் கொள்ளாத புலவர் இல்லை' (உ.வ.).*

தெ. மெச்சுகொனது.

*[மெச்சு → மெச்சி + கொள்-, 'கொள்' து.வி.]*

**மெச்சு[1]-தல்** *meccu-,* 5 செ.குன்றாவி. (v.t) 1. புகழ்தல், பாராட்டுதல்; to praise, extol, to flatter, to land. *"அமரர் மெச்ச மலர்மல்கு பொழில்" (தேவா. 543, 9). 'சிறுவனின் மறத்தன்மையை மெச்சாதவர்கள் இல்லை' (உ.வ.).* 2. மதித்தல் (வின்.); to esteem. 3. வியத்தல்; to admire greatly, wonder. *"மெச்சூது சங்கமிடத்தான்" (திவ். பெரியாழ். 2, 1, 1).*

ம. மெச்சுக; க., தெ., குட., பட. மெச்சு; து. மெச்சு, மெச்சி; கோத. மெச்.

*[ஏ = உயர்ச்சி, பெருமை. ஏ → ஏடு = விஞ்ஞையருலகம். ஏ → ஏத்துதல் = உயர்த்துதல், புகழ்தல், வழுத்துதல். எஞ்சுதல் = மேற்படுதல், மிகுதல், மீதல். எஞ்சு → எச்சு → எச்சம், மிகுதியாய்க் கொடுத்தலை எச்சாய்க் கொடுத்தல் என்பது கொங்கு நாட்டுவழக்கு. (மு.தா.71 – 73). எ → எச்சு → மெச்சு. மெச்சுதல் = உயர்த்திப் பேசுதல்]*

**மெச்சு[2]** *meccu,* பெ.(n.) உவப்பு(வின்); approbation, commendation.

மறுவ. பாராட்டு, புகழ்.

ம. மெச்சம்; க. மெச்சு, மெச்சிகெ, மெச்சுவிகெ; தெ., பட., குட. மெச்சு; து. மெச்சணிகெ; கோத. மெச்.

*[எ → எச்சு → மெச்சு]*

**மெஞ்சை** *meñjai,* பெ.(n.) மென்செய் பார்க்க; see *menšey.*

மறுவ. நஞ்சை.

*[மென்செய் → மெஞ்சை]*

**மெஞ்ஞலம்** *meññalam,* பெ.(n.) மெய்ந்நலம் (யாழ். அக) பார்க்க; see *mey-n-nalam.*

*[மெய்ந்நலம் → மெஞ்ஞலம்]*

**மெட்டி** *meṭṭi,* பெ.(n.) வெள்ளியிலான பெண்கள் கால்விரலணிவகை; a kind of plain silver ring worn on the great toe or the next toe. *'மெட்டியொலி எழ நடந்து வந்தாள்' (உ.வ.).*

க. மெட்டு; தெ. மெட்டெ, மட்டிய, மட்டெ; து. மேண்டிகெ; நா. மட்டெ; பர். மட்ட.

*[மெட்டு = மேடு, மண்திட்டு, யாழிசைத் தானக்கட்டை, இசைப்போக்கு, மேன்மை. மெட்டு → மெட்டி. (மு.தா.73)]*

சில வகுப்பாரிடையே பெண்கள் திருமண மானதற்கு அடையாளமாகவும் சிலரிடையே அழகிற் காகவும் மெட்டி அணியும் வழக்கம் உண்டு.




மெட்டு¹-தல் *mettu-,* 4 செ.குன்றாவி. (v.t.) காலால் தாக்குதல்; to spurn or push with the foot. *"நிகளத்தை மெட்டி மெட்டிப் பொடிப்படுத்தி" (பழனிப்பிள்ளைத். 12).*

க., தெ., பட. மெட்டு; கோத. மெட்; துட. மோட்; மா. மட்யெ.

*[முட்டு → மட்டு → மட்டை = பட்டை (மு.தா.114) முட்டு → மட்டு → மெட்டு. மெட்டுதல் = ஒன்றனை அழுந்துமாறு காலால் மிதித்தல்]*

மெட்டு² *mettu,* பெ.(n.) செருப்பு; a sandal, a shoe.

க., தெ., பட. மெட்டு.

*[மெட்டுதல் = காலால் மிதித்தல். மெட்டு = மிதித்து நடக்கப் பயன்படுத்தும் செருப்பு]*

மெட்டு³ *mettu,* பெ.(n.) 1. மேடு (திவா.); mound. 2. வெட்டும் பள்ளத்தின் நடுவில் வெட்டளவு காட்டும் மண்திட்டு (இ.வ.); section of earth left in the centre of an excavation as a measure of its depth. *'போடிமெட்டு, கம்பம்மெட்டு' (உ.வ). ஊர்ப்பெயர்கள் பின்னொட்டு.* 3. கின்னரத்தில் (பிடிலில்) வைக்கும் மிதப்புக்கட்டை; bridge of a fiddle. 4. ஊர் சூழ்காடு (வின்.); wood or jungle which surrounds a village.

ம. மேடு, மாடு (குன்று); க. மெட்டு, மேடு (குன்று), மிட்டு (மலை), மிட்டெ (மேட்டு நிலம்); தெ. மெட்ட; து. மிட்டெ, முட்டெ (குவியல்); கொலா. மெட்டா, மெட்ட்; நா. மெட்ட்; கோண். மட்டா (மலை).

*[எ → எட்டு. எட்டுதல் = உயர்ந்து அல்லது நீண்டு தொடுதல். எட்டம் = உயரம், தூரம். (மு.தா.70). எட்டு → மெட்டு = மேடு, மண்திட்டு, யாழிசைத் தானக்கட்டை]*

மெட்டு⁴ *mettu,* பெ.(n.) மெட்டி பார்க்க; see *metti. "மெட்டினைப் பதத்திலிட்டு" (தனிப்பா. ii. 29, 68).*

க. மெட்டு; தெ. மெட்டெ.

*[மெட்டி → மெட்டு]*

மெட்டு⁵ *mettu,* பெ.(n.) 1. ஆயத்துறை (வின்.); place where custom is paid, custom-house. 2. தடை; obstacle, obstruction. *'உள்ளே வரவொட்டாமல் மெட்டு வைத்து விட்டான்' (நெல்லை.).*

தெ. மெட்டு.

*[எ → எட்டு → மெட்டு = மேடு, மண்திட்டு, மேடான இடத்தில் அமையும் ஆயத்துறை, மேடு ஏற்படுத்தும் தடை]*

மெட்டு⁶ *mettu,* பெ.(n.) பெருந்தகைமை, மதிப்புரவு (கௌரவம்); honour. *"மெட்டுக் கடக்க வெருட்டிடும்" (விறலிவிடு. 860).* 2. ஒயில் (இரீதி) (இ.வ.); fashion, style. 3. இசைப்பண்; tune of a song, rhythm.

'பாரதி பாட்டை இனிமையான மெட்டில் கேட்கும் போது பொருளும், இசையும் நம்மை மயக்குகின்றன. இது இந்துத்தானி மெட்டு' (உ.வ.).

பட. மேட்டு (பகட்டாரவாரம்).

*[எ → எட்டு → மெட்டு = மேடு, உயர்ந்து காணப்படும் பெருந்தகைமை, உயர்த்திக் காட்டப் பெறும் ஒயில்]*

**மெட்டுக்காரன்** *mettu-k-kāraṉ*, பெ.(n.) ஆயம் தண்டுவோன்; custom officer; one who collects customs, toll-gatherer.(C.G.)

*[மெட்டு[5] + காரன். எட்டு → மெட்டு = மேடு, மண்திட்டு, ஊர் சூழ்காடு. மெட்டுக்காரன் = மேடான இடம் அல்லது ஊரையொட்டிய இடத்தில் அமர்ந்தவன், அங்கமர்ந்து வரி தண்டுபவன்.]*

**மெட்டுச்சேவகன்** *mettu-c-cēvagaṉ*, பெ.(n.) 1. மெட்டுக்காரன் பார்க்க (வின்.); see *mettu-k-kāraṉ*. 2. வருவாய்த்துறை அலுவலக உதவியாளர்; peon of the revenue department.

*[மெட்டு + சேவகன்]*

**Skt.** *śēvaka* > த. சேவகன்

**மெத்த** *metta*, வி.எ. (adv.) மிகவும்; much, abundantly, greatly. *"மெத்த நேயவனை" (தேவா. 758, 7).* 'பாவாணரை மெத்தச் சிறந்தவர் என்று பலரும் பாராட்டுகின்றனர்' (உ.வ.).

*[மெத்து → மெத்த. எ → (எத்து) → மெத்து = மெத்துதல் = மேலிடுதல், மிகுதியாதல்]*

**மெத்தப்படித்தவன்** *metta-p-paḍittavaṉ*, பெ.(n.) மிகுதியாகப் படித்தவர்; voracious reader. 'மெத்தப் படித்தவருக்குச் சோறு வெல்லம்' (பழ.). 'மறைமலையடிகளை மெத்தப் படித்தவர் என்று பாவாணர் பாராட்டுகிறார்' (உ.வ.).

*[மெத்த + படித்தவன்]*

**மெத்தபிரமி** *metta-pirami*, பெ.(n.) வாய்நீர்; saliva.

**மெத்தம்பாரை** *mettam-pārai*, பெ.(n.) மஞ்சள் கலந்த செம்மை நிறமுடையதும் 16 விரலம் வரை வளர்வதுமான கடல்மீன்வகை; sea-fish, yellowish red, attaining 16 in. in length, caesia pinjalo.


மெத்தம்பாரை

**மெத்தம்பிரியன்** *mettam-piriyaṉ*, பெ.(n.). சிவப்பும், மஞ்சளும் கலந்ததும் தூண்டி லிரையாகப் பயன்படுவதுமான கடல்மீன் வகை; sea-fish, crimson with orange tints, lutjanus annularis, used as bait.

**மெத்தமதி** *metta-madi*, பெ.(n.) மூளைச்சலம்; spinal fluid.

**மெத்தவிடத்தி** *metta-viḍatti*, பெ.(n.) மருதோன்றி; nail dye.

**மெத்தனம்** *mettaṉam*, பெ.(n.) 1. காலத் தாழ்ப்பு; delaying. 2. கவலையின்மை, பொருட்படுத்தாமை, பொறுப்பின்மை; slack,

lack of seriousness. 'ஏற்கனவே படித்ததுதான் என்று மெத்தனமாய் இருந்து விடாதே'. 'உன் மெத்தனத்தால் சிக்கல் பெரிதாகி விட்டது' (உ.வ.).

[மெது → மெத்து → மெத்தென = மெதுவாக. மெத்தெனவு → மெத்தனம் (வே.க.4,23,24)]

மெத்தனவு *mettaṉavu,* பெ.(n.) 1. மெத்தெனவு பார்க்க; see *metteṉavu.* 2.கவலையின்மை; light-heartedness. *"மெத்தனவிற்று யிலுங்கால்" (திருவாலவா. 27, 70).*

தெ. மெத்தென.

*[மெத்து → மெத்தெனவு]*

மெத்து[1]-தல் *mettu-,* [redacted] செ.கு.வி. (v.i.) 1. மிகுதல்; to abound, increase. *"மெத்து பேரொளியாய்" (சேதுபு. தோத். 66).* 2. நிரம்புதல்; to be filled. *"மேவிய வடுவு மெத்தல்" (திருவாலவா. 1, 5).*

ம. மெத்துக; க., தெ. மெத்து.

*[எ → எம்புதல் = எழுதல், குதித்தல். ஏ = மேலோங்குகை. ஏ → ஏத்துதல் = உயர்த்துதல், புகழ்தல், வழுத்துதல். (மு.தா.71) எ → (எத்து) → மெத்து, மெத்துதல் = மேலிடுதல், பள்ளத்தை நிரப்புதல், மிகுதல், வெல்லுதல்]*

மெத்து[2]-தல் *mettu-,* 15 செ.குன்றாவி. (v.t.) 1. நிரப்புதல்; to fill. *"மனக்குறை மெத்தவுள்ளுபு" (தணிக்கைப்பு. வீராட். 35).* 2.அப்புதல்; to pad, pack, to plaster. *"இறைச்சி மெத்தி" (சீவக. 1577).* 3. பூசுதல்; to smear, apply.

க., தெ., து., பட. மெத்து; கொலா. மெத்; நா., பர். மெத்.

*[எ → (எத்து) → மெத்து-,]*

மெத்துப்பூசு-தல் *mettu-p-pūšu-,* 5 செ. குன்றாவி. (v.t.) கனத்தப் பூச்சு மேன்மேலும் பூசுதல்; to give thick coating.

*[மெத்து + பூசு-.]*

மெத்துமெத்தென *mettu-metteṉa,* பெ.(n.) மெத்தெனல், 1 பார்க்க; see *metteṉal-1.* *'அண்மையில் வாங்கிய செருப்பு காலுக்கு மெத்துமெத்தென்றிருந்தது' (உ.வ.).*

*[மெத்து + மெத்து + என]*

மெத்துவாத்துவம் *mettu-vāttuvam,* பெ.(n.) *மெத்துவாத்துவாதனம்* பார்க்க; see *mettu-vāttu-vādaṉam.* *"மெத்து வாத்துவ மிடக்கால் வடக்கால்" (தத்துவம். 108).*

மெத்துவாத்துவாதனம் *mettu-vāttu-vādaṉam,* பெ.(n.) இரண்டுகாலும் நீட்டி ஒரு முழங்கையூன்றித் தலையையேந்தி ஒரு [redacted] முசிவற நீட்டிக் கிடக்கும் இருக்கை (ஆசனம்) வகை (தத்துவம். 108, உரை); (saiva.) a reclining posture with one arm supporting the head and the other arm stretched along the body, while both the legs are outstretched.

*[மெத்துவாத்துவம் + ஆதனம்]*

**Skt.** *āsana* > த. ஆதனம்.

மெத்துவாத்துவதனம்



**மெத்தென்று** *mettenru*, வி.எ. (adv.) மென்மையாக (மிருதுவாக); soft. *'தலையணை மெத்தென்று இருந்தது' (உ.வ.).*

*[மெது → மெத்து → மெத்தை = மெல்லணை (மு.தா.282). மெத்து + என்று]*

**மெத்தெனல்** *mettenal*, பெ.(n.) 1. மென்மைக் குறிப்பு; expr. signifying being smooth or soft. *"மெத்தென்ற பஞ்சசயனத்தின் மேலேறி" (திவ். திருப்பா.19).* 2. அமைதிக் குறிப்பு; being gentle. 3. காலத்தாழ்ச்சிக் குறிப்பு; being slow. *"மெத்தெனமாதைக் கொண்டு வருகுவில்" (திருவாலவா. 62, 7).* 4. மந்தக்குறிப்பு (ஈடு. 1, 10, 11); being dull.

க. மெத்தகெ, மெத்திகெ, மெத்தன்ன, மெத்தானெ, மெத்தனெ; தெ. மெத்த, மெத்தனி; து. மெத்தென, மெத்தனெ; நா. மெத்தெ.

*[மெல் → மெது → மெத்து + எனல். மென்மையாயிருத்தல்]*

**மெத்தெனவு** *mettenavu*, பெ.(n.) 1. அமைதி (சாந்த)க் குணம் (வின்.); mildness of disposition, even temper, gentleness. 2. வளைந்து கொடுக்கும் தன்மை; pliancy.

*[மெல் → மெது → மெத்து → மெத்தனவு]*

**மெத்தை**[1] *mettai*, பெ.(n.) 1. படுத்துக்கொள்ள பயன்படுவதும் பஞ்சு போன்ற மென்மையான பொருள்களை உள்ளே வைத்து தைக்கப் படுவதுமான படுக்கை; bed, cushion. *"ஒரு பாம்பை மெத்தையாக விரித்து" (திவ். பெரியாழ். 5, 1, 7). 'மெத்தை நேர்த்தி தலையணை பீற்றல்' (பழ.).* 2. பஞ்சணை; quilt stuffed with cotton. 3. துயிலிடம்; sleeping place. 4. சட்டை (பிங்.); coat, jacket. 5. வேட்டையாடும்போது தோளிலிடும் கருவி (சாதனம்); a hunting accessory carried on the shoulder. *"வலத்தோளில் இட்ட மெத்தையும்" (திவ். திருநெடுந். 21, வ்யா. பக். 170).*

ம., தெ. மெத்த; க., பட. மெத்தை.

*[முல் → மெல் → மென்மை. மெல் → மெலி → மெலிவு. மெல் → மெலு → மெது → மெதுபு → மெதுகு. மெது → மெத்து → மெத்தை = மெல்லணை (மு.தா. 281, 282)]*

*mett-a, Tel. (Tam. mettei), (Can. motte) a bed, a cotton bed, a cushion. The Dravidian word appears to be derived from mel soft. Comp., however, the Heb. mittāh, a bed, a cushion, a litter, from nātāh, to stretch out; Latin matta (CGDFL. 609).*

**மெத்தை**[2] *mettai*, பெ.(n.) மெத்தைவீடு (வின்.) பார்க்க; see *mettai-vīdu*. *'அப்பா மெத்தையில் இருக்கிறார், பார்!' (உ.வ.).*

மறுவ. மாடி.

ம. மெத்த; தெ. மித்தெ; து. மெத்திகெ; பட. மெத்தெ.

*[ஏ → மே → மேல். மே → மேது = மேல் மண்ணீடு. மீது → மெத்து = மேற்படு; மெத்து → மெத்தை = மேல்தளம். (சு.வி.57)]*

**மெத்தை**[3] *mettai*, பெ.(n.) பூடுவகை; a plant. (சங்.அக.).

**மெத்தைக்கட்டில்** *mettai-k-kattil*, பெ.(n.) மெதுவணை பரப்பிய கட்டில்; cot which spreaded with soft bed.

*[மெத்தை + கட்டில். கட்டு + இல்]*


மெத்தைகட்டில்

**மெத்தைச்சட்டை** *mettai-c-caṭṭai,* பெ.(n.) பஞ்சு உள் வைத்துத் தைத்த சட்டை; bush-shirt or bush jacket.

*[மெத்தை + சட்டை. சட்டம் → சட்டை = உடம்பு, உடம்பின் மீந்தோல், அதுபோன்ற மெய்ப்பை.]*

**மெத்தைப்பாய்** *mettai-p-pāy,* பெ.(n.) 1. கீழ்ப்பாயைக்காட்டிலும் நயமாகச் செய்த மேற்பாயையுடைய இரட்டைப்பாய் (இ.வ.); double mat, the upper one being finer than the lower . 2. மெத்தை மேல் விரிக்கும் பாய் (வின்.); mat for spreading on a mattress.

ம. மெத்துப்பாயி.

*[மெத்தை + பாய்]*

**மெத்தைப்பாரை** *mettai-p-pārai,* பெ.(n.) மெத்தம்பாரை (யாழ்ப்.) பார்க்க; see *mettam-pārai.*

*[மெத்தம்பாரை → மெத்தைப்பாரை]*

**மெத்தைவீடு** *mettai-vīḍu,* பெ.(n.) 1. மாடி வீடு; storied house. *'மெத்தை வீட்டுக்காரர் ஆயிற்றே, மிடுக்காகத்தான் பேசுவார்' (உ.வ.).* 2. மேனிலை மாடம்; upper storey. *'அப்பா மெத்தை வீட்டில் இருக்கிறாரா, பார்' (உ.வ.).* 3. மொட்டை மாடி வீடு; terraced house.

*[மெத்தை + வீடு]*

*[எஞ்சுதல் = மேற்படுதல், மிகுதல், மீதல். எஞ்சு → எச்சு → எச்சம் (மு.தா.73). எ → (எத்து) → மெத்து. மெத்துதல் = மேலிடுதல். மெத்து → மெத்தை = மேல்நிலை, மேல்தளம்]*


மெத்தைவீடு

**மெதி-த்தல்** *medi-,* 11 செ.குன்றாவி. (v.t.) 1. பாதத்தை ஒன்றன்மேல் வைத்தல், அடிவைத்தல்; to tread on. 2. காலால் துவைத்தல்; to tread down, trample on.

ம. மெதி, மெதிக்க, மெதியுக; க. மிதி; தெ. மெதுகு; து. மெதிபுனி, மெதுபுனி, மெத்புனி.

*[மிதி → மெதி-,]*

**மெது** *medu,* பெ.(n.) 1. மென்மை; softness. *'மெல்லப் பாயும் தண்ணீர் கல்லையும் குழியப் பாயும்' (பழ.).* 2. அமைதி (வின்.); gentleness. 3. தாமதம்; slowness. 4. மந்தம்; dullness. 5. கூர்மழுக்கம் (வின்.); bluntness, as of an edge.

து. மெது.

*[மெல் → மெது]*

த. மெது > **Skt.** *mṛdu*

ஒ.நோ. **E.** smooth; **OE.** smooth (once usu. smethe, whence dial smeeth).

நாகம் என்னும் தமிழ்ச்சொல் snake என்று செருமானிய மொழிகளில் சகரமுதன் மிகையோடு வழங்குவது போன்றே, மெது வென்னும் சொல்லும் வழங்குகிறதென்க.

தமிழ் சொற்களின் மகரவுறுப்பின்பின் ரகரத்தை இடைச் செருகுவது சமற்கிருதத்தில் சொல்லாக்க இயல்பே.

எ–டு: அமுது (சோறு) – அம்ருத. மடி–மரி–ம்ரு. மிதி–ம்ருத்.

சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் அகரமுதலியில் ம்ருது என்னும் சமற்கிருதச் சொல்லினின்று மெது என்னும் தென்சொல் திரிந்துள்ளதாகக் காட்டப்பட்டுள்ளது. (வே.க.4. 23).

**மெதுக்கிடு–தல்** *medukkiḍu-,* 20 செ.கு.வி. (v.i.) மெதுவாயிருத்தல்; to be soft.

து. மெதுஆபினி.

*[மெது → மெதுக்கு + இடு–, மெதுக்கு = மெதுவாயிருக்கும் வெந்த சோறு. 'இடு' – து.வி.]*

**மெதுக்கு** *medukku,* பெ.(n.) 1. சோறு; boiled rice. 2. குடமிளகாய் (பம்பளிமாசு) (வின்.); pomelo.

தெ. மெதுகு.

*[மெது → மெதுக்கு. அரிசி அவிந்தபின் மெதுவாயிருத்தல் காண்க. (வே.க.4,23)]*

**மெதுகரம்** *medukaram,* பெ.(n.) சன்ன அரம்; a kind of small, smoot file, used in fine workmanship.

*[மெது → மெதுகு + அரம். நுண்ணிய வேலைப் பாட்டில் மெதுவாக அராவும் சன்ன அரம்.]*

**மெதுகாணி** *medu-kāṇi,* பெ.(n.) மெருகு வளை பார்க்க (சங்.அக.); see *merugu-vaḷai.*

*[மெருகாணி → மெதுகாணி. மெருகிடும் ஒரு கருவி]*

**மெதுகு** *medugu,* பெ.(n.) மென்மை; fineness, thinness.

*[மெல் → மெது → மெதுகு]*

**மெதுபக்கோடா** *medu-pakkōḍā,* பெ.(n.) கடலை மாவை உருண்டைகளாக உருட்டிப் பொரித்துச் செய்யப்படும் ஒரு தின்பண்டம்; a kind of savoury made of chick-pea paste by cooking it soft in oil.

*[மெது + பக்கோடா]*

U. *pagōra* > த. பக்கோடா.

**மெதுமெது–த்தல்** *medu-medu-,* 11 செ.கு.வி. (v.i.) மென்மையாயிருத்தல் (வின்); to be soft to the touch as fruit.

*[மெது + மெது. அடுக்குத்தொடர்.]*

**மெதுமெதுப்பு** *medu-meduppu,* பெ.(n.) மென்மைத்தன்மை (வின்); softness; having a soft surface.

*[மெதுமெது → மெது மெதுப்பு. 'பு' தொ.பெ.ஈறு]*

**மெதுவடை** *medu-vaḍai,* பெ.(n.) மெதுவா யிருக்கும் உழுந்து வடை, பலகார வகை (மதி.க. ii.15); a kind of cake.

*[மெது + வடை. வள் → வடு → வடை = வட்டமாக இருக்கும் பணியாரம்]*

**மெந்தியம்** *mendiyam,* பெ.(n.) வெந்தயம் (இ.வ.); fenugreek.

ம. வெந்தயம்; க. மெந்தெ; தெ. மெந்தி; து., பட. மெத்தெ; கோத. மெந்தெ, மெந்தெய,

மெந்த்ய; துட. மேத்ய்.

*[மெல் → மெல்து → மெந்து → மெந்தயம் → மெந்தியம்]*

த. மெந்தியம் > **Skt.** *mēthikā.*

தமிழில் மெந்தியம், வெந்தயம் என ம,வ ஆகியவற்றில் தொடங்கும் இருவகைச் சொற்களும் வழக்கில் இருந்தாலும் வெந்தயக்கீரை, வெந்தயத்தோசை, வெந்தயக்கஞ்சி என்றாற் போன்று 'வ' வில் தொடங்கும் வழக்கு மிகுதி.

**மெந்திரி** *mendiri,* பெ.(n.) பரண்கட்டு (யாழ்ப்.); frame-work of a loft or ceiling.

ம. மெதியம்.

**மெய்¹-த்தல்** *mey-,* 11 செ.கு.வி. (v.i.) உண்மையாதல்; to be true. *"மெய்த்த திருவள்ளுவனார்" (சோமேச. முது. 41).*

*[மெய் ² → மெய்–,]*

**மெய்²** *mey,* பெ.(n.) 1. உண்மை; truth-reality, fact. *"மெய்யுணர்வில்லாதவர்க்கு"* (குறள், 354). *'மெய் சொல்லிக் கெட்டவனுமில்லை, பொய் சொல்லி வாழ்ந்தவனுமில்லை' (பழ.). 'அது மெய்யோ பொய்யோ யாருக்குத் தெரியும்' (உ.வ.).* 2. ஆதன்; soul. *"காட்டாசி நின்றானைக் கண்ணறியா மென்யென்ன" (சி.போ. 6,2,4).* 3. உணர்ச்சி; consciousness. *"மெய்ம்மறந்துபட்ட" (புறநா. 25).* 4. உடம்பு; body, used euphemistically. *"முயற்சி தன் மெய் வருத்தக் கூலி தரும்" (குறள், 619).* 5. மார்பு; breast. *"முழுமெய் முறீஇ" (சிலப். 5, 226).* 6. ஒற்றெழுத்து; consonant. *"பதினெண்ணெழுத்து மெய்யென மொழிப" (தொல். எழுத். 9).*

ம. மெய்; க. மய், மெய், மை; தெ. மெயி; பட., குட., கோத. மெய்; துட. மொய்.

*[மே = மேல். மே → மேவு. மேவுதல் = மேலிட்டுக் கொள்ளுதல், வேய்தல். மேல் → மேலா → மேலாவு = மேலதிகாரிகள். மேல் → மேன்மை. மேல் → மேன் → மேனி = உடம்பின் மேற்புறம், உடம்பு (மு.தா.73,74). மே → (மேய்) → மெய்]*

**மெய்க்கடுப்பு** *mey-k-kaḍuppu,* பெ.(n.) உடல்வலி, உடல் முழுவதும் தோன்றும் வலி; pain all over the body.

*[மெய் + கடுப்பு. கடு → கடுப்பு. 'பு' தொ.பெ.ஈறு]*

**மெய்க்கலவை** *mey-k-kalavai,* பெ.(n.) மெய்யிற் பூசுங் கலவைச் சாந்து; unguent for the body. *"தானாக்கிய மெய்க்கலவை போல்" (பரிபா. 7, 20).*

*[மெய் + கலவை. கல → கலவை]*

**மெய்க்கவசம்** *mey-k-kavašam,* பெ.(n.) உடலிலிடும் காப்புச் சட்டை (வின்.); coat of mail, armour.

*[மெய் + கவசம்]*

**மெய்க்காட்டு¹-தல்** *mey-k-kāṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) நேரில் வந்து தோற்றுதல் (அஷ்டாதச. பக். 62); to mark one's presence, to attend personally, to appear.

*[மெய் + காட்டு–. காண் (த.வி) – காட்டு (பி.வி.)]*

**மெய்க்காட்டு²** *mey-k-kāṭṭu,* பெ.(n.) 1. நேரில் வந்து தோற்றுகை; personal attendance. *"தேவர்களைச் சனியும், புதனும் மெய்க்காட்டுக் கொண்டு...... போருகிற இந்திரனும்" (ஈடு. 3, 6, 4).* 2. படை (சேனை) யைப் பார்வையிடுகை; parade,

review of an army. *"மெய்க்காட்டிட்ட படலம்" (திருவிளை.).* 3. மெய்க்காட்டு வேலை பார்க்க; see *mey-k-kāṭṭu-vēlai.*

*[மெய் + காட்டு]*

**மெய்க்காட்டுவேலை** *mey-k-kāṭṭu-vēlai,* பெ.(n.) குத்தகைக்கு விடாமல் நேரில் நடத்தும் வேலை; work done under muster roll, as different from work done under contract. *'இந்த வேலை மெய்க்காட்டில் நடக்கிறதா? அடங்கலில் நடக்கிறதா?' (உ.வ.).*

*[மெய்க்காட்டு + வேலை]*

**மெய்க்காடு** *mey-k-kāḍu,* பெ.(n.) மெய்க் காட்டுவேலை (இ.வ.) பார்க்க; see *mey-k-kāṭṭu-vēlai.*

*[மெய் + காடு]*

**மெய்க்காவல்[1]** *mey-k-kāval,* பெ.(n.) மெய்காவலன் பார்க்க; see *mey-kāvalaṉ.*

*[மெய் + காவல். கா → காவல்]*

**மெய்க்காவல்[2]** *mey-k-kāval,* பெ.(n.) கோயிற் காவலர்; temple-guard. *"நித்த வினோத வளநாட்டுப் பாம்புணிக் கூற்றத்துச் சிற்றம்பர் ஊரார் இடக்கடவ திருமெய்க்காப்பு ஒன்றும்" (தெ. கல். தொ. 22, கல். 57).*

மறுவ. மெய்க்காப்பு (தஞ்சைப் பெரியகோவில் கல்வெட்டு).

*[மெய் + காவல். கா → காவல். 'அல்' தொ.பெ.ஈறு.]*

**மெய்க்காவலர்** *mey-k-kāvalar,* பெ.(n.) மெய்க்காவல்[2] பார்க்க; see *mey-k-kāval[2].*

*[மெய் + காவலர். காவல் → காவலர். நாள்படி (நாள் நிவந்தம்) பெறுபவர், இறையிலி நிலம் (காணியாட்சி நிலம்) பெறுபவர் என மெய்க்காவலர்களுள் இரு பிரிவுண்டு]*

**மெய்க்கிளை** *mey-k-kiḷai,* பெ.(n.) பலாக் கொட்டையில் தோன்றும் முளை, கனி கொடுக்கும் பலா முளை(யாழ்ப்); genuine sprout in jack-trees.

*[மெய் + கிளை]*

**மெய்க்கீர்த்தி** *mey-k-kīrtti,* பெ.(n.) 1. புகழ் (கொ.வ.); fame. 2. அரசனது புகழ் வரலாறுகளைக் கூறி, அவன் தேவியுடன் வாழ்க என்று வாழ்த்தி, அவன் இயற் பெயருடன் ஆட்சியாண்டைக் கூறும் பாடல் வகை (பன்னிருபா. 311); a poem detailing the geneology and achievements of a king, with a prayer for his long life and his queen's and a mention of his proper name and regnal year. *'கரிகால் வளவன் ஈழத்தின் மேற் படையெடுத்துப் பன்னீராயிரம் குடிகளைச் சிறைப்பிடித்துக் கொண்டுவந்து, காவிரிக்குக் கரைகட்டுவித்ததாக அவன் மெய்க்கீர்த்தி கூறுகிறது'.*

*[மெய் + கீர்த்தி. சீர்த்தி → கீர்த்தி. சீர்த்தி அல்லது கீர்த்தி மிகு புகழ் (சொ.க.40)]*

மெய்க்கீர்த்தியின் இலக்கணம் பன்னிரு பாட்டியல், வச்சணந்திமாலை முதலிய பாட்டியல் நூல்களில் காணப்படுகிறது. இப்பகுதி அகவல்சீர் அமைதியுடன் சீர் நான்காய் இரண்டடித் தொடையில், அரசன் மெய்ப்புகழ் எல்லாஞ் சொல்லியும், முடிவில் அவன் வரலாறு சொல்லியும், அவன் மனைவியுடன் வாழ்க எனச் சொல்லியும், அவன் இயற்பெயர் முன்னர் சிறக்க யாண்டெனக் கூறியும் முடிவதாகும்.

சோழ மன்னர்கள் தங்கள் மெய்க்கீர்த்திகளில் தத்தம் வெற்றிகளையே முழுமையாகக் கூறுவர்.

பாண்டிய மன்னரோ, தங்கள் வெற்றிகளுடன் தங்கள் முன்னோர்கள் அருஞ் செயல்களையும் உடன் சேர்த்துக் கூறுவர். இவர்கள் வரலாற்றின் அடிப்படைச் சான்றுகள் இம்மெய்க் கீர்த்திகளேயாகும். *"திருமகளிருந்தென வீரசிம்மாசனத்து, உலகுடை யாளொடும் வீற்றுருந்தருளிய குலோத்துங்க சோழ தேவர்க்கு"* (முதற் குலோத்துங்கன் – மெய்க்கீர்த்தி) (கல்.அக.)

**மெய்க்கீர்த்திமாலை** *mey-k-kīrtti-mālai,* பெ.(n.) தொண்ணூற்றாறு சிற்றிலக்கியங்களுள் ஒன்றும் அரசனது புகழ் கூறுவதுமாகிய நூல் வகை (இலக். வி. 805); panegyric poem about the great deeds of a king, one of 96 pirabandam, q.v.

*[மெய்க்கீர்த்தி + மாலை]*

**மெய்க்குளிர்ச்சி** *mey-k-kuḷircci,* பெ.(n.) உடலினுள் ஏற்படும் குளிர்த்தன்மை; coolness of the body.

*[மெய் + குளிர்ச்சி. குளிர் → குளிர்ச்சி]*

**மெய்க்குற்றம்** *mey-k-kuṟṟam,* பெ.(n.) 1. கொட்டாவி, நெட்டை, குறுகுறுப்பு, கூன்கிடை, நட்டுவிழல் என்பனவாகிய உடலில் உண்டாகும் ஐவகைக் குற்றங்கள் (பிங்.); ill-mannered bodily action, of which there are five kinds viz. *koṭṭāvi, neṭṭai, kuṟu-kuṟuppu, kūṉ-kiḍai, naṭṭu-viḻal.* 2. நிலைநின்ற குற்றம்; permanent defect. *"என் செய்வினையா மெய்க்குழற நீக்கி" (திவ். இராமானுச. 26).*

*[மெய் + குற்றம்]*

**மெய்க்கூத்து** *mey-k-kūttu,* பெ.(n.) தேசி, வடுகு, சிங்களம் என்ற முப்பாற் பகுதியையுடைய அபிநயக் கூத்து (சிலப். 3, 12, உரை); (Natya) dancing with gesticulation, of three kinds viz. *teśi, vaḍugu, śingaḷam.*

*[மெய் + கூத்து]*

**மெய்க்கொட்டை** *mey-k-koṭṭai,* பெ.(n.) மெய்க்கிளை (யாழ். அக.) பார்க்க; [redacted] *mey-k-kiḷai.*

*[மெய் + கொட்டை]*

**மெய்க்கொள்(ளு)-தல்** *mey-k-koḷ(ḷu)-,* [redacted] செ.குன்றாவி. (v.t.) மெய்யாகக் கொள்ளுதல் (வின்.); to believe to be true.

*[மெய் + கொள்–,]*

**மெய்க்கோள்** *mey-k-kōḷ,* பெ.(n.) 1. மெய்யாகக் கொள்ளுகை; acceptance [redacted] truth. 2. முன்பணம் (வின்); earnest. *'மெய்க்கோளாய் வாங்கினேன்'.*

*[மெய் + கோள். கொள் → கோள்]*

**மெய்கடாமரம்** *mey-kaḍā-maram,* பெ.(n.) ஒரு வகை மரம்; a kind of Euphorbia.

**மெய்கண்டசந்தானம்** *meykaṇḍa-śandāṉam,* பெ.(n.) மெய்கண்ட தேவரது கொண்முடிபைப் பின்பற்றுவோர் (அபி.சிந்) ; followers of *Meykaṇḍa-dēvar* philosophical teachings.

*[மெய்கண்ட + சந்தானம்]*

Skt. *san-tāna* > த. சந்தானம்.

**மெய்கண்டசாத்திரம்** *meykaṇḍa-śāttiram,* பெ.(n.) திருவுந்தியார், திருக்களிற்றுப் படியார், சிவஞான சித்தியார், சிவஞான போதம், இருபாவிருபஃது, உண்மை விளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினா வெண்பா, போற்றிப்பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, உண்மை நெறி விளக்கம் அல்லது துகளறுபோதம், சங்கற்ப நிராகரணம்

என்ற சைவக் கொண்முடிபை (சித்தாந்தத்தை)க் கூறும் 14 நூல் (சாத்திரங்)கள்; canonical text of the *šaiva šiddhānda* philosophy, 14 in number, viz., *thiru-v-undiyār, tiru-k-kaḷiṟṟu-p-paḍiyār, šivañāṉa-šittiyār, šivañāṉa-pōdam, irubā-v-irubagdu, uṉmai-viḷakkam, šiva-p-pirakāšam, tiru-v-aruṭpayaṉ, vinā-veṇbā, pōṟṟi-p-paḵṟoḍai, koḍi-k-kavi, neñju-viḍu-tūdu, uṉmai-neṟi-viḷakkam or tugaḷ-aṟu-pōdam, šaṅgaṟpa-nirākaraṇam.*

*[மெய்கண்ட + சாத்திரம்]*

**Skt.** *šāstra* > த. சாத்திரம்.

**மெய்கண்டதேசிகன்** *meykaṇḍa-dēšigaṉ*, பெ.(n.) மெய்கண்ட தேவர் பார்க்க (சித். மரபுகண். 1.); see *meykaṇḍa-dēvar.*

*[மெய்கண்ட + தேசிகன்]*

**Skt.** *dēsika* > த. தேசிகன்.

**மெய்கண்டதேவர்** *meykaṇḍa-dēvar*, பெ.(n.) வழியாசிரிய (சந்தான குரவ)ருள் முதல்வரும் சிவஞான போத ஆசிரியராய் 13 ஆம் நூற்றாண்டில் விளங்கியவருமான சைவப் பெரியார்; a saiva *Ācārya*, author of *šivañāṉa-pōdam*, 13th c. the chief of *šandāṉa-kuravar.*

*[மெய்கண்ட + தேவர்]*

**மெய்கண்டநூல்** *meykaṇḍa-nūl*, பெ.(n.) மெய்கண்டசாத்திரம் பார்க்க (சித். மரபுகண். 1); see *meykaṇḍa-šāttiram.*

*[மெய்கண்ட + நூல்]*

**மெய்கண்டான்** *meykaṇḍāṉ*, பெ.(n.) மெய்கண்டதேவர் பார்க்க; see *meykaṇḍa-dēvar. "மெய்கண்டானூல்" (சி. சி. பாயி. 2).*

*[மெய் + கண்டான்]*

**மெய்கண்டு** *mey-kaṇḍu*, பெ.(n.) இத்தனை ஆள் என்பதை நேரிற் கண்டு செய்யும் கணக்கீடு; to reckon, compute, calculate, as of, at direct supervision. *"இந்நெல் தண்ட வந்தார்க்கு மெய்கண்டு ரீசாறு கொடுப்பதாகவும்" (தெ. கல். தொ. 8, கல். 5).*

*[மெய் + கண்டு. காண் → கண்டு]*

**மெய்காட்டு-தல்** *mey-kāṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) ஒருவன் தன் வலிமையைக் காட்டுதல் (வின்.); to exhibit one's strength.

*[மெய் +காட்டு-.]*

**மெய்காண்(ணு)-தல்** *mey-kāṇ(ṇu)-*, 16 செ.குன்றாவி. (v.t.) உண்மையாக ஆராய்ந்தறிதல்; to ascertain by investigating truly. *"நீ மெய்கண்ட தீமை" (புறநா. 10).*

*[மெய் + காண்-,]*

**மெய்காப்பாளன்** *mey-kāppāḷaṉ*, பெ.(n.) மெய்காவலன் (வின்.) பார்க்க ; see *mey-kāvalaṉ.*

*[மெய் + காப்பாளன். மெய் = உடம்பு. கா → காப்பு → காப்பாளன்]*

முன்பு அரசன் அருகிலிருந்து அவனுக்குப் பகைவரால் துன்பம் வரா வண்ணம் மெய்க் காப்பாளர் காத்து வந்தனர். இன்று உயர் பதவியில் இருப்போர், பிறரால் இடர் நேரலாம் என எதிர் பார்ப்போர் மெய்காப்பாளரை அமர்த்திக் கொள்கின்றனர்.

**மெய்காப்பு** *mey-kāppu*, பெ.(n.) மெய்காவலன் பார்க்க; see *mey-kāvalaṉ.*

து. மெய்காபு.

*[மெய் + காப்பு. கா → காப்பு. 'பு'. தொ.பெ.ஈறு]*

**மெய்காவல்** *mey-kāval,* பெ.(n.) 1. ஒருவனைப் பாதுகாக்கை; guarding a person. *"அப்பூதத்தை அவன் பொருட்டு மெய்காவலாக ஏவுதலின்" (சிலப். 6, 12, உரை).* 2. சிறை; custody of person, imprisonment.

ம. மெய்காவல்;

*[மெய் + காவல், கா → காவல். 'அல்' தொ.பெ.ஈறு.]*

**மெய்காவலன்** *mey-kāvalaṉ,* பெ.(n.) 1. பிறருக்குத் துன்பம் (ஏதம்) நேராமற் காப்பவன்; body-guard. 2. திருக்கோயில் காவல் செய்பவர்; temple-guard.

*[மெய் + காவலன். கா → காவல் → காவலன். 'அன்' ஆ.பா.ஈ.று]*

திருக்கோயில் மெய்காவலருக்கு நாள்படியோ (நிவந்தமோ), காணியாட்சி நிலமோ அளிக்கப் பெறுவது வழக்கு.

**மெய்காவற்காரன்** *mey-kāvaṟ-kāraṉ,* பெ.(n.) மெய்காவலன் (இ.வ.) பார்க்க; see *mey-kāvalaṉ.*

*[மெய் + காவல் + காரன்]*

**மெய்குழலாதி** *mey-kuḻalādi,* பெ.(n.) தாமரைக் கிழங்கு; root of lotus.

*[மெய் + குழலாதி]*

**மெய்குளிரல்** *mey-kuḷiral,* பெ.(n.) உடலின் மேல் பரவும் குளிர் காற்றின் தாக்கம்; the body becoming chill and cold.

*[மெய் + குளிரல்]*

**மெய்கூறல்** *mey-kūṟal,* பெ.(n.) மும்மொழியி லொன்றான உண்மை பேசுகை (யாழ். அக.); speaking the truth, one of *mu-m-moḻi.* (q.v).

*[மெய் + கூறல். கூறு → கூறல். 'அல்'. தொ.பெ.ஈ.று]*

**மெய்ச்சு–தல்** *meyccu-,* 5 செ.குன்றாவி. (v.t.) மெச்சு–தல் பார்க்க; see *meccu-,* *"படிமெத்த மெய்ச்சு பாவலனே" (திருப்போ. சந். சின்னகட். ஐங்கர. 6. ).*

*[மெச்சு → மெய்ச்சு–,]*

**மெய்ச்சூலை** *mey-c-cūlai,* பெ.(n.) உடம்பு குத்தல் நோய்; pricking pain in the body.

*[மெய் + சூலை]*

**மெய்சிலிர்–த்தல்** *mey-šilir-,* 4 செ.கு.வி. (v.i) வியப்பு, மகிழ்ச்சி முதலியவற்றால் கிளர்ச்சி அடைதல், சிலிர்ப்பு அடைதல்; to horripilate, due to scare, fear, disgust etc., be enthralled. *"மெய்சிலிராக் கை மோவா" (திவ். இயற். சிறிய. 6, 21). 'மயிலின் ஆட்டம் கண்டு மெய்சிலிர்த்துப் போனோம்' (உ.வ.).*

மறுவ. மயிர்க்கூச்செறிதல்.

து. மெயி அரிகட்டுனி.

*[மெய் + சிலிர்–,]*

**மெய்சுழி–த்தல்** *mey-šuḻi-,* 4 செ.கு.வி. (v.i.) பகடி (கேலி) செய்யும் பொருட்டு மெய்யுறுப்புகளை அசைத்தல்; to shake as of limbs in accords to ridicule.

*[மெய் + சுழி. சுள் → சுழி]*

**மெய்செய்–தல்** *mey-šey-,* 1 செ.கு.வி. (v.i.) 1. உண்மையுடன் நடத்தல்; to be true, to be faithful. *"கார்யத்தில் வந்தால் மெய்*

*செய்வாரைப் போல பொய் செய்து தலைகாட்டும்" (ஈடு. 10, 4, 5, பக். 141).* 2. செயலை நிறைவேற்றுதல்; to accomplish a thing. *'தொடங்கின செயலை மெய் செய்து வரவேண்டாமா?'*

*[மெய் + செய்-,]*

மெய்ஞ்ஞலம் *mey-ñ-ñalam,* பெ.(n.) உண்மை (உடல்) நலம்; health.

*[மெய் + நலம் - மெய்நலம் → மெய்ஞ்ஞலம்]*

மெய்ஞ்ஞானசாரம் *mey-ñ-ñāṉa-cāram,* பெ.(n.) ஓர் சொல்; a kind of text.

*[மெய்ஞ்ஞானம் + சாரம்]*

**Skt.** *jñāna* > த. ஞானம்.

மெய்ஞ்ஞானநிட்டை *mey-ñ-ñāṉa-niṭṭai.* பெ.(n.) உண்மையறிவு (மெய்ஞ்ஞான) நிலையில் நிற்கை (வின்.); firm stand in the path of spiritual wisdom.

*[மெய் + ஞானம் + நிட்டை]*

**Skt.** *nisṭha* > த. நிட்டை.

**Skt.** *jñāna* > த. ஞானம்.

மெய்ஞ்ஞானம் *mey-ñ-ñāṉam,* பெ.(n.) உண்மையறிவு; true knowledge, spiritual wisdom. *"இடம்பட மெய்ஞ்ஞானங் கற்பினும்" (நாலடி, 116).*

*[மெய் + ஞானம்]*

**Skt.** *jñāna* > த. ஞானம்.

மெய்ஞ்ஞானவிளக்கம் *mey-ñ-ñāṉa-viḷakkam,* பெ.(n.) பிரபோத சந்தரோதயமென்ற வடமொழி நாடகத்தைப் பின்பற்றித் தமிழ் மொழியில் மாதைத் திருவேங்கடநாதர் இயற்றிய வேதாந்த தொடர்பான பனுவல்; a metaphysical poem adapted by *Mādai-t-tiru-vēṅkaḍa-nādar* from a Sanskrit drama of the same name.

*[மெய்ஞ்ஞான + விளக்கம்]*

**Skt.** *jñāna* > த. ஞானம்.

மெய்ஞ்ஞானி *mey-ñ-ñāṉi,* பெ.(n.) மெய்ப் பொருள் திறவோன் (தத்துவஞானி) (பு. வெ. 10, 4, உரை); person of the true spiritual wisdom.

*[மெய் + ஞானி]*

**Skt.** *jñānin* > த. ஞானி.

மெய்டா *meyḍā,* பெ.(n.) பூமருது; flowering murdah.

மெய்த்தகை *mey-t-tagai,* பெ.(n.) 1. புனையாத இயற்கையழகு; natural unadorned beauty. *"மெய்த்தகை மாது" (திருக்கோ. 231, கொளு, உரை).* 2. உண்மைக் கற்பு (திருக்கோ. 231, கொளு, உரை); true chastity.

*[மெய் + தகை]*

மெய்த்திடு-தல் *mey-t-tiḍu-,* 20 செ.கு.வி. (v.i.) மெய்-த்தல் பார்க்க; see *mey-,* *"மெய்த்திடும் பலமுனக்கு" (சி.சி. 2,18).*

*[மெய் + மெய்த்து + இடு-.]*

மெய்த்திறம் *mey-t-tiṟam,* பெ.(n.) மத வுண்மையை உணர்த்தும் நூல் (மணிமே. 27, 106); treatise expounding religious truths.

*[மெய் + திறம்]*

மெய்த்தொடரி *mey-t-toḍari,* பெ.(n.) ஒரு மூலிகை; a plant.

**மெய்தாங்கி** *mey-tāṅgi,* பெ.(n.) இருக்கை (ஆசனம்); seat (M.E.R. 343 of 1923).

*[மெய் + தாங்கி. உடம்பைத் தாங்குவது]*

**மெய்தீண்டு-தல்** *mey-tīṇḍu-,* 5 செ. குன்றாவி. (v.t.) அன்போடு ஒருவன் உடலைத் தொடுதல்; to touch affectionately, [redacted] the body of a child to caress. *"மக்கண் மெய் தீண்ட லுடற்கின்பம்" (குறள், 65).* 2. ஒருத்தியின் கற்பைக் கெடுத்தல் (கொ.வ.); to outrage a woman's modesty.

*[மெய் + தீண்டு-.]*

**மெய்தீய்-தல்** *mey-tīy-,* 2 செ.குன்றாவி. (v.t.) நேர்மை தவறுதல்; to prove false. *"உத்தமநம்பி விகாதம் பண்ணி நியாயம் போலே மெய் தீய்ந்து" (கோயிலொ. 96).*

*[மெய் + தீய்-.]*

**மெய்தொட்டுப்பயிறல்** *mey-toṭṭu-p-payiṟal,* பெ.(n.) தலைவியின் மனக்குறிப்பை யறிதற் பொருட்டுத் தலைவன் அவளைத் தொட்டுப் பழகுவதைக் கூறும் அகத்துறை (தொ. பொ. 102); (agap.) theme describing [redacted] lover touching the person of his beloved to ascertain her inclinations.

*[மெய் + தொட்டு + பயிறல். தொடு → தொட்டு]*

**மெய்ந்நலம்** *mey-n-nalam,* பெ.(n.) 1. உடம்பினழகு; beauty of person. 2. வலிமை (சூடா.); strength.

*[மெய் + நலம்]*

**மெய்ந்நவை** *mey-n-navai,* பெ.(n.) மெய்க் குற்றம் (பிங்.) பார்க்க; see *mey-k-kuṟṟam.*

*[மெய் + நவை]*

**மெய்ந்நிலை** *mey-n-nilai,* பெ.(n.) 1. உண்மைத்தன்மை; reality. 2. சிறு விரலும் அணிவிரலும் நடுவிரலும் சுட்டுவிரலும் ஒன்றன்மீது ஒன்றுபடாமல் விட்டுநிமிரச் சுட்டு விரன்மேற் பெருவிரல் சேர வைப்பதாகிய இணையா வினைக்கை வகை (சிலப். 3, 18, உரை); (*Nāṭyā.*) a gesture with one hand in which the four fingers [redacted] spread out and the thumb is joined to the forefinger one of *iṇaiyā-viṉai-k-kai* (q.v.).

*[மெய் + நிலை]*

**மெய்ந்நிலைமயக்கம்** *mey-n-nilai-mayakkam,* பெ.(n.) மெய்ம்மயக்கம் (நன். 109, மயிலை) பார்க்க; [redacted] *mey-m-mayakkam.*

*[மெய்ந்நிலை + மயக்கம்]*

**மெய்ந்நீர்மை** *mey-n-nīrmai,* பெ.(n.) 1. உண்மை; truth. 2. வீடுபேறு (மோட்சம்); salvation, as the ultimate reality. *"மெய்ந்நீர்மை மேனிற்பவர்" (திரிகடு. 35).*

*[மெய் + நீர்மை]*

**மெய்ந்நூல்** *mey-n-nūl,* பெ.(n.) உண்மை யுணர்த்தும் நூல்; sacred writings, as teaching the truth. *"பொய்ந்நூலை மெய்ந்நூ லென்றென் றோதி" (திவ். பெரியதி. 2, 5, 2).*

*[மெய் + நூல்]*

**மெய்ந்நெறி** *mey-n-neṟi,* பெ.(n.) உண்மை வழி; the true path, the path of virtue. *"மெய்ந்நெறி பொய்ந்நெறி நீக்கிய வதிசயங் கண்டாமே" (திருவாச. 26, 10).*

*[மெய் + நெறி]*

**மெய்நடுக்கம்** *mey-naḍukkam,* பெ.(n.) உடம்பின் நடுக்கம்; tremble of the body.

*[மெய் + நடுக்கம்]*

மெய்நலம் *mey-nalam,* பெ.(n.) மெய்ந்நலம், [redacted] பார்க்க (வின்.); see *mey-n-nalam* 2.

*[மெய் + நலம்]*

மெய்நீர் *mey-nīr,* பெ.(n.) சிறுநீர்; urine.

*[மெய் + நீர். மெய் = உடம்பு]*

மெய்நூலன் *mey-nūlaṉ,* பெ.(n.) பாண்டவர்களுக்கும் குருவினர்க்கும் படைப்பயிற்சி யளித்த பார்ப்பன மறவர், துரோணாசாரியன்(வின்.); *Durōṇācāriyaṉ,* a Brahmin warrior who taught archery to *Pāṇḍavās* and Kurus.

*[மெய் + நூலன்]*

மெய்ப்படாம் *mey-p-paḍām,* பெ.(n.) உடலை மூடும் போர்வை (வின்.); mantle, cloak, [redacted] covering the body.

*[மெய் + படாம்]*

மெய்ப்படு-தல் *mey-p-paḍu-,* 17 செ. குன்றாவி. (v.t.) 1. உண்மையாதல்; to be true: to prove correct. *"மெய்ப்பட வுணர்வு தோன்று" (சீவக. 2726).* 2. தெய்வம், பேய் ஆகியன ஏறுதல் (ஆவேசிக்கப் பெறுதல்); to be possessed, as by a deity or a spirit. *"முருகுமெய்ப்பட்ட புலைத்தி போல" (புறநா. 259).*

*[மெய் + படு-]*

மெய்ப்பரிசம் *mey-p-parišam,* பெ.(n.) மெய்யுணர்வு[2] பார்க்க; see *mey-y-uṇarvu*[2].

*[மெய் + பரிசம்]*

**Skt.** *sparša* > த. பரிசம்.

மெய்ப்பாட்டிசைக்குறி *meyppāṭṭišai-k-kuṟi,* பெ.(n.) வியப்பைக் குறிக்கச் சொல்லின் பின் இடும் அடையாளம்; mark of exclamation (mod.).

*[மெய்ப்பாடு + இசை + குறி]*

மெய்ப்பாட்டியற்கை *mey-p-pāṭṭiyaṟkai,* பெ. (n.) சமண நூல் (சைனபரமாகமம்); the Jain scriptures. *"கப்பத் திந்திரன் காட்டிய நூலின் மெய்ப்பாட்டியற்கையின் விளங்கக் காணாய்" (சிலப். 11, 154).*

*[மெய் + பாட்டியற்கை]*

மெய்ப்பாடு *mey-p-pāḍu,* பெ.(n.) 1. நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என எண் வகைப்பட்டதும் புறத்தார்க்குப் புலப்படு வதோராற்றான் வெளிப்படுவதுமான உள்ள நிகழ்ச்சிகள் (தொல். பொ. 251) (பாவம்); manifest physical expression of the emotions of eight kinds,viz., *nagai, aḻugai, iḻivaral, maruṭkai, accam, perumidam, veguḷi, uvagai.* 2. புகழ் (பிங்); praise. 3. இயற்கைக் குணம்; nature, innate diposition. *"இடைச்சாதியின் மெய்ப்பாட்டாலே அடங்கக் கறக்க வல்ல சாமர்த்தியம்" (திவ். திருப்பா. 11, வ்யா).*

*[மெய் + பாடு. உள்ளத்து உணர்வுகள் உடல் வழியாக வெளிப்படுகை. படு → பாடு]*

மெய்ப்பி-த்தல் *meyppi-,* 4 செ.குன்றாவி. (v.t.) எண்பித்தல், நிறுவுதல் (நிருபித்தல்); to prove, substantiate. *'அவன் மீது கூறிய குற்றத்தை உன்னால் மெய்ப்பிக்க முடியுமா?' (உ.வ.).*

*[மெய் → மெய்ப்பி-]*

மெய்ப்பிரம் *mey-p-piram,* பெ.(n.) முகில் (பிங்); cloud.

மெய்ப்பு¹ *meyppu,* பெ.(n.) 1. எண்பிப்பு (நிரூபணம்); verification, proof. 2. புகழ்ச்சி (சூடா.); eulogy. 3. திருத்தத்துக்கான அச்சுப்படி; printing proof. *'இன்று பத்து பக்கம் மெய்ப்பு வந்துள்ளது' (உ.வ.).*

*[மெய் → மெய்ப்பு, 'பு' தொ.பெ.ஈறு]*

மெய்ப்பு² *meyppu,* பெ.(n.) பகட்டாரவாரம் (ஆடம்பரம்); ostentation. *"ஆணவ மெய்ப்பாகச் செய்யாதே" (குருகூர்ப். 89).*

*[மீ → (மீய்) → மெய் = உடம்பு. மெய் → மெய்ப்பு = உடம்பு வழிக் காட்டும் பகட்டாரவாரம்]*

மெய்ப்புப்பணி *meyppu-p-paṇi,* பெ.(n.) அச்சுப் படிகளை ஒப்பிட்டுப் பார்க்கும் பணி; proof reading work. *'அவன் மெய்ப்புப் பணியில் ஈடுபட்டுள்ளான்' (உ.வ.).*

*[மெய் → மெய்ப்பு]*

மெய்ப்புப்பார்-த்தல் *meyppu-p-pār-,* 4 செ.குன்றாவி. (v.t.) அச்சுப்படி திருத்தங் களை மேற்கொள்ளுதல்; to read proof (printing). *'ஒருமுறைக்கு இருமுறை கவனமாக மெய்ப்புப் பார்க்க வேண்டும்' (உ.வ.).*

*[மெய்ப்பு + பார்-,]*

மெய்ப்பூச்சு *mey-p-pūccu,* பெ.(n.) உடலின் மேற் பூசும் கலவைச்சாந்து முதலியன; fragrant paste, oil, etc. for smearing on the body. *"மெய்ப்பூச்சு நெய்தருங் கொழுந் தூப தீபங்கள்" (பெரிய. திருக்குறிப்புத். 60).*

*[மெய் + பூச்சு. பூசு → பூச்சு]*

மெய்ப்பூட்டுத்தீட்டு *mey-p-pūṭṭu-t-tīṭṭu,* பெ.(n.) மரபு வழி உடன்படிக்கைச் சீட்டு (நபர் சாட்டுதல் சீட்டு); heritary agreement deed. *"இந்நால்வரோம் மெய்ப்பூட்டுத் தீட்டுக் குடுத்த பரிசாவது சந்திராதித்த வரையும் நாங்களும் எங்கள் வங்கடித்தாரும் அளக்கக் கடவோ மானோம்" (தெ. கல். தொ. 5, கல்.480).*

*[மெய்ப்பூட்டு + தீட்டு. சீட்டு → தீட்டு]*

மெய்ப்பை *mey-p-pai,* பெ.(n.) சட்டை; coat,clock. *"மெய்ப்பை புக்க வெருவருந் தோற்றத்து" (முல்லைப். 60).*

*[மெய் + பை. மெய் = உடல். மெய்யை (உடலை) உட்புகுத்தும் பை போன்றது]*

மெய்ப்பொருணாயனார் *mey-p-poruṇāyaṉār,* பெ.(n.) நாயன்மார் அறுபத்து மூவருள் ஒருவர் (பெரியபு.); a canonized Saiva saint, one of 63.

*[மெய்ப்பொருள் + நாயனார்]*

மெய்ப்பொருள் *mey-p-poruḷ,* பெ.(n.) 1. உண்மை; truth, essence, reality. *"மெய்ப்பொருள் காண்பதறிவு" (குறள், 385).* 2. உண்மையான செல்வம்; true wealth. *"கைப்பொருடன்னின் மெய்ப்பொருள் கல்வி" (கொன்றைவே. 3).* 3. உண்மையாக உள்ளதான தெய்வம், கடவுள்; god, as reality. *"வேதமு முடிவு காண மெய்ப் பொருள்" (கம்பரா. வீபீடணனடைக்கல. 113).* 4. மெய்ப்பொருணாயனார் பார்க்க (தேவா. 736, 1); see *mey-p-poruṇāyaṉār.* 5. உண்மையான பொருள்; the true meaning. *"மெய்ப்பொருள் காண்பதறிவு" (குறள், 385).*

*[மெய் + பொருள்]*

மெய்ப்பொறி¹ *mey-p-poṟi,* பெ.(n.) 1. உடல் அழகு (சரீர லக்ஷணம்); mark or feature of the body. *"விண்ணகத் திளையானன்ன மெய்ப்பொறி" (சீவக. 1949).* 2. உடல் (வின்.); body.

*[மெய் + பொறி]*

**மெய்ப்பொறி[2]** *mey-p-poṟi,* பெ.(n.) ஐம்புலன்களின் ஒன்றான தொடுவுணர்வு; organ of touch - skin.

*[மெய் + பொறி]*

**மெய்படுபருவம்** *mey-paḍu-paruvam,* பெ.(n.) பாளை, பாலன், காளை, இளையோன், முதியோன் என்ற ஐவகை ஆண்மக்கட்பருவம் (பிங்); stage in the life of man, five in number, viz., *pāḷai, pālaṉ, kāḷai, iḷaiyōṉ, mudiyōṉ.*

*[மெய் + படு + பருவம்]*

**மெய்பிறிதாதல்** *mey-piṟidādal,* பெ.(n.) ஒரு மெய் இன்னொரு மெய்யாக மாறுதல்; (Gram.) change of a consonant into another one.

*[மெய் + பிறிது + ஆதல்]*

புணர்ச்சி (சந்தி)யிலக்கணத்தை விளக்கும் பொழுது சொற்கள் எய்தும் மாற்றத்தைப் பற்றிப் பேசுகிறது தொல்காப்பியம். சொற்கள் எய்தும் மாற்றம் மெய் பிறிதாதல், மிகுதல், கெடுதல் என மூவகைப்படும். சொற்கள் தம்முள் சேரும்பொழுது ஒரு மெய் இன்னொரு மெய்யாகத் திரிவது மெய் பிறிதாதல். மரம் + கள் → மரங்கள் என்றவிடத்து மகரம் ஙகரமாக மாறியிருப்பது மெய் பிறிதாதல் வகையைச் சார்ந்தது.

**மெய்புகுகருவி** *mey-pugu-karuvi,* பெ.(n.) கவசம்; coat of armour. *"புலியினது தோலாற் செய்யப்பட்ட மெய்புகு கருவி" (புறநா. 13, உரை).*

*[மெய் + புகு + கருவி]*

**மெய்புதையரணம்** *mey-pudai-y-araṇam,* பெ.(n.) மெய்புகுகருவி பார்க்க; see *meypugu-karuvi. "பஃறோன் மெய்புதை யரண மெண்ணாது" (பதிற்றுப். 52, 6).*

*[மெய் + புதை + அரணம். அரண் → அரணம்]*

**மெய்பெறு-தல்** *mey-peṟu-,* 20 செ.கு.வி. (v.i.) எழுத்துக்கள் திருந்திய ஒலிவடிவு பெறுதல்; to assume definite sound-values as letter. *"மெய்பெறா மழலைச் சொல்" (கலித். 81, 2).*

*[மெய் + பெறு-,]*

**மெய்ம்மயக்கம்[1]** *mey-m-mayakkam,* பெ.(n.) சொற்களில் ஒற்றெழுத்து இயைந்து வருகை (சொல். எழுத். 22, இளம்பூர.); (Gram.) agreement between successive consonants, in words.

*[மெய் + மயக்கம். மெய் = மெய்யெழுத்து. [redacted] → மயக்கம்]*

தொல்காப்பியரின் சொல்லாட்சிப்படி மெய்ம் மயக்கம் என்பது வேறுபட்ட இரண்டு மெய்கள் சேர்வது. செல்க என்பதில் லகரமும் ககரமும் மயங்கி வந்துள்ளன. இதனைப் பிற்கால இலக்கணப் புலவர்கள் வேற்று நிலை மெய்ம்மயக்கம் என அழைத்துள்ளனர். பத்து, பற்று என்றாற்போன்று (தகரமும் றகரமும் இரட்டித்து வருவதை) ஒரே எழுத்து இரட்டித்து வருவதை உடனிலை மெய்ம் மயக்கம் எனக் குறித்துள்ளனர். உடனிலை மெய்ம்மயக்கம் என்னும் தொடர் தொல்காப்பியரைப் பொறுத்தவரையில் 'பொருத்த மற்றது. மயங்குதல் = கலத்தல். மெய்ம்மயக்கம் = இருவேறுபட்ட மெய்கள் கலத்தல். ஒரேயெழுத்து இருமுறை தோன்றி யிணைவதைத் தொல்காப்பியர் உடனிலை என்றே குறிப்பிடுவார்.

**மெய்ம்மயக்கம்[2]** *mey-m-mayakkam,* பெ.(n.) உடலுடன் மனமும் தன்னிலை மறத்தல்; unconsciousness.

*[மெய் + மயக்கம்]*

**மெய்ம்மயக்கு** *mey-m-mayakku,* பெ.(n.) மெய்ம்மயக்கம்¹ பார்க்க (நன். 109); see *mey-m-mayakkam¹*

*[மெய் + மயக்கு. மய → மயக்கு]*

**மெய்ம்மலம்** *mey-m-malam,* பெ.(n.) மெய்மாசு, 1 (பிங்.) பார்க்க; see *mey-māšu1.*

*[மெய் + மலம்]*

**மெய்ம்மற-த்தல்** *mey-m-mara-,* 3 செ.கு.வி. (v.i.) 1. அறிவு நீங்குதல்; to swoon, lose consciousness. *"மெய்ம் மறந்து பட்ட வரையாப் பூசல்" (புறநா. 25).* 2. (ஒன்றில் ஈடுபட்டு) எங்கு இருக்கிறோம் என்ன செய்கிறோம் என்னும் உணர்வை இழத்தல், தன்னை மறத்தல்; to forget or lose oneself. *'கடவுளைக் கண்டு (தரிசித்து) மெய்ம்மறந்து நின்றான்'. 'இசையை மெய்ம்மறந்து கேட்டுக் கொண்டிருந்தேன் அதனால் நீ வந்தது தெரியவில்லை'.* 3. சோர்வடைதல்; to weary. 4. மயக்கமடைதல்; faint. 5. கள் வெறியேறுதல் (போதையாதல்); to be intoxicated.

ம. மெய்மறக்க.

*[மெய் + மற-, மெய் = உடல். மெய்ம்மறத்தல் = உடலுணர்களை (தன்னுணர்வுகளை) மறத்தல்]*

**மெய்ம்மறதி** *mey-m-maradi,* பெ.(n.) 1. அறிவு நீங்குகை (வின்.); swooning, losing consciousness. 2. தன்னிலை மறக்கை; self-forgetfulness. 3. சின வெறி; fit of anger. 4. வெறி; fit of insanity.

*[மெய் + மற. மற → மறதி]*

மண்ணீரலிலிருந்து அளவிற்குக் குறைந்து ஊதை நீரானது இரைப்பையில் விழுவதனால் உடம்பிற்கு ஏற்படும் ஒரு நிலைமை. (சா.அக.).

**மெய்ம்மறை** *meymmarai,* பெ.(n.) மெய்புகு கருவி பார்க்க; see *mey-pugu-karuvi. "சான்றோர் மெய்ம்மறை" (பதிற்றுப். 14,12).*

*[மெய் + மறை]*

**மெய்ம்மை** *meymmai,* பெ.(n.) 1. மெய்யானது, உண்மையானது, உண்மை; truth, reality. *"மெய்ம்மையும் பொய்ம்மையு மாயினார்க்கு" (திருவாச. 9, 20).* 2. பட்டாங் கான இயல்பு (தொல். எழுத். 156); natural state. 3. உளதாயிருக்கும் தன்மை (சத்து); existence. *"மெய்ம்மையொடு சித்தாகும்" (வேதா. சூ. 31).* 4. பொருண்மை; signification. *"மெய்ம்மையானு மவ் விரண்டாகும்" (தொல். சொல். 427).*

*[மெய் → மெய்ம்மை. உடலால் பொய்யின்றிச் செயல்படுதலே மெய்ம்மை]*

உண்மை என்பது சொல்லை மட்டும் பற்றிய அறமன்று. உள்ளும் புறம்பும் ஒத்திருப்பதே உண்மை. உள்ளம் வாய் மெய் ஆகிய முக்கரணங்களும், ஒருங்கே உண்மையில் ஒத்திருத்தல் வேண்டும். இவ்வியல்பை யறிந்து, உண்மை வாய்மை, மெய்ம்மை என உண்மைக்கு முப்பெயரிட்டனர் முன்னோர். உள்ளத்தைப் பற்றியது உண்மை; வாயைப் பற்றியது வாய்மை; மெய்யைப் பற்றியது மெய்ம்மை.

உண்மை சொல்லை மட்டும் பற்றிய தென்னும் தப்புக் கொள்ளையாலேயே, பொல்லாதவர் பொய்யாணையிடுவதும் பிறர் அதை நம்பி ஒப்புக்கொள்வதும் நேர்கின்றன.

உளத்தொடு பொருந்தாது சொல்லொடும் மெய்யொடும் மட்டும் பொருந்துவது ஒருபோதும் உண்மையாகாது. உளத்தொடு பொருந்திய உண்மையுரைப்பவர் திருந்திய வொழுக்கமுடைய வராயிருத்தல் திண்ணம் என்னும் கருத்தே.

*பொய்யாமை பொய்யாமை யாற்றின் அறம்பிற*
*செய்யாமை செய்யாமை நன்று (குறள், 297)*

என்ற குறளின் அடிப்படை என்க.

உண்மை வாய்மை மெய்ம்மை என்னும் சொற்களின் முக்கரணத் தொடர்பு, தன்னேர்ச்சியான (accidental) போலியே.

உள் → உண்மை = உள்ளதாயிருக்கும் தன்மை. உள்ளத்தொடு பொருந்தியது என்னும் பொருள் மொழிநூற்கு ஒவ்வாது. வாய்மை = வாய்ப்பது, நிறை வேறுவது. மெய்ம்மை = உடம்புபோல் உண்மை யானது. (substance, sustantiality) (வே.க. 42, 43).

**மெய்ம்மையா–தல்** *meymmai-yā-*, 6 செ.கு.வி. (v.i) 1. உண்மையாதல்; to prove true. 2. இயல்பாதல்; to remain without change. *"மெய்ம்மையாதலு முறழத் தோன்றலும்" (தொல். எழுத். 156).*

*[மெய்ம்மை + ஆ–,]*

**மெய்ம்மொழி** *mey-m-moḻi*, பெ.(n.) 1. உண்மையான வாக்கு; true word; true teaching. 2. மறை (வேதம்); the vedas. 3. முனிவரின் சாவச் சொல்; malediction or benediction, uttered by sages.

*[மெய் + மொழி]*

**மெய்மட்டு** *mey-maṭṭu*, பெ.(n.) மெய்மட்டுக்காணி பார்க்க; see *mey-maṭṭu-k-kāṇi.* (S.I.I.V. 233).

*[மெய் + மட்டு]*

**மெய்மட்டுக்காணி** *meymaṭṭu-k-kāṇi*, பெ.(n.) நட்டுவத்துக்கு மதங்கம் (மிருதங்கம்) அடிக்கும் உரிமை; right of beating the small drum, as an accompaniment to dancing. (S.I.I.V, 232).

*[மெய்மட்டு + காணி]*

**மெய்மயக்கம்** *mey-mayakkam*, பெ.(n.) உடல் மயக்கம், உடல் உணர்வற்ற நிலை; giddiness.

*[மெய் + மயக்கம்]*

**மெய்மலம்** *mey-malam*, பெ.(n.) 1. நரகல்; filth. 2. உடம்பின் அழுக்கு; dirt.

*[மெய் + மலம்]*

**மெய்மறதி** *mey-maṟadi*, பெ.(n.) மெய்ம்மறதி (யாழ்.அக.) பார்க்க; see *mey-m-maṟadi.*

*[மெய் + மறதி]*

**மெய்மாசு** *mey-māśu*, பெ.(n.) 1. உடலழுக்கு (பிங்); dirt in the body. 2. கழிவுப் பொருள் (பவ்வீ) (வின்.); excreta.

*[மெய் + மாசு]*

**மெய்முடங்கல்** *mey-muḍaṅgal*, பெ.(n.) உடம்பு ஒடுங்குதல், உடல் உறுப்புகள் வலுவின்றி சோர்ந்தொடுங்கல்; emaciation.

*[மெய் + முடங்கல்]*

**மெய்முதல்** *mey-mudal*, பெ.(n.) மொழிக்கு முதலாக வரும் மெய்கள்; word initial consonants.

*[மெய் + முதல். க, ச, த, ந, ப, ம, வ, ய, ஞ ஆகிய ஒன்பது மெய்கள் மொழி முதலில் வரும்]*

**மெய்மேலாதனம்** *mey-mēl-ādaṉam*, பெ.(n.) இரண்டுகையையுமூன்றி உடலை உயர்த்தி நிறுத்தும் இருக்கை (ஆசன) வகை (தத்துவப். 109, உரை); (*Yōga.*) a posture in which the body is raised and supported by both the hands placed on

the ground.

*[மெய் + மேல் + ஆதனம்]*

**Skt.** *āsana* > த. ஆதனம்.


மெய்மேலாதனம்

**மெய்மேனிற்றல்** *mey-mēṉiṟṟal,* பெ.(n.) மெய்மேலாதனம் பார்க்க; see *mey-mēlādaṉam.* *"வீரவாதனமாமை மெய் மேனிற்றல்" (தத்துவப். 109).*

*[மெய் + மேல் + நிற்றல்]*

**மெய்மை** *meymai,* பெ.(n.) நினைவு; thought.

*[மெய் → மெய்மை]*

**மெய்யர்** *meyyar,* பெ.(n.) பார்ப்பார்; Brahmin. 2. துறவியார்; renunciation of the pleasures of life, asceticism. 3. மெய் சொல்வோர்; one who speaks truth.

*[மெய் → மெய்யர்]*

**மெய்யழகு** *meyyaḻagu,* பெ.(n.) இயல்பான அழகு; personal, true beauty.

ம. மெய்யழகு.

*[மெய் + அழகு]*

**மெய்யழற்சி** *mey-y-aḻaṟci,* பெ.(n) தோலின் அழுகும் தன்மை; inflammation of the skin.

*[மெய் + அழற்சி]*

**மெய்யறிவு** *mey-y-aṟivu,* பெ.(n.) உண்மையான அறிவு; true knowledge.

*[மெய் + அறிவு. உலகின் உண்மை நிலை அறிதல்]*

**மெய்யவத்தை** *meyya-vattai,* பெ.(n) மெய்க்குற்றம் பார்க்க; see *mey-k-kuṟṟam.*

*[மெய் + அவத்தை]*

**Skt.** *avasthā* > த. அவத்தை.

**மெய்யவற்குக்காட்டல்வினா** *meyyavaṟku-k-kāṭṭal-viṉā,* பெ.(n.) பிறரையறிவுறுத் தற்குக் கேட்கும் வினா வகை (தொல். சொல். 13, சேனா.); question put to a person with a view to instructing him.

*[மெய் + அவன் + காட்டல் + வினா. காட்டு → காட்டல். 'அல்' தொ.பெ.ஈறு]*

**மெய்யன்** *meyyaṉ,* பெ.(n.) 1. உண்மை யுணர்ந்தவன்; one who has realised the truth. 2. உண்மையானவன்; true, honest, trust worthy, faithful person. *"அவளுக்கும் மெய்யனல்லை" (திவ். பெருமாள். 6, 3).* 3. முனிவன் (பிங்); sage. 4. அந்தணன் (சூடா.); Brahmin. 5. உண்மை புகலுவோன் (யாழ்.அக); one who speaks the truth. 6. கடவுள் (யாழ். அக); god, as the embodiment of truth. 7. மகன் (யாழ். அக); son.

*[மெய் → மெய்யன். 'அன்' ஆ.பா.ஈறு]*

**மெய்யனத்தல்** *mey-y-aṉattal,* பெ.(n.) உடம்பின் கொதிப்பு, உடற்சூடு அதிகரித்தல்; rise of heat in the body.

*[மெய் + அனத்தல்]*

**மெய்யனல்** *mey-y-aṉal,* பெ.(n.) உடம்பின் சூடு, உடல் வெப்பம்; heat of the body.

*[மெய் + அனல்]*

**மெய்யாப்பு** *meyyāppu,* பெ.(n.) குப்பாயம், சட்டை (சங். அக.); coat.

*[மெய் + யாப்பு. யா → யாப்பு = உடம்பின் மேல் கட்டப்படுவது]*

**மெய்யாலரிசிநாடுரி** *mey-y-ālariši-nāḍuri,* பெ.(n.) ஆள் ஒன்றுக்குரிய சோற்றரிசி நாழியும் உரியும் கொண்ட அளவு; rice of a *'nāḻi'* and *'uri'* measure. *"ஆயிரவர்க்கும் பத்தெட்டுக் குடுத்தல், மெய்யாலரிசி நாடுரியாக நிடதம்ம இருநூற்றறுபத்திரு காடி" (தெ. கல். தொ. 8, கல். 529).*

*[மெய்யால் + அரிசி + நாழி + உரி]*

**மெய்யாள்சாரி** *mey-y-āḷ-šāri,* பெ.(n.) ஊன்; flesh.

**மெய்யிலழல்** *mey-y-ilaḻal,* பெ.(n.) உடம்பின் வெப்பம்; temperature-heat of the body.

*[மெய்யில் + அழல்]*

**மெய்யிளைப்பு** *mey-y-iḷaippu,* பெ.(n.) உடலிளைப்பு; emaciation.

*[மெய் + இளைப்பு. இளை → இளைப்பு. 'பு' தொ.பெ.ஈறு.]*

**மெய்யிறுகல்** *mey-y-iṟugal,* பெ.(n.) உடல் வன்மை பெறல்; body becoming hard and strong.

*[மெய் + இறுகல். இறு → இறுகு → இறுகல்]*

**மெய்யீறு** *mey-y-īṟu,* பெ.(n.) மெய்யெழுத்தை இறுதியினுடைய சொல்; word ending in a consonant. *"மெய்யீறெல்லாம்" (தொல். எழுத். 105, இளம்.).*

*[மெய் + ஈறு. ஞண நமன யரலவழள ஆகிய பதினொரு மெய்கள் மொழியிறுதியில் வரும்.]*

**மெய்யுணர்தல்** *mey-y-uṇardal,* பெ.(n.) மெய்யுணர்வு (குறள், அதி. 36) பார்க்க; see *mey-y-uṇarvu.*

*[மெய் + உணர்தல். உணர் → உணர்தல். 'தல்' தொ.பெ.ஈறு]*

**மெய்யுணர்வு[1]** *mey-y-uṇarvu,* பெ.(n.) உண்மையறிவு (தத்துவ ஞானம்) (குறள், 352, உரை); Knowledge of reality.

*[மெய் + உணர்வு]*

*[மெய் + உணர்வு. உணர் → உணர்வு. 'வு' தொ.பெ.ஈறு]*

**மெய்யுணர்வு[2]** *meyyuṇarvu,* பெ.(n.) ஊன்றல், கட்டல், குத்தல், தடவல், தட்டல், தீண்டல், பற்றல், வெட்டல், என்ற எண் வகைப்பட்ட உடலுணர்ச்சிக் காரணங்கள் (பிங்.); canes of sensation in the body of eight kinds, viz. *vūṉṟal, kaṭṭal, kuttal, taḍaval, taṭṭal, tīṇḍal, paṟṟal, veṭṭal.*

*[மெய் + உணர்வு]*

**மெய்யுதகம்** *mey-y-udagam,* பெ.(n.) மெய் வழிநீர் (மூ.அ) பார்க்க; see *mey-vaḻi-nīr.*

*[மெய் + உதகம்]*

**Skt.** udaka > த. உதகம்.

**மெய்யுரை[1]-த்தல்** *mey-y-urai-,* 4 செ.கு.வி. (v.i.) உரை சொல்லல்; to write faithful commentary, as true to the text.

*[மெய் + உரை]*

**மெய்யுரை[2]** *mey-y-urai,* பெ.(n.) 1. நூற்குப் பொருத்தமான உரை (இறை, 1, உரை, பக். 8); faithful commentary, as true to the text.

2. உண்மையான மொழி; true word. *"மெய்யுரை பையவிள்ம்பினான்" (கம்பரா. பிணிவீ. 111).*

*[மெய் + உரை]*

**மெய்யுவமம்** *mey-y-uvamam,* பெ.(n.) வடிவு பற்றி வரும் உவமை (தொல். பொ. 276, 20); comparison based on form on shape.

*[மெய் + உவமம்]*

**மெய்யுளைச்சல்** *mey-y-uḷaiccal,* பெ.(n) உடம்பின் வலி; pain in the body.

*[மெய் + உளைச்சல்]*

**மெய்யுறுபுணர்ச்சி** *mey-y-uṟu-puṇarcci,* பெ.(n.) உடலால் கூடுங் கூட்டம் (தொல். பொ. 145, உரை); (Akap.) copulation, embrace.

மறுவ. உடலுறப் புணர்ச்சி.

*[மெய்யுறு + புணர்ச்சி. உள்ளப் புணர்ச்சிக்கு எதிரானது]*

**மெய்யூர்** *meyyūr,* பெ.(n) செங்கல்பட்டு மாவட்டத்திலுள்ள ஒரு ஊர்; a village in *Cengalpaṭṭu* dt.

*[மெய் + ஊர்]*

மெய்யூர் என்னும் பெயரில் மதுராந்தகம், திருவள்ளூர், திருபெரும்புதூர் ஆகிய வட்டங்களில் சில ஊர்கள் இருக்கின்றன.

**மெய்யெரிச்சல்** *mey-y-ericcal,* பெ.(n) உடல் தணல்; burning sensation of the body. *'மெய்யெரிச்சல் மிகுதியாக உள்ளது' (உ.வ.).*

*[மெய் + எரிச்சல். எரி → எரிச்சல். 'சல்' தொ.பெ.ஈறு]*

**மெய்யெழுத்து** *mey-y-eḻuttu,* பெ.(n.) 1. ஒற்றெழுத்து, உயிரெழுத்திற்கு உடம்பா யிருப்பது (வீரசோ. சந்திப். 1, உரை); (Gram.) consonant, as the body to which the vowel gives life. 2. மெய்யெழுத்தைக் குறிக்கும் வரி வடிவம்; the letter representing a consonant.

*[மெய் + எழுத்து]*

எழுத்துகளில், வேறோர் எழுத்தின் உதவி யின்றித் தானே ஒலிக்கும் உயிரெழுத்து தானாய் இயங்கும் உயிரையும், உயிரெழுத்தின் உதவியின்றித் தனித்தொலியாத மெய்யெழுத்து உயிரின்றி இயங்காத உடம்பையும் உயிரோடு கூடிய மெய்யெழுத்து உயிரோடு கூடிய உடம்பையும் ஒத்திருத்தலால் அம்மூவகை எழுத்திற்கும் அம் மூவகைப் பொருட்பெயர்களையே உவமையாகு பெயராக இட்டனர் முதல் நூலாசியர்......... மெய்யெழுத்துகளில் வல்லினம், மெல்லினம், இடையினம் என்பன வல்லுடம்பையும் மெல்லுடம் பையும், இடைத்தரவுடம்பையும் நிகர்க்கும் என்பதை அவ்வப் பெயர்களே உணர்த்தும் (சொ.க.32).

தமிழில் க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன் என்னும் பதினெட்டு மெய்யெழுத்துகள் உள்ளன.

**மெய்யொலி** *meyyoli,* பெ.(n.) ஒற்றெழுத்து; consonant.

*[மெய் + ஒலி]*

பேச்சொலிகளைத் தமிழிலக்கணங்கள் உயிரொலி என்றும் மெய்யொலி என்றும் இரண்டாகப் பிரிக்கும். பேச்சு முயற்சியால் வெளிப்படுகின்ற காற்று எங்கும் தடைப்படாமல் இதழமைப்பாலும் நாவின் இயக்கத்தாலும் தேவையான மாறுதல்களைப் பெற்று ஒலியை உண்டாக்கும்போது அம்முறையில் பிறக்கும் ஒலிகளுக்கு உயிரொலி என்று பெயர். அங்ஙனம் இல்லாமல் வேறுவகையில் உருவாகும் எல்லா ஒலிகளையும் மெய்யொலி என்பர். அந்த மெய்யொலிகளைத் தமிழிலக்கணங்கள் வலி, மெலி, இடை என மூன்றாய்ப் பிரித்துள்ளன. தமிழ்மொழியில் உள்ள மெய்யெழுத்துகள் பதினெட்டு (இ.க.).

**மெய்வசை** *mey-vaśai,* பெ.(n.) ஒருவனைப் பற்றி வசை தோன்றக் கூறும் பாட்டு வகை (இலக். வி. 753); (Rhet.) a poem holding

up a person to ridicule.

*[மெய் + வசை]*

**மெய்வருக்கை** *mey-varukkai,* பெ.(n.) மெய்யெழுத்துக்களின் வரிசை (வின்.); the series of consonants.

*[மெய் + வருக்கை]*

**Skt.** varga > த. வருக்கை.

**மெய்வருத்தம்** *mey-varuttam,* பெ.(n.) உடலுழைப்பாலாகிய அயர்ச்சி; fatigues. *'மெய்வருத்தம் பாரார்' – ஔவையார்.*

*[மெய் + வருத்தம்]*

**மெய்வருத்தல்** *mey-varuttal,* பெ.(n.) உடல் வருந்த உழைத்தல்; straining the body.

*[மெய் + வருத்தல். வரு → வருத்தல். 'தல்' தொ.பெ.ஈறு.]*

**மெய்வருத்து-தல்** *mey-varuttu-,* 5 செ.கு.வி. (v.i.) உடல் வருந்த உழைத்தல்; to strain the body.

*[மெய் + வருத்து-.]*

**மெய்வலி¹** *mey-vali,* பெ.(n.) உடலின் வலிமை; physical,bodily strength. *"நிரம்பிய மெய் வலியினையுடைய மாக்கள்" (பெரும்பாண். 61, உரை).*

*[மெய் + வலி]*

**மெய்வலி²** *mey-vali,* பெ.(n.) உடல் கடுப்பு; pain in the body.

மறுவ. உடல் நோவு.

*[மெய் + வலி]*

**மெய்வழி** *mey-vaḻi,* பெ.(n.) உண்மைச் சமயம்; the true religion.

ம. மெய்வழி.

*[மெய் + வழி]*

**மெய்வழிநீர்** *mey-vaḻi-nīr,* பெ.(n.) சிறுநீர் (யாழ்.அக.); urine.

*[மெய் + வழி + நீர்]*

**மெய்வார்த்தை** *mey-vārttai,* பெ.(n.) மெய்யுரை² பார்க்க (சிலப். 30, 192, அரும்); see *mey-y-urai²*

*[மெய் + வார்த்தை]*

**Skt.** *vārttā* > த. வார்த்தை.

**மெய்வாழ்த்து** *mey-vāḻttu,* பெ.(n.) ஒருவனை வாழ்த்திக் கூறும் பாட்டு [redacted] (இலக். வி. 753); (Rhet.) a poem in praise of [redacted] person.

*[மெய் + வாழ்த்து]*

**மெய்விடு-தல்** *mey-viḍu-,* 20 செ.கு.வி. (v.i.) இறத்தல்; to die, [redacted] casting off one's body. *"இரங்கி மெய்விடவும்" (சிலப். 27, 97).*

*[மெய் + விடு-.]*

**மெய்விழு-தல்** *mey-viḻu-,* 2 செ.கு.வி. (v.i.) இறத்தல்; to die.

*[மெய் + விழு-.]*

**மெய்விரதன்** *mey-viradaṉ,* பெ.(n.) 1. உதிட்டிரன் (வின்.); *Udiṭṭiraṉ.* 2. வீடுமன்; *Bhisma.*

*[மெய் + விரதன்]*

**Skt.** *vratin* > த. விரதன்.

**மெய்வெளு-த்தல்** *mey-veḷu-,* 4 செ.கு.வி. (v.i.) உடல் வெளுருதல்; to become pale as body.

*[மெய் + வெளு-,]*

**மெய்வெளுப்பு** *mey-veḷuppu,* பெ.(n.) சோகை; anaemia.

*[மெய் + வெளுப்பு வெளு → வெளுப்பு. 'ப்' பெ.ஆ.ஈ.]*

**மெய்வேறு** *mey-vēṟu,* பெ.எ. (adv.) தனித்தனியாய்; individually. *"மெய்வேறு ஆழாக்கு நெய்யும்"* (S.I.I.iii.232).

*[மெய் + வேறு]*

**மெய்வை-த்தல்** *mey-vai-,* 4 செ.கு.வி. (v.i.) மெய்விடு-தல் பார்க்க; see *mey-viḍu-, "வீழ்ந்து மெய் வைத்தலும்" (மணிமே. 6, 131).*

*[மெய் + வை-,]*

**மெரள்(ளு)-தல்** *meraḷ(ḷu)-,* 16 செ.கு.வி. (v.i.) மயங்கியஞ்சுதல்; to be frightened, starled.

*[மருள் → மிரள். மிரளுதல் = மயங்கியஞ்சுதல். மிரள் → மெரள் (வே.க.4,42)]*

**மெரிபாகல்** *meri-pāgal,* பெ.(n.) மிதிபாகல்; small bitter guard.

*[மெரி + பாகல்]*

**மெரிபாவை** *meri-pāvai,* பெ.(n.) 1. ஒரு வகை பாவை; a kind of carilla. 2. பாகற்காய்; small bitter gourd.

*[மெரி + பாவை]*




**மெருகங்கிழங்கு** *merugaṅ-kiḻaṅgu,* பெ.(n.) வெருகங் கிழங்கு (பதார்த்த. 405); long-rooted arum.

*[மெருகன்கிழங்கு → மெருகங்கிழங்கு]*

**மெருகரம்** *merugaram,* பெ.(n.) மெருகு வேலையில் பயன்படும் அரவகை; smooth file. (C.G.)

*[மெதுகரம் → மெருகரம் (வே.க.4,24)]*

**மெருகன்கிழங்கு** *merugaṉ-kiḻaṅgu,* பெ.(n.) ஒரு வகைக் கிழங்கு; a bulbous root.

*[வெருகன்கிழங்கு → மெருகன்கிழங்கு]*

**மெருகாணி** *merugāṇi,* பெ.(n.) மெருகு வளை பார்க்க; see *merugu-vaḷai.*

*[மெதுகாணி → மெருகாணி = மெருகுவளை யென்னும் தட்டார் கருவி. (வே.க.4, 24)]*

**மெருகி** *merugi,* பெ.(n.) மருட்கற்றாழை; hyacinth aloe.

**மெருகிடு-தல்** *merugiḍu-,* [redacted] செ.கு.வி. & செ.குன்றாவி. (v.i.) & (v.t.) பளபளப்பு உண்டாகச் செய்தல் (வின்.); to polish, burnish.

*[மெருகு + இடு-,]*

**மெருகு**[1] *merugu,* பெ.(n.) பளபளப்பு, பொலிவு; smoothness, glitter, lustre, polish, brightness, freshness. *'மெருகு மாறாத வெள்ளி யேனம் (பாத்திரம்)' (உ.வ.).*

ம. மெருகு, வெருகு; [redacted] மெருகு, மிறுகு; தெ. மெருகு, மெருங்கு; து. மெர்பு.

*[மெது → மெதுகு → மெருகு = மெதுவான பளபளப்பு (வே.க.4, 24)]*

**மெருகு²** *merugu,* பெ.(n.) வெருகஞ்செடி; long rooted arum.

*[வெருகன்கிழங்கு → மெருகங்கிழங்கு → மெருகு (மருஉ)]*

**மெருகுக்கல்** *merugu-k-kal,* பெ.(n.) மெருகிட வுதவுங் கல்; pumice stone, used in polishing. (C.E.M.).

*[மெருகு + கல்]*

**மெருகுச்சுண்ணாம்பு** *merugu-c-cuṉṉāmbu,* பெ.(n.) சுவர் முதலியவற்றிற் பூசும் சிப்பிச் சாந்து போன்ற நுண்ணிய சுண்ணாம்புச் சாந்து; fine chunam used in plastering, flooring, etc., [redacted] giving a polished surface.(C.E.M.).

*[மெருகு + சுண்ணாம்பு]*

**மெருகுத்தைலம்** *merugu-t-tailam,* பெ.(n.) மெருகெண்ணெய் பார்க்க; see *meru-g-eṉṉey* (Mod.).

*[மெருகு + தைலம்]*

**Skt.** taila > த. தைலம்.

**மெருகுதேய்-த்தல்** *merugu-tēy-,* 4 செ. குன்றாவி. & செ.கு.வி. (v.t.) & (v.i.) மெருகிடு-தல் (வின்.) பார்க்க; see *merugiḍu-,*

*[மெருகு + தேய்-,]*

**மெருகுபோடு-தல்** *merugu-pōḍu-,* 19 செ. குன்றாவி. & செ.கு.வி. (v.t.) & (v.i.) மெருகிடு-தல் (வின்.) பார்க்க; see *merugiḍu-,*

*[மெருகு + போடு-,]*

**மெருகுமண்** *merugu-maṉ,* பெ.(n.) தட்டார் மெருகிடுதற்குதவும் மண்வகை (இ.வ.); a kind of earth used by goldsmith in polishing.

*[மெருகு + மண்]*

**மெருகுவளை** *merugu-vaḷai,* பெ.(n.) மெருகிட வுதவும் தட்டார் கருவி வகை (இ.வ.); polishing-pin, used by goldsmiths.

*[மெருகு + வளை]*



மெருகுவளை

**மெருகுள்ளித்தைலம்** *merugulli-t-tailam,* பெ.(n.) பூண்டும், மெருகன் கிழங்கும் கலந்து அணியம் செய்யப்படும் நெய்மம்; medicated oil prepared out of garlic and tuberous root of *'merugu'*,

*[மெருகு + உள்ளி + தைலம். இது மூட்டுவலி (arthrities), எலும்பு மூட்டிணைப்புள் கசிவுறும் உயவு நீர்ம நோய் (synovities) ஆகியவற்றிற்கு மருந்தாகப் பயன்படுகிறது என்று சா.அக. குறிப்பிடுகிறது.]*

**Skt.** taila > த. தைலம்.

**மெருகெண்ணெய்¹** *merugeṉṉey,* பெ.(n.) பளபளப்பிற்காக மரப்பண்டங்களின் மேல் பூசும் எண்ணெய் (வின்.); varnish, oil used to give polish to cabinet work. 2. மினுக்

கெண்ணெய் (யாழ் அக.); unguent for improving the complexion.

*[மெருகு + எண்ணெய். எள் + நெய் - எண்ணெய்]*

**மெருகெண்ணெய்[2]** *merugenney,* பெ.(n.) மெருகன் கிழங்கிலிருந்து எடுக்கும் எண்ணெய்; medicated oil prepared out of the tuberous root.

*[மெருகு + எண்ணெய். மெருகு = மெருகன்கிழங்கு]*

**மெருகேற்று-தல்** *merugēṟṟu-,* 5 செ. குன்றாவி.(v.t.) மெருகிடு-தல் பார்க்க; [redacted] *merugiḍu-,*

க. மெறயிசு.

*[மெருகு + ஏற்று-,]*

**மெருகோடு** *merugōḍu,* பெ.(n.) மேற் புறத்திற் பளபளப்புள்ள ஓடு; glazed tile (C.E.M.).

*[மெருகு + ஓடு]*

**மெருவணை** *meruvaṇai,* பெ.(n.) 1. இறுமாப்பு (ஆடம்பரம்); ostentation, display. 2. ஊர்வலம் (இ.வ.); procession, as in a wedding.

க. மெறவணிகெ, மெறவணி; தெ. மெரவடி.

*[மெருகு → மெருகணை → மெருவணை]*

**மெருள்[1]** *meruḷ,* பெ.(n.) அச்சம் (நன். 101, மயிலை); fear.

தெ. மெரமெர.

*[மிரள் → மெரள். மெரளுதல் = மயங்கி யஞ்சுதல். மெரள் → மெருள். மெரளுதல் = மயங்கியஞ்சுதல். (வே.க.4,42)]*

**மெருள்(ளு)-தல்** *meruḷ(ḷu)-,* 16 செ.கு.வி. (v.i.) அச்சமடைதல்; to fear, to shy.

ம. மிரளுக.

*[மருள் → மிரள். மிரளுதல் = மயங்கியஞ்சுதல்; மிரள் → மெரள். மெரளுதல் = மயங்கியஞ்சுதல். மெரள் → மெருள் (வே.க.4, 42)]*

**மெருளி** *meruḷi,* பெ.(n.) அச்சங் (பயங்) கொள்ளி (இ.வ.); shy person or animal, coward.

*[மருள் → மிரள் → மெரள் → மெருள் → மெருளி (வே.க.24, 42)]*

**மெல்[1]** *mel,* பெ.அ. (adj.) மென்மையான; soft, tender. *"ஆம்பன் மெல்லடை கிழிய" (அகநா. 56).*

*[முல் → மெல் (வே.க.4,19)]*

*mel*, fine, thin, soft, tender; *mell-a*, softly, gently. Comp. Latin mollis, soft, tender, pliant; Greek malakos, soft, gentle, tender. The derivation of the Latin *mollis*, from *movilis*, seems inconsistent with the connection which subsists between *mollis* and *malakos*; and the resemblance of both to the Dravidian *mel* is remarkable. Comp. Sans. *mridu*, soft, which is in Tamil *meḍ-u*. I can scarcely think *mel*, like *med-u*, derived from *mṛidu* (CGDFL. 603, 604).

**Goth.** *mel*, grind; *malma*, sand; **ON.** *malmr*, ore; **E.** *malm*, soft chalky rock; **OE.**, mealm, cog. w; **OS., OHG.** *melm*, dust.

**E.** *meal*; **OE.** *mela*; **OS., OHG.** *melo*; **ON.** *mjol*, cog, w; **L.** *molere*, grind; **E.** *mill*, building fitted with machinery for grinding corn.

**OE.** *mylen*; **OS.** *mulin*; **OHG.** *muli* (n.) **f.LL.** *molinum*; **L.** *mila, mill*; **f.** *mole*, grind.

**E.** *molar*, grinder (mammal's back teeth

serving to grind) f. *molaris* (mela, millstone).

**E.** *mull* (Sc.), snuff box (var. of mill), box originally having a grinder.

**E.** *muller*, tool used for grinding powders etc. on slab.

**ME.** *mol, mulour*, **f.** *mul, grind*.

**E.** *mullock* (Austral.), refuse from which gold has been extracted. **f.** dial. *mull*, dust, rel. to **OE.** *mgl*, dust; **MDu.** *mul*, mol f. Gme root *mul-*, grind.

**E.** *multure*, toll of grain or flour paid to *muller*.

**ME.** or **OF** *milture* f. med, L. *molitura* f.*molere*, grind. **(வே.க.4.22)**

**மெல்²(லு)–தல்** *mel(lu)-,* 3 செ.குன்றாவி. (v.t.) **1.** கடின அல்லது விழுங்க முடியாத உணவைப் பல்லால் அரைத்து மென்மை யாக்குதல், (உணவுப் பொருள் முதலிய வற்றைப்) பற்களால் கடித்துக் கரைத்தல், வாயாற் குதட்டுதல்; to chew, as betel, to masticate. *"மெல்லிலைப் பண்டியும்" (சீவக. 62). 'மாடு புல்லை மென்று கொண்டிருந்தது' (உ.வ.).* **2.** கடித்தல்; to chide. *'இரவும் பகலும் என்னை மென்று கொண்டிருக்கிறான்'.*

ம. மெல்லுக; க. மெல், மெலி, மெலு, மெல்லு, மெலகு, மெலுகு, மெல்கு, மலகு, மலுகு; தெ. மெக்கு; து. மென்னு; கோத. மெக்; துட. மெள்க்; கூ. ம்ரேட, ம்ரேடி.

*[முல் → மெல்]*

**மெல்கு¹–தல்** *melgu-,* 5 செ.கு.வி. (v.i.) **1.** மெதுவாதல்; to become soft. *"காலின் மென்மைக்குத் தக்கபடி தானும் மெல்கிற்றிலன்" (சிலப். 15, 138, அரும்.).* **2.** நொய்யதாதல் (இலேசாதல்) (வின்.); to be light. **3.** இளகுதல்; to melt.

*[மெல் → மெல்கு-,]*

**E.** *melt*, become or make soft by liguifying by heat; **OE.** *meltan, mieltan*; **ON.** *meta* (digest).

**E.** *molten* (melted).

**E.** *smelt* (extract metal from ore by melting). **MDu.** or **MLG.** smelten.

**E.** *malt*; **OE.** *mealt*; **OS.** *malt*; **OHG.** malz; **ON.** *malt*, cog.w. *melt*. **(வே.க.4,21).**

**மெல்கு²–தல்** *melgu-,* 5 செ.குன்றாவி. (v.t.) மெல்(லு)–தல் பார்க்க; see *mel(lu)-*. *"மெல்கிடு கவுள வல்குநிலை புகுதரும்" (அகநா. 56).*

*[மெல் → மெல்கு]*

**மெல்கோல்** *mel-kōl,* பெ.(n.) பற்குச்சி (சூடா.); stick for cleaning the teeth. *"மெல்கோறின்று" (சீவக. 803).*

*[மெல் + கோல்]*

**மெல்ல** *mella,* வி.அ. (adv.) **1.** மெதுவாக, மென்மையாக, சிற்றளவாக; softly, slowly, gently. *"தானோக்கி மெல்ல நகும்" (குறள், 1094).* **2.** அமைதியாக, அடக்கமாக; comely. *"மெல்ல வந்தென் நல்லடி பொருந்தி" (புறம். 73).* **3.** தாழ்வான குரலாக; in low voice.

ம., தெ. மெல்ல; க. மெல்ல, மெல்லகெ, மெல்லனெ; பட. மெல்லெ, து. மெல்ல, மெல்லனெ.

*[மெல் → மெல்ல]*

**மெல்லடை** *mel-l-adai,* பெ.(n.) மெல்லிய அடை (அப்பவகை) (பிங்.); a kind of thin cake.

து. மெசுபாகு, மிசுபாகு (ஒருவகை இனிப்பு அப்பம்)

*[முல் → மெல் = மெதுவான. மெல் → மென்மை, மெல் + அடை (வே.க.4,19)]*

**மெல்லணை** *mel-l-aṇai,* பெ.(n.) 1. மெத்தை[1] பார்க்க; see *mettai*[1]. *"மெல்லணை மேல் முன்துயின்றாய்" (திவ். பெருமாள். 9 ,3).* 2. சட்டை (சூடா.); jacket.

*[மெல் + அணை. அள் → அண் → அண → அணை]*

**மெல்லப்பேசு-தல்** *mella-p-pēšu-,* 5 செ.கு.வி. (v.i.) குரலைத் தாழ்த்திப் பேசுதல்; to speak softly.

து. மெல்ல பாதெருனி.

*[மெல்ல + பேசு-,]*

**மெல்லம்புலம்பன்** *mellam-pulamban,* பெ.(n.) நெய்தனிலத்தலைவன் (பிங்.); chief of a maritime tract. *"மெல்லம்புலம்பன் பிரிந்தென" (குறுந். 5).*

*[மெல்லம்புலம்பு → மெல்லம்புலம்பன்]*

**மெல்லம்புலம்பு** *mellam-pulambu,* பெ.(n.) நெய்தனிலம் (திருக்கோ. 379, உரை); maritime tract.

*[மெல் + புலம்பு. மணலால் ஆகிய மெல்லிய நெய்தல் நிலம்]*

**மெல்லரி** *mellari,* பெ.(n.) உயர்ந்த சிறிய அரிசி வகை; rice of a superior quality. *"உலை தந்த மெல்லரி"* (திருமந். 422).

*[மெல் + அரி]*

**மெல்லன்** *mellan,* பெ.(n.) நெய்தனிலத் தலைவன்; man of neydal nilam (maritime tract).

*[முல் → மெல் = மெதுவான. மெல் → மெல்ல = மெதுவாக. மெல் → மெல்லென = மெத்தெனற் குறிப்பு, மெல் → மெல்லன் = மெல்லிய தன்மையன் (வே.க.4,19)]*

**மெல்லி** *melli,* பெ.(n.) மெல்லியல், 2 பார்க்க; see *melliyal* 2. *"மெல்லி நல்லா டோள்சேர்" (ஆத்திசூ.).*

*[மெல் → மெல்லி. மெல்லியலுடைய பெண்]*

**மெல்லிக்கை** *mellikkai,* பெ.(n.) 1. பருமற்றது (வின்.); thinness. 2. ஒல்லியானது; being tall and lean.

*[மெல் → மெல்லிக்கை = சிறியது, பருமனற்றது]*

**மெல்லிசரம்** *melli-šaram,* பெ.(n.) நுட்பமாய் அராவவுதவும் அரம்; sash file (C.E.M.).

*[மெல்லிசு + அரம்]*

**மெல்லிசு** *mellišu,* பெ.(n.) மெல்லிது (கொ.வ.) பார்க்க; see *mellidu.*

*[மெல்லிது → மெல்லிசு (கொ.வ)]*

**மெல்லிசுப்பிரம்பு** *mellišu-p-pirambu,* பெ.(n.) மெல்லிதான பிரம்பு வகை; rattan-palm (L).

*[மெல்லிசு + பிரம்பு]*

**மெல்லிசை** *mellišai,* பெ.(n.) எளிய இனிய இசை, மெதுவான ஓசை; soft tone, popular music (as opposed to classical music), light music. *'இந்த மெல்லிசை எனக்கு மிகவும் பிடித்தது' (உ.வ.).*

*[மெல் + இசை]*

**மெல்லிசைவண்ணம்** *mellišai-vaṇṇam,* பெ.(n.) மெல்லெழுத்து மிகுந்து வரும் செய்யுளோசை (சந்தம்) (தொல். பொ. 529); a rhythm effected by the frequent use of the nasals.

*[மெல் + இசை + வண்ணம்]*

**மெல்லிதழ்** *mellidaḷ*, பெ.(n.) 1. மென்மையான பூ முதலியவற்றின் மடல், petals of flowers. 2. மங்கையர் உதடு; lips of women.

*[மெல் + இதழ்]*

**மெல்லிது** *mellidu*, பெ.(n.) 1. மென்மை (வாய்ந்த)யான பொருள்; that which is soft or fine. *"மலரினு மெல்லிது காமம்" (குறள், 1289).* 2. ஒல்லி; thinness, slenderness.

*[மெல் → மெல்லிது]*

**மெல்லிமை** *mellimai*, பெ.(n.) மென்மை; softness.

*[மெல் → மெல்லிமை]*

**மெல்லிய** *melliya*, பெ.எ. (adj.) 1. பருமனாகவோ, தடித்ததாகவோ இல்லாதது; thin, slender. *'மெல்லிய நூல்', 'மெல்லியட்டல்'.* 2. அதிக ஓசை (சத்தம்) இல்லாத; soft. *'மெல்லிய குரலில் பதிலளித்தார்' (உ.வ.).*

*[மெல் → மெல்லிய]*

**மெல்லியகொத்தான்** *melliya-kottāṉ*, பெ.(n.) முடக்கறுத்தான்; palsy curer-baloon vine.

*[மெல்லிய + கொத்தான்]*

**மெல்லியகோசு** *melliya-kōšu*, பெ.(n.) முட்டைக்கோசு; cabbage.

*[மெல்லிய + கோசு]*

E. cosh > த. கோசு.

**மெல்லியசாதிகம்** *melliya-šādigam*, பெ.(n.) 1. ஆச்சா; sal. 2. அரசு; pipal.

மறுவ. மராமரம்.

**மெல்லியது** *melliyadu*, பெ.(n.) மென்மையரனது; the thing which is soft or tender.

*[மெல் → மெல்லிய + அது]*

**மெல்லியநல்லாள்** *melliya-nallāḷ*, பெ.(n.) பெருமாட்டி; lady, mistress, princess.

*[மெல் → மெல்லிய + நல்லாள்]*

**மெல்லியபூ** *melliya-pū*, பெ.(n.) மலர் வகையில் ஒன்றான மல்லிகை; jasmine.

*[மெல்லிய + பூ]*

**மெல்லியர்** *melliyar*, பெ.(n.) 1. வலிமையில்லாதவர்; the weak. *"தேவர் மெல்லியர்" (கம்பரா. யுத்த. மந்திரப். 32).* 2. உடல் மெலிந்தவர் (வின்.); the emaciated. 3. எளியர்; the poor. *"எச்சத்தின் மெல்லியராகி" (நாலடி, 299).* 4. புல்லிய குணங்களையுடையவர்; low, mean persons. *"மடவர் மெல்லியர் செல்லினும்" (புறநா. 106).* 5. பெண்டிர் (வின்); woman as of delicate build.

*[மெல் → மெல்லியர்]*

**மெல்லியல்**[1] *melliyal*, பெ.(n.) 1. மென்மையான இயல்பு; tender nature. *"மெல்லியற் குறுமகள்" (குறுந். 89).* 2. மெல்லியலுடைய பெண்; woman. *"மெல்லிய லாக்கை முற்று நடுங்கினள்" (கம்பரா. மாயா. சனக. 18).* 3. இளங்கொம்பு (சூடா.); tender twig of a tree.

*[மெல் + இயல்]*

**மெல்லியல்**[2] *melliyal*, பெ.(n.) 1. மலை வாழை; mountain plantain. 2. பெண்; lady.

*[மெல் + இயல்]*

**மெல்லியலாள்** *melliyaḷāḷ*, பெ.(n.) பெண்; lady. *'மெல்லியாள் தோள் சேர்' (பழ.).*

*[மெல் → மெல்லியல் + ஆள்]*

**மெல்லியன்** *melliyan,* பெ.(n.) அறிவு குன்றியவன் (புறம். 184); less intelligent man.

*[மெல் → மெல்லியன்]*

**மெல்லியார்** *melliyār,* பெ.(n.) எளியோர்; mean man, poor man.

*[மெல் → மெல்லியார்]*

**மெல்லியார்கூந்தல்** *melliyār-kūndal,* பெ.(n.) அம்மையார் கூந்தல் என்னும் பூண்டு [redacted] (மூ.அ.); seeta's thread, Cuscuta reflexa.

*[மெல்லியார் + கூந்தல்]*



மெல்லியார் கூந்தல்

**மெல்லிலை** *mellilai,* பெ.(n.) 1. வெற்றிலை; betal leaf. *"மெல்லிலைக் காவும்" (சீவக. 326).* 2. வெற்றிலைக் கொடி (சூடா.); betal pepper, vine.

*[மெல் + இலை]*

**மெல்லிழை**[1] *mellilai,* பெ.(n.) ஆடை முதலியவற்றின் நுண்ணூல்; filament.

*[மெல் + இழை]*

**மெல்லிழை**[2] *mellilai,* பெ.(n.) மெல்லிய ஆடையணிந்த பெண்; a lady wearing thin clothes.

*[மெல் + இழை. 'மெல்லிழை' அன்மொழித் தொகை]*

**மெல்லினம்** *mellinam,* பெ.(n.) மூவினத்துள் மெல்லோசையுடைய எழுத்துகள், மெய்யெழுத்துகளின் மூன்று பிரிவு (வல்லினம், மெல்லினம், இடையினம்) களுள் மூக்கொலியாலான ங், ஞ், ண், ந், ம், ன் ஆகிய ஆறு எழுத்துகளை உள்ளடக்கிய பிரிவு (நன். 69); (Gram.) the six nasal consonants of the Tamil (tripartite) system.

*[மெல் + இனம். மெல்லொலியுடைய மெய்யெழுத்துகள்]*

**மெல்லினவெதுகை** *mellina-v-edugai,* பெ.(n.) எல்லாச் சீர்களிலும் மெல்லின எழுத்துக்கள் எதுகையாய் வருவது; nasal consonants letters concatenation in which the second letters of the line of a verse.

*[மெல்லின(ம்) + எதுகை]*

**மெல்லுகை** *mellugai,* பெ.(n.) கறிக்கை; chiding.

*[மெல் → மெல்லுகை. 'கை' தொ. பெ. ஈறு]*

**மெல்லெழுத்து** *mel-l-eluttu,* பெ.(n.) மெல்லோசையுடைய ங், ஞ், ண், ந், ம், ன் என்ற எழுத்துகள் (தொல். எழுத்து. 20); the six consonants *ṅ, ñ, ṇ, n, m, ṉ* classified as soft or nasal consonants dist. from *val-l-eluttu* and *idai-y-eluttu.*

*[மெல் + எழுத்து. எழுது → எழுத்து]*

**மெல்லென** *mellena,* வி.அ. (adv.) மெல்ல பார்க்க; see *mella.*

*[மெல் → மெல்லென]*

**மெல்லெனல்** *mel-l-eṉal*, பெ.(n.) 1. மெத் தெனற் குறிப்பு; expr. signifying being soft. *"மெல்லென் சீறடி" (தொல். பொ. 146).* 2. குரல் தாழ்ந்து பேசற் குறிப்பு; being gentle in speech. *"மெல்லெனக் கிளந்தனமாக" (பொருந.122).* 3. மந்தக்குறிப்பு (சூடா.); being dull.

*[மெல் + எனல்]*

**மெல்லொற்று** *mel-l-oṟṟu*, பெ.(n.) மெல்லெழுத்து பார்க்க (தொல். எழுத். 414); (Gram.) see *mel-l-eḻuttu.*

*[மெல் + ஒற்று]*

**மெல்வினை** *mel-viṉai*, பெ.(n.) பணி (சரியை), பத்தி (கிரியை) என்னும் மத வினைகள்; cariyai and kiriyai, the first two of the four paths to salvation, as easier. *"எளிதானவற்றை மெல்வினையே யென்றது" (திருக்களிற்றுப். 17).*

*[மெல் + வினை]*

**மெலி¹-தல்** *meli-*. 2 செ.கு.வி. (v.i.) 1. வலி குறைதல்; to be weak. 2. உடல் இளைத்தல், பருமன் குறைதல்; to become lean, thin. *"ஆக்கையைப் போக்கப் பெற்று மெலிகின்ற என்னை" (திருவாச. 6,10), 'நோயினால் மெலிந்த உடம்பு' (உ.வ.).* 3. வருந்துதல்; to suffer, to languish. *"அளப்பினான் மெலிகிற்பாள்" (காசிக. மகளிர். 8).* 4. அழிதல்; to perish. *"மெலியு நம்முடன் மேல்வினை யானவே" (தேவா. 3, 18, 10).* 5. எளியராதல் (வின்.); to become poor; to be reduced in circumstances. 6. இனமொத்த மெல் லெழுத்தாக மாறுதல்; (Gram.) to be softened, [redacted] a hard consonant into the corresponding soft or nasal consonant. *"குழைத்த வென்பது குழைந்தவென மெலிந்து நின்றது" (புறநா. 21, உரை).* 7. சுரத்திற்றாழ்தல்; (Mus.) to be lowered in pitch. *"யாழ்மேற் பாலை யிடமுறை மெலிய" (சிலப். 3, 92).*

ம. மெலி; து. மெலி (நோய் போன்றவற்றால் உடல் எடை குறைதல்).

*[முல் → மெல் → மெலி. மெலிதல் - வறுமையடைதல் (மு.தா. 286)]*

**மெலி²-த்தல்** *meli-*, 2 செ.குன்றாவி. (v.t.) 1. வலி குறைத்தல்; to weaken. 2. உடல் மெலியச் செய்தல்; to make thin, lean. 3. வருந்துதல்; to cause suffering. 4. அழித்தல்; to destroy. *"கடற்கரை மெலிக்குங் காவிரி" (சிலப். 6,164).* 5. வல்லினவெழுத்தை இனமொத்த மெல்லின வெழுத்தாக மாற்றுதல்; (Gram.) to soften, as a hard consonant into the coresonding soft or nasal consonant. *"மெலிக்கும் வழி மெலித்தலும்" (தொல். சொல். 403).* 6. சுரத்தைத் தாழ்த்தல்; (Mus.) to lower the pitch.

*[முல் → மெல் → மெலி. (முதா.286) மெலிதல் → மெலித்தல். செய்யுள் திரிபு ஆறனுள், வல்லெழுத்து இனமெல்லெழுத்தாக மாறுதல் அல்லது மாற்றப்படுதல். (நன்.155). இயல்பாக வல்லினம் பெற்ற சொற்கள் செய்யுளில் மெல்லினம் பெற்றுவந்தால் அது மெலித்தல் வேறுபாடு. "தண்டையின் இனக்கிளி கடிவோள் பண்டையன் அல்லன் மானோக்கினளே" இங்குத் தட்டை என்பது தண்டை என மெலித்து வந்துள்ளது]*

**மெலி³** *meli*, பெ.(n.) மெல்லெழுத்து பார்க்க; see *mel-l-eḻuttu. "மெலிமிகலுமாகும்" (நன். 215).*

*[முல் → மெல் → மெலி]*

**மெலிகோல்** *meli-kōl,* பெ.(n.) கொடுங்கோல்; rod of tyranny, tyranny. *"மெலிகோல் செய்தேனாகுக" (புறநா. 71).*

*[மெலி + கோல்]*

**மெலிசு** *melišu,* பெ.(n.) மெலிது பார்க்க; see *melidu.*

*[மெலிது → மெலிசு]*

**மெலித்தல்** *melittal,* பெ.(n.) செய்யுள் மாற்றம் (விகாரம்) ஒன்பதனுள் வல்லெழுத்து இன மெல்லெழுத்தாக மாறும் மாற்றம் (விகாரம்) (நன். 155); (Gram.) changing of a hard or stop consonant into the corresponding soft or nasal consonant, one of nine *ceyyuḷ-vigāram.*

*[மெலி → மெலித்தல்]*

**மெலிதாவிகம்** *melitāvigam,* பெ.(n.) மருது மேற்புல்லுருவி; ■ parasite growing on marudu tree.

**மெலிது** *melidu,* பெ.(n.) 1. மெலிந்தது; that which is thin. 2. மென்மையானது; that which is soft. *'மனத்துக்குள் நம்பிக்கை மெலிதாகத் தலை தூக்கியது'.*

*[மெல் → மெலி → மெலிது]*

**மெலிந்த** *melinda,* பெ.எ. (adj.) ஒடுங்கிய, வலுவிழந்த நிலை; unnerved. *'மெலிந்த உடம்பு' (உ.வ.).*

*[மெலி → மெலிந்த]*

**மெலிந்தநெஞ்சு** *melinda-neñju,* பெ.(n.) வலுவிழந்த நெஞ்சாங்குலை; weak heart.

*[மெலிந்த + நெஞ்சு]*

**மெலிந்தவள்** *melindavaḷ,* பெ.(n.) ஒல்லியான உடல்வாகு உள்ளவள்; ■ lean woman. *"மெலிந்தவளுக்கு மெத்தப் பலன், மேனி மினுக்கி இட்டவளுக்கு மெத்தக்கசம்" (பழ.).*

*[மெலிந்த + அவள்]*

**மெலிந்துபோ-தல்** *melindupō-,* 8 செ.கு.வி. (v.i.) மெலி[1]-தல் பார்க்க; see *meli[1]-,* *'எட்டு நாள் காய்ச்சலில் அவன் மெலிந்து போய் விட்டான்' (உ.வ.).*

*[மெலி → மெலிந்து + போ-,]*

**மெலிந்தோன்** *melindōṉ,* பெ.(n.) 1. நோய் முதலியவற்றால் உடம்பு மெலிந்தவன்; person emaciated by disease. 2. மெலியவன் பார்க்க; see *meliyavaṉ.* 3. ஏழை; destitute person.

*[மெலி → மெலிந்தோன்]*

**மெலிப்பயறு** *meli-p-payaṟu,* பெ.(n.) எலிப்பயறு; wild horse gram.

மறுவ. வயற்பயறு, சிறுபயறு.

*[மெலி + பயறு]*

**மெலிப்பு** *melippu,* பெ.(n.) 1. மெலித்தல் பார்க்க; see *melittal.* 2. மெல்லெழுத்து பார்க்க; see *mel-l-eḻuttu.* *"வல்லெழுத்து மிகுவழி மெலிப்பொடு தோன்றுலும்" (தொல். எழுத். 157).*

*[மெலி → மெலிப்பு]*

**மெலியது** *meliyadu,* பெ.(n.) மெல்லியது பாரக்க; see *melliyadu.*

*[மெல்லியது → மெலியது]*

**மெலியவன்** *meliyavaṉ,* பெ.(n.) வலுவற்றவன்; weak, powerless persons. *"மெலியவர் பால தேயோ வொழுக்கமும் விருப்பந் தானும்" (கம்பரா. வாலிவதை. 80)*

*[மெலி → மெலியவன்]*

**மெலியார்** *meliyār,* பெ.(n.) வலிகுறைந்தவர்; weak, powerless persons. *"மெலியார் மேன் மேகபகை" (குறள், 861).*

*[மெலி → மெலியார்]*

**மெலியார்கூந்தல்** *meliyār-kūndal,* பெ.(n.) அம்மையார்கூந்தல்; seeta's thread.

*[மெலியார் + கூந்தல்]*

**மெலிவடை-தல்** *melivaḍai-,* 2 செ.கு.வி. (v.i.) 1. உடல் வளர்ச்சி குன்றுதல், ஒல்லியாதல்; to become lean. 2. வலுக் குறைதல்; to grow weak.

*[மெலிவு + அடை]*

**மெலிவு** *melivu,* பெ.(n.) 1. தளர்ச்சி; weakness, feebleness, languor. *"அணியிழை மெலிவின்" (பு.வெ.11, பெண்பாற். 5).* 2. களைப்பு; fatigue. *"மெலிவு தீர்தி" (கம்பரா. திருவடி. 5).* 3. துன்பம்; pain, suffering. 4. தொல்லை; trouble, difficulty. *"எங்களுக் குண்டான மெலிவுகளுஞ் சொல்லி"* (Insc. Pudu. 799). 5. தோல்வி; defeat. *"மெலிவென்பது முணர்ந்தோன்" (கம்பரா. முதற்போ. 181).* 6. கொடுமை; tyranny; oppression. *"வலியவர் மெலிவு செய்தால்" (கம்பரா. வாலிவ. 80).* 7. படுத்த லோசை; (Mus.) low pitch. *"வலிவும் மெலிவுஞ் சமனுமெல்லாம்" (சிலப். 3, 93).*

*[முல் → மெல் → மெலி → மெலிவு - தோல்வி. (மு.தா.286) 'வு'-தொ.பெ.ஈறு]*

**மெலிவுநாடி** *melivu-nāḍi,* பெ.(n.) வலு விழந்த நாடி, வலுவற்ற நாடி; feeble pulse.

*[மெலிவு + நாடி]*

**மெலிவுநோய்** *melivu-nōy,* பெ.(n.) இணைக்கும் நோய்; emaciation.

*[மெலிவு + நோய்]*

**மெலிவுறல்** *meli-vuṟal,* பெ.(n.) 1. வலு விழத்தல்; growing weak. 2. இளைத்தல்; growing thin and weak.

*[மெலி → மெலிவு + உறல். உறு → உறல்]*

**மெலிவுறு-தல்** *melivuṟu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. வலுவிழத்தல்; to grow weak. 2. இளைத்தல்; to become thin, lean.

*[மெலிவு + உறு-,]*

**மெலு** *melu,* பெ.(n.) எடைக்குறைவான காசு (நாணயம்) (வின்.); coin below the standard weight.

*[மெல் → மெலு]*

**மெலுக்கு[1]** *melukku,* பெ.(n.) 1. மென்மை (வின்.); exquisiteness, tenderness. 2. விழிப்பு (இ.வ.); wakefulness.

*[மெல் → மெலு → மெலுக்கு]*

**மெலுக்கு[2]** *melukku,* பெ.(n.) வெளியழகு (அலங்காரம்) (யாழ். அக.); pomp, ostentation.

*[மினுங்கு → மினுக்கு. மினுக்குதல் - பளபளப்புண்டாக்குதல். மினுக்கு → (மெனுக்கு) → மெலுக்கு]*

**மெலுக்குவை** *melu-k-kuvai,* பெ.(n.) 1. மெலுக்கு[1], 1 பார்க்க; see *melukku[1], 1.* 2. மெலுக்கு[1], 2 பார்க்க (இ.வ.); see *melukku[1], 2.*

தெ. மெலகுவ.

*[மெலுக்கு → மெலுக்குவை]*

**மெழுக்கடிகள்** *meḻu-k-kaḍigaḷ,* பெ.(n.) 1. கோயிலை மெழுகித் தூய்மை படுத்துவோர்; servants who clean the floor, in a temple (S.I.I.V.248). 2. கோயில் வழிபாட்டின் போது தீவட்டி, விளக்கு ஆகியவை பிடிக்கும் ஊழியர்; the temple servant who holds torch and lamp during worshipping time. *"இராஸ்ரீ பலி எழுந்தருளும் பொழுது எரியக்கண்ட இருப்புப் பிற விளக்கு முப்பதினுக்கு நிடதம் எண்ணெய் நாழி உழக்கு இவை பிடிப்பார் மெழுக்கடிகன்மார் நால்வர்" (தெ. கல். தொ. 5. கல். 625).*

*[மெழுக்கு + அடிகள்மார்]*

**மெழுக்கம்** *meḻukkam,* பெ.(n.) சாணியால் மெழுகிவைத்த இடம்; ground or floor prepared by being smeared with cow-dung water. *"மலரணி மெழுக்கமேறி" (பட்டினப். 248).*

*[மெழுகு → மெழுக்கு → மெழுக்கம் (வே.க.4,25)]*

**மெழுக்கு** *meḻukku,* பெ.(n.) 1. மெழுகுகை; smearing with cow-dung water, [redacted] the floor. *"புலர்வதன் முன்னலகிட்டு மெழுக்குமிட்டு" (தேவா. 727, 3).* 2. சாணம்; cow-dung. *"திருவலகும் திருமெழுக்கும் தோண்டியுங்கொண்டு" (பெரியபு. திருநாவுக். 68).* 3. மெழுகும் பொருள்; substance or solution used to smear any surface. *"வேரியின் மெழுக்கார்ந்த மென்பூ நிலத்து" (சீவக.129).* 4. மெழுகு, 3, 4 பார்க்க; [redacted] *meḻugu3,4.*

*[மெழுகு → மெழுக்கு. (வே.க.4, 25)]*

**மெழுக்குச்சாத்து–தல்** *meḻukku-c-cāttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) மெழுகு[1]–தல் (வின்.) பார்க்க; see *meḻugu[1]–,*

*[மெழுகு → மெழுக்கு + சாத்து–,]*

**மெழுக்குத்துணி** *meḻukku-t-tuṇi,* பெ.(n.) 1. நீர் ஊறாதிருப்பதற்காக மெழுகு பூசின துணி; wax cloth, cloth water-proofed with a layer of wax (C.E.M). 2. நனையா திருப்பதற்காக மேற்பூச்சிட்ட துணி (Mod.); oil-cloke . 3. கரிநெய்யிட்ட கூரைப்பாய் (Mod.); tarpaulin.

*[மெழுகு → மெழுக்கு + துணி]*

**மெழுக்குப்புறம்** *meḻukku-p-puṟam,* பெ.(n.) கோயில் மெழுகுதற்கு விடப்பட்ட இறையிலி நிலம்; rent-free *'inam'* land, granted for sweeping and washing the floor, in a temple (M.E.R 17,of 1930-31).

*[மெழுகு → மெழுக்கு + புறம்]*

**மெழுக்கூட்டு–தல்** *meḻu-k-kūṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) மேற்பூச்சிடுதல்; to smear, as with wax to; to coat. *"நிஷித்த திரவியத்தை உள்ளே வைத்து மெழுக் கூட்டினவோபாதி" (ஈடு, 1, 2, 1. பாடபேதம்).*

*[மெல் → மெல்கு → மெழுகு. மெழுகு → மெழுக்கு = மேற்பூச்சுப் பொருள். மெழுக்கு + ஊட்டு–,]*

மெழுகாலிகம் *meḻukāligam,* பெ.(n.) மாங்கிளுவை; a tree-mango balsam.

மெழுகிடு–தல் *meḻugiḍu-,* 17 செ.குன்றாவி. (v.t.) 1. நூலின் மேல் மெழுகு பூசுதல்; to wax, smear with wax, as a thread. 2. மெழுகு[1]–தல் பார்க்க; see *meḻugu*[1]-, 3. மெழுகுகட்டு–தல் பார்க்க; see *meḻugu-kaṭṭu-,*

*[மெழுகு + இடு–, 'இடு' து.வி.]*

மெழுகு[1]–தல் *meḻugu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. இடத்தைத் தூய்மை செய்வதற்காகச் சாணக் கரைசலால் தேய்த்துப் பூசுதல் அல்லது நீரால் கழுவுதல்; to cleanse the floor with cow-dung water. *"நின்றிருக் கோயிறூகேன் மெழுகேன்" (திருவாச. 5, 14).* 2. பூசுதல்; to smear, [redacted] the body with sandal paste. *"முகிண் முலை மெழுகிய சாந்தின்" (கம்பரா. பிணிவீ. 53).* 3. குற்றத்தை மறைத்துப் பூசிவிடுதல்; to gloss over, varnish.

*[மெல் → மெல்கு → மெழுகு. மெழுகுதல் = மேனியில் சந்தனம் பூசுதல், நிலத்தைச் சாணமிட்டுத் துப்புரவு செய்தல், குற்றத்தை மறைத்துப் பேசிவிடுதல் (வே.க.4, 25)]*

மெழுகு[2] *meḻugu,* பெ.(n.) 1. சாணம்; cow-dung. *"துய்ய மெழுகுடன்" (திருமந். 1720).* 2. மென்மை (அழகர்கல. 10); smoothness. 3. கொழுப்பிலிருந்து அல்லது எண்ணெயி லிருந்து உருவாக்கப்படுவதும் எளிதில் உருகக் கூடியதுமான பொருள், தேனடையன் சக்கை (குறுந். 155); wax, beeswax. *'அவலங்களைப் பார்க்கும் போது அவர் உள்ளம் மெழுகைப் போல் உருகியது' (உ.வ.).* 4. பிசின்; gum. 5. மாத்திரையுமாகாது இளகிய(லேகிய) முமாகாது பிசுபிசுத்த தன்மையுடைய மருந்து; soft, waxy pill, mass.

*[முல் → மெல் → மென்மை. மெல் → மெல்கு. மெல்குதல் = மெதுவாதல், நொய்யாதல், இளகுதல். மெல்கு → மெழுகு. (வே.க.4, 21, 25]*

மெழுகு, மூலிகைச்சாறு, செய்நீர் முதலிய வற்றால் சுருக்குக்கொடுத்து அல்லது அவற்றோடு கடைச்சரக்குகளைச் சேர்த்து, தேன், முலைப்பால் முதலியவற்றாலரைத்துத் திரட்டிய பசையுள்ளதான ஒரு வகை மருந்து. (சா.அக.).

மெழுகுவகை : இலிங்கமெழுகு, மூசாம்பிர மெழுகு, இரச மெழுகு, தாமிர மெழுகு, சிவப்பு மெழுகு, இலவண மெழுகு, கத்தூரி மெழுகு, கோரோசனை மெழுகு, கெந்தக மெழுகு, பாடாண மெழுகு, வீர மெழுகு.

மெழுகுக்களிம்பு *meḻugu-k-kaḷimbu,* பெ.(n.) சிரங்கு முதலியவற்றிற்கிடும் களிம்பு [redacted] (M.L.); medicinal ointment for itches, etc.,

*[மெழுகு + களிம்பு. மெழுக்களிம்பு = இளகிய அல்லது களிப்பதமான மருந்து]*

மெழுகுகட்டிவார்–த்தல் *meḻugu-kaṭṭi-vār-,* 4 செ.குன்றாவி. (v.t.) மெழுகுக் கருவில் மாழைகளை யுருக்கிவிட்டுத் திருமேனி வார்த்தல் (வின்.); to pour molten metal into a wax-mould and cast, as an image.

*[மெழுகு + கட்டி + வார்–,]*

மெழுகுகட்டு–தல் *meḻugu-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) திருமேனி வார்க்க மெழுகினாற் கருக் கட்டுதல் (வின்.); to make a wax-mould for casting an image.

*[மெழுகு + கட்டு–.]*

**மெழுகுசாணை** *meḻugu-šāṇai,* பெ.(n.) 1. மெழுகால் துடைத்த உரைகல் (இ.வ.); touch stone cleaned with beeswax. 2. மெழுகுங் கருமணலுங் கலந்து செய்த சாணைக்கல் (வின்.); whetstone formed of black sand and wax.

*[மெழுகு + சாணை]*

**மெழுகுசாத்து-தல்** *meḻugu-šāttu-,* 5 செ.கு.வி. (v.i.) மெழுகுகட்டு-தல் பார்க்க; see *meḻugu-kaṭṭu-, "சிற்பர்களான் மெழுகு சாத்தி" (திருவாலவா. 45, 2).*

*[மெழுகு + சாத்து-, படிமை வார்க்க மெழுகினாற் கருக்கட்டுதல்]*

**மெழுகுசாரணை** *meḻugu-šāraṇai,* பெ.(n.) பூடுவகை (சங்.அக.); a prostrate plant.

*[மெழுகு + சாரணை]*

**மெழுகுசீலை[1]** *meḻugu-šīlai,* பெ.(n.) மெழுக்குத்துணி பார்க்க; see *meḻukku-t-tuṇi.*

*[மெழுகு + சீலை. சீரை → சீலை]*

**மெழுகுசீலை[2]** *meḻugu-šīlai,* பெ.(n.) 1. மருந்து பூசப்பெற்ற சிறு துண்டு; a plaster. 2. தேன் மெழுகு பூசப்பெற்ற ஆடை; wax cloth coated with bees wax.

*[மெழுகு + சீலை. சீரை → சீலை]*

**மெழுகுசெய்-தல்** *meḻugu-šey-,* 1 செ.கு.வி. (v.i.) மெதுவாக்குதல், மென்மையாக்குதல்; to smooth, soften. *"புரவி கருவிகொ டுரிஞ்சி மிக மெழுகு செய்து" (அழகர்கல. 10).*

*[மெழுகு + செய்-,]*

**மெழுகுசேர்வை** *meḻugu-šērvai,* பெ.(n.) மெழுகுக்களிம்பு (வின்.) பார்க்க; see *meḻugu-k-kaḷimbu.*

*[மெழுகு + சேர்வை]*

**மெழுகுத்தட்டு** *meḻugu-t-taṭṭu,* பெ.(n.) மெழுகுபாளம் (வின்.) பார்க்க; see *meḻugu-pāḷam.*

*[மெழுகு + தட்டு]*

**மெழுகுத்தண்டு** *meḻugu-t-taṇḍu,* பெ.(n.) மெழுகுத்திரி பார்க்க (யாழ்.அக.); see *meḻugu-t-tiri.*

*[மெழுகு + தண்டு]*

**மெழுகுத்திராவகம்** *meḻugu-t-tirāvagam,* பெ.(n.) வீரம், பூரம், நவச்சாரம், படிகாரம் – இந்நான்கையும் வாலையிலிட்டு இறக்கிய ஒரு வகை நெய்மம் (தைலம்); an acid distilled from the four drugs corrosive sublimate, alum, ammoniam chloride and subchloride of mercury.

*[மெழுகு + திராவகம்]*

Skt. *drāvaka* > த. திராவகம்.

**மெழுகுத்திரி[1]** *meḻugu-t-tiri,* பெ.(n.) விளக்காக எரியும்படி நடுவே திரியையுடைய நீள் உருண்டை வடிவில் செய்யப்பட்ட மெழுகுக் கட்டி; wax candle, taper.

*[மெழுகு + திரி]*



மெழுகுத்திரி

மெழுகுத்திரி² *meḻugu-t-tiri,* பெ.(n.) ஒழுக்கக் கேட்டினால் உருவாகும் நோயைக் குறைக்கும் மருந்து; a slender flexible wax taper intended for introduction into the urethra or rectum.

*[மெழுகு + திரி]*

மெழுகுத்துணி *meḻugu-t-tuṇi,* பெ.(n.) மெழுக்குத்துணி (வின்.) பார்க்க; see *meḻukku-t-tuṇi.*

*[மெழுகு + துணி]*

மெழுகுத்தேன் *meḻugu-t-tēṉ,* பெ.(n.) மெழுகுக் கூட்டில் ஈக்கள் கட்டிய தேன்; honey collected by bees.

*[மெழுகு + தேன்]*

மெழுகுத்தைலம் *meḻugu-t-tailam,* பெ.(n.) புண், காயம் ஆகியவற்றைப் போக்க மெழுகு முதலியன சேர்த்துச் செய்யப்பட்ட பூசு மருந்து; medicinal oil prepared with wax and other ingredients.

*[மெழுகு + தைலம்]*

**Skt**. taila > த. தைலம்.

மெழுகுதிரி *meḻugu-tiri,* பெ.(n.) மெழுகுத்திரி¹ (வின்.) பார்க்க; see *meḻugu-t-tiri¹.*

*[மெழுகு + திரி]*

மெழுகுதுணி *meḻugu-tuṇi,* பெ.(n.) மெழுகுத் துணி (வின்.) பார்க்க; see *meḻugu-t-tuṇi.*

*[மெழுகு + துணி]*

மெழுகுநீர் *meḻugu-nīr,* பெ.(n.) பூநீர், சாரம், பச்சை, பூரம் கூட்டில் செயநீர் விட்டு அரைக்கும் ஒரு வகை நீர்; pungent liquid prepared from subchloride of mercury. copper sulphate. salt from the fuller's earth.

*[மெழுகு + நீர்]*

மெழுகுபதம் *meḻugu-padam,* பெ.(n.) மருந் தெண்ணெய்ப் பதம் ஐந்தனுள் காய்ச்சப்பட்ட மருந்தெல்லாம் சேர்ந்து மெழுகு போல் திரண்டு வரும் பதம்; thick consistency or viscosity, one of five *marundeṇṇai-p-padam.*

*[மெழுகு + பதம்]*

மெழுகுபனையன் *meḻugu-paṉaiyaṉ,* பெ.(n.) அம்மை நோய்வகை (யாழ்.அக.); a kind of small pox.

*[மெழுகு + பனையன்]*

மெழுகுபாகல் *meḻugu-pāgal,* பெ.(n.) வழவழப்புள்ள பாகற்காய் (மூ.அக.); bristly balsam-pear, climber.

*[மெழுகு + பாகல், மெழுகு = வழவழப்புத் தன்மையைக் குறித்தது]*

மெழுகுபாளம் *meḻugu-pāḷam,* பெ.(n.) குறித்த நிறையுள்ள மெழுகுத்தகடு (இ.வ.); cake of wax, generally of a particular weight.

*[மெழுகு + பாளம்]*

மெழுகுபீர்க்கு *meḻugu-pīrkku,* பெ.(n.) சுணையற்ற பீர்க்கு (சங்.அக.); a kind of gourd.

மறுவ. வெண்பீர்க்கு, நுரைபீர்க்கு.

*[மெழுகு + பீர்க்கு]*

மெழுகுபூச்சு *meḻugu-pūccu,* பெ.(n.) திருமேனி முதலியவற்றின் மேல் மெழுகு பூசி யெடுக்கும் அச்சு (இ.வ.); mould or imprint taken with wax, as of images.

*[மெழுகு + பூச்சு]*

**மெழுகுபூவிகம்** *meḷugu-pūvigam,* பெ.(n.) தேன் கூட்டினுள்ளிருக்கும் பூச்சி; the insects in the honey comb.

*[மெழுகு + பூவிகம்]*

**மெழுகுபேய்ப்பீர்க்கு** *meḷugu-pēy-p-pīrkku,* பெ.(n.) நுரைப்பீர்க்கு; loofa.

*[மெழுகு + பேய்ப்பீர்க்கு]*

**மெழுகுபொம்மை** *meḷugu-bommai,* பெ.(n.) 1. மெழுகினாற் செய்த விளையாட்டுப் பதுமை; doll made of wax. 2. தொல்லை களைத் தாங்க முடியாதவ-ன்-ள் (கொ.வ.); person easily fatigued.

க. மேநடுபொம்பெ.

*[மெழுகு + பொம்மை. பொய்ம்மை → பொம்மை]*

**மெழுகுபோடு-தல்** *meḷugu-pōḍu-,* 20 செ.கு.வி. (v.i.) மரவேலைக்குப் பளபளப் பேற்ற மெழுகைக் காய்ச்சிப் பூசுதல் (வின்.); to wax cabinet work, in polishing.

*[மெழுகு + போடு-,]*

**மெழுகுமண்** *meḷugu-maṇ,* பெ.(n.) கருக்கட்டும் பசைமண் (வின்.); clay used in forming a mould over the figure of wax, in casting.

*[மெழுகு + மண்]*

**மெழுகுமருந்து** *meḷugu-marundu,* பெ.(n.) மெழுகு², 5 பார்க்க; see *meḷugu², 5.*

*[மெழுகு + மருந்து]*

**மெழுகுமுட்டம்** *meḷugu-muṭṭam,* பெ.(n.) மெழுகுபாளம் பார்க்க (இ.வ.); see *meḷugu-pāḷam.*

*[மெழுகு + முட்டம்]*

**மெழுகுவத்தி** *meḷugu-vatti,* பெ.(n.) மெழுகுத்திரி (வின்.) பார்க்க; see *meḷugu-t-tiri.*

*[மெழுகு + வத்தி]*

**மெழுகுவர்த்தி** *meḷugu-vartti,* பெ.(n.) மெழுகுத்திரி (வின்.) பார்க்க; see *meḷugu-t-tiri.*

*[மெழுகு + வர்த்தி. வத்தி → வர்த்தி]*

**மெழுகுவல்லி** *meḷugu-valli,* பெ.(n.) வட்டவல்லி; a creeper.

*[மெழுகு + அல்லி]*

**மெழுகுவுருண்டை** *meḷugu-vuruṇḍai,* பெ.(n.) பொன்னின் மாற்றினைக் காணப் பயன்படுத்தும் மெழுகு; a wax used to find the fineness or quality of gold.

*[மெழுகு + உருண்டை]*

சிரட்டைக்கரி தேங்காயெண்ணெய் மெழுகுடன் சேர்த்துருக்கி உருண்டை செய்தது.

**மெழுகுவெண்டி** *meḷugu-veṇḍi,* பெ.(n.) சுணையில்லாத வெண்டை; smooth surfaced lady's finger.

*[மெழுகு + வெண்டி. வெண்டை → வெண்டி]*

**மெழுகூட்டு-தல்** *meḷu-kūṭṭu-,* 5 செ. குன்றாவி. (v.t.) மூடி மறைத்தல்; to cover up, as with wax. *"நிக்ஷித்த திரவியத்தை உள்ளே வைத்து மெழுகூட்டின வோபாதியிறே" (ஈ.டு. 1, 2, 1).*

*[மெல் → மெல்கு → மெழுகு + ஊட்டு. மெழுகுதல் = குற்றத்தை மறைத்துப் பேசுதல், மெழுகூட்டுதல் = மூடி மறைத்தல்]*

**மெழுகெண்ணெய்** *meḻugeṇṇey,* பெ.(n.) 1. மரச் சாமானுக்கு மெருகிட உதவும் மெழுகு சேர்த்த பூச்சு நெய்மம் (இ.வ.); solution of wax and glue, used in polishing wood. 2. மெழுகு முதலியன சேர்த்துச் செய்யப்பட்ட எண்ணெய் வகை (தைலவ. தைல.); medicinal oil prepared with wax and other ingredients.

*[மெழுகு + எண்ணெய்]*

**மெழுகெழுது-தல்** *meḻugeḻudu-,* 5 செ.கு.வி. (v.i.) துணியில் அச்சடிக்க மெழுகால் உருவமெழுதுதல் (இ.வ.); to form designs with wax, in printing chintz.

*[மெழுகு + எழுது-,]*

**மெழுமெழு-த்தல்** *meḻu-meḻu-,* 4 செ.கு.வி. (v.i.) மெதுவாதல்; to be soft to the touch. *"மிடறு மெழுமெழுத் தோட" (திவ். பெரியாழ். 3,2,6).*

*[மெழு + மெழு-,]*

**மெள்ள** *meḷḷa,* வி.எ. (adv.) மெல்ல பார்க்க; see *mella. "மெள்ளவெழுந் தரியென்ற பேரரவம்" (திவ். திருப்பா. 6).*

*[மெல்ல → மெள்ள. முல் → மெல் → மெல்ல]*

**மெள்ளென** *meḷḷeṉa,* வி.எ. (adv.) மெல்லென பார்க்க; see *melleṉa. "மெள்ளனவே மொய்க்கு நெய்க் குடந்தன்னை யெறும்பு" (திருவாச. 6, 24).*

க. மெல்லனெ.

*[மெல்லென → மெள்ளென. மெல் → மெல்லென]*

**மென்கண்** *meṉ-kaṇ,* பெ.(n.) இரக்கம்; tenderness of heart, mercy. *"மென்கண் பெருகினறம் பெருகும்" (நான்மணி. 92).*

*[மென் + கண். மெல் → மென்]*

**மென்கணம்** *meṉ-kaṇam,* பெ.(n.) மெல்லினம் (நன். 158, உரை) பார்க்க; (Gram.) see *melliṉam.*

*[மென் + கணம். கள் → கண் → கணம். மென்கணம் = மெல்லின மெய்கள்]*

**மென்கால்** *meṉ-kāl,* பெ.(n.) மென்காற்று, தென்றல்; southern breeze, a gentle breeze. *"மென்கால் பூவளவிய தெய்த" (கம்பரா. வனம்புகு. 2).*

*[மென் + கால்]*

**மென்காற்று** *meṉ-kāṟṟu,* பெ.(n.) மென்கால் பார்க்க; see *meṉkāl.*

க. மெல்லெலர்.

*[மென் + காற்று. மெல் → மென்கால் → காற்று]*

**மென்கொடி** *meṉ-koḍi,* பெ.(n.) கொடிவகை (பிங்.); a species of creeper.

*[மென் + கொடி. மெல் → மென்]*

**மென்செய்** *meṉ-šey,* பெ.(n.) உழுது நீர்விட்டு மென்மையாகச் செய்யப்பட்ட நிலம்; wetland, prepared for cultivation. *"புன்செய் மென்செயும்"* (S.I.I.V. 285).

மறுவ. நன்செய்.

*[மென் + செய். மென்மையாக்கப்பட்ட நிலம். மெல் → மென்]*

**மென்சொல்** *meṉ-sol,* பெ.(n.) 1. இனிய சொல் (நாமதீப. 668); soft, pleasant word. 2. அன்பான சொல் (வின்.); kind word.

*[மென் + சொல்]*

**மென்தூறல்** *meṉ-tūṟal,* பெ.(n.) மென்மையாகப் பெய்யும் தூறல்; a gentle, light rain.

[redacted]. மெல்லரி.

*[மெல் → மென் + தூறல். தூறு → தூறல்]*

**மென்தொடர்க்குற்றியலுகரம்** *meṉtoḍar-k-kuṟṟiyalugaram,* பெ.(n.) மென்றொடர்க் குற்றியலுகரம் பார்க்க; [redacted] *meṉṟoḍar-k-kuṟṟiyalugaram.*

*[மென்தொடர் + குற்றியலுகரம்]*

**மென்பறை** *meṉ-paṟai,* பெ.(n.) பறவைக் குஞ்சு; young bird. *"மென்பறை விளிக்குரல்" (ஐங்குறு. 86).*

*[மென் + பறை. பறவை → பறை. இனி பற → பறை என்றுமாம்]*

**மென்பால்** *meṉ-pāl,* பெ.(n.) மருதநிலம் (பிங்.); agricultural tract. *"வளம் வீங்கிருக்கை ....... மென்பா றோறும்" (பதிற்றுப். 75, 8).*

*[மென் + பால். பகல் → பால்]*

**மென்பிணி** *meṉ-piṇi,* பெ.(n.) சிறுதுயில்; light sleep, nap. *"மயக்கத்துப் பொழுது கொண் மரபின் மென்பிணி யவிழ" (பதிற்றுப். 50, 21).*

*[மென் + பிணி]*

**மென்புரட்டு** *meṉ-puraṭṭu,* பெ.(n.) கைம்மாற்றிலே பணம் புரட்டுகை (யாழ். அக.); dealings in money obtained by simple loan and other temporary expedients.

*[மென் + புரட்டு. மெல் → மென். புரள் → புரட்டு]*

**மென்புலம்** *meṉ-pulam,* பெ.(n.) 1. நீர் வளத்தால் மெல்லிய மருதநிலம்; the agricultural tract. *"மென்புல வைப்பி னன்னாட்டுப் பொருந" (புறநா. 42).* 2. மணல் நிறைந்த நெய்தனிலம்; the maritime tract. *"மென்புலக் கொண்கன்" (ஐங். 119).*

*[மென் + புலம். மெல் → மென்]*

**மென்புற்று** *meṉ-puṟṟu,* பெ.(n.) மென்மையான சிலந்தி; soft cancer, encephaloid.

*[மெல் → மென் + புற்று]*

**மென்பேச்சு** *meṉ-pēccu,* பெ.(n.) இனிமையான பேச்சு; a gentle, kind word.

க. மெல்வாது, மெல்மாது.

*[மென் + பேச்சு]*

**மென்மெல** *meṉ-mela,* வி.அ. (adv.) மெல்ல மெல்ல; slowly, softly. *"மென்மெல வியலி வீதி போந்து" (பெருங். வத்தவ. 17, 99).*

*[மெல்(ல) + மெல]*

**மென்மேல்** *meṉ-mēl,* வி.அ. (adv.) மேன்மேலும் (கொ.வ.); further and further.

ம. மேன்மேல்

*[மேல்மேல் → மென்மேல்]*

**மென்மை** *meṉmai,* பெ.(n.) 1. நுண்மை; fineness, thinness. 2. தொடுவதற்குப் பஞ்சு போன்று இருக்கும் மென்மைத் தன்மை; tenderness, softness. *"கயவென கிறவி மென்மையு மாகும்" (தொல். சொல். 322),* *'பெண்கள் இயல்பாகவே மென்மை யானவர்கள்' (உ.வ.).* 3. (தொடுவதில்) மெதுவான முறை; gentle. *'தூங்கும் குழந்தையின் தலையை மென்மையாகத் தடவிக் கொண்டிருந்தாள் அன்னை' (உ.வ.).*

4. அதிக அரவமில்லாத தன்மை; (of. voice, volume etc.) soft. *'மென்மையான இசை, மிக மென்மையாகத்தான் கேட்டாள்' (உ.வ.).* 5. கடுமையான செயலால் எளிதில் பாதிக்கப்படும் தன்மை; gentle nature. *'அவரது மென்மையான மனம் புண்படும்படி ஏதாவது சொல்லியிருப்பாய்' (உ.வ.).* 6. மெல்லெழுத்து பார்க்க; see *mel-l-eluttu* (Gram.). *"மேவு மென்மை மூக்கு" (நன். 75).* 7. தாழ்வு; lowness, inferiority. *"மென்சொலேனும் ........ இகழார்" (கந்தபு. அவையட. 3).* 8. வலியின்மை; weakness, infirmity. *"மேவற்க மென்மை பகைவரகத்து" (குறள், 877).* 9. அமைதி; gentleness. *"மெல்லிய நல்லாருண் மென்மை" (நாலடி, 188).*

ம. மெலிவு, மெலிச்சன்; க. மெல்பு; து. மெலியுனி.

*[முல் → மெல் → மென் → மென்மை (மு.தா.281)]*

**மென்றல்** *menral,* தொ.பெ. (vbl.n.) மெல்லுதல்; chewing.

*[மெல் → மெல்லுதல் → மென்றல்]*

**மென்றுவிழுங்கு-தல்** *menru-vilungu-,* 5 செ.குன்றாவி. (v.t.) முழுமையாகச் சொல்லத் தயங்கி இடையிடுதல்; to be hesitant in-expressing openly. *'செலவழித்ததற்குக் கணக்குக் கேட்டால் மென்று விழுங்குகிறான்' (உ.வ.).*

*[மென்று + விழுங்கு-,]*

**மென்றொடர்** *menrodar,* பெ.(n.) மென்றொடர்க்குற்றியலுகரம் பார்க்க; see *menrodar-k-kurriyalugaram. "வன்றொடர் மென்றொடராயிரு மூன்றே யுகரங் குறுகிடன்" (தொல். எழுத். 406).*

*[மெல் + தொடர், மெல்தொடர் → மென்றொடர். மெல்லின மெய்யை ஈற்றயலாகக் கொண்ட சொல்]*

**மென்றொடர்க்குற்றியலுகரம்** *menrodar-k-kurriyalugaram,* பெ.(n.) மெல்லொற்றைத் தொடர்ந்து வரும் குற்றியலுகரம் (நன். 94); (Gram.) the final shortened 'u' in a word, preceeded by a soft consonant.

*[மென்றொடர் + குற்றியலுகரம்]*

தனிக்குறில் அல்லாத ஏனை யெழுத்துகளின் பின் அல்லது எழுத்துத் தொடர்களின் பின் கசடதபற ஆகிய வல்லினங்களின் மீது ஏறிவரும் உகரம் இயல்பான தன்மாத்திரையினின்று குறுகி யொலிக்கும். இறுதி குசுடுதுபுறு ஆகியவற்றிற்குமுன் மெல்லெழுத்து இடம் பெறுமாயின் அது மென்றொடர் குற்றியலுகரமாம். எ-டு. சங்கு, குரங்கு, பந்து, மருந்து.

**மென்றொடர்க்குற்றுகரம்** *menrodar-k-kurrugaram,* பெ.(n.) மென்றொடர்க் குற்றியலுகரம் பார்க்க ; see *menrodar-k-kurriyalugaram.*

*[மென்றொடர் + குற்றுகரம்]*

**மென்றொடர்மொழி** *menrodar-moli,* பெ.(n.) மென்றொடர்க்குற்றியலுகரம் பார்க்க (தொல். எழுத். 415); see *menrodar-k-kurriyalugaram.*

*[மென்றொடர் + மொழி]*

**மென்னகை** *mennagai,* பெ.(n.) ஒலி எழுப்பாமல் உதடு விரிய மெல்ல சிரிக்கும் சிரிப்பு; smile. *"கவர்தலைச் சூலி மென்னகை விளைத்து" (உபதேசகா. சிவவிரத. 163).*

மறுவ. இளநகை, புன்னகை; புன்சிரிப்பு.

க. மெல்நகெ.

*[மெல் + நகை]*

**மென்னடை** *mennadai,* பெ.(n.) 1. மெதுவான நடை; gentle, graceful gait. *"மென்னடை யள்ளம் பரந்து விளையாடும்" (திவ். நாய்ச். 5. 5).* 2. அன்னம் (பிங்.); swan.

க. மெல்நடெ.

*[மெல் + நடை]*

**மென்னாடி** *mennādi,* பெ.(n.) மென்மையான துடிப்பு; soft pulse.

*[மெல் + நாடி]*

**மென்னி** *menni,* பெ.(n.) மென்னை, 1 (வின்.) பார்க்க; see *mennai1.*

**மென்னிகட்டி** *menni-katti,* பெ.(n.) கால்நடை நோய்வகை; [redacted] cattle disease. (M.Cm.D.248).

*[மென்னி + கட்டி]*

**மென்னிலை** *mennilai,* பெ.(n.) நடன நளிநய (அபிநய)க் [redacted] (வின்.); a kind of hand-pose.



மென்னிலை

**மென்னீர்** *mennīr,* பெ.(n.) நன்னீர்; soft water.

*[மெல் + நீர்]*

**மென்னு–தல்** *mennu-,* 5 செ.குன்றாவி. (v.t.) நெம்புதல் (இ.வ.); to lift with [redacted] lever.

*[உன்னுதல் = உயரவெழுதல். உன்னு → (முன்னு) → மென்னு. மென்னுதல் - மேலெழுப்புதல், நெம்புதல்]*

**மென்னை** *mennai,* பெ.(n.) 1. மிடறு (வின்.); throat. 2. கதுப்பு (யாழ்.அக.); cheek.

*[முள் → மொள் → மொத்து = திரட்சி, திரண்டது (மு.தா.210) முள் → முல் → முன் → முன்னை = திரண்டு காணப்படும் தொண்டை, கதுப்பு, முன்னை → மன்னை = தொண்டை, கதுப்பு. மன்னை → மென்னை]*

**மென்னைக்கட்டி** *mennai-k-katti,* பெ.(n.) 1. தொண்டைக்கட்டி; goitre. 2. மன்னைக் கட்டி, பொன்னுக்கு வீங்கி; mumps.

*[மென்னை + கட்டி. மன்னை → மென்னை]*

**மென்னைப்பிடிக்க** *mennai-p-pidikka,* வி.எ. (adv.) கழுத்து முட்ட (கொ.வ.); to the full, as is eating.

*[மென்னை + பிடிக்க]*

**மென்னையைப்பிடி–த்தல்** *mennaiyai-p-pidi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. கழுத்தை நெரித்தல்; to throttle. 2. கட்டாயப்படுத்தி (நிர்ப்பந்தித்து) வேண்டுதல் (கொ.வ.); to importunate.

*[மென்னையை + பிடி–,]*

**மெனக்கெடு[1]–தல்** *menakkedu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. வீணாதல்; to be wasted, as time, labour, etc. *'என் வேலையெல்லாம் மெனக்கெட்டது'.* 2. வேறு வேலைகளை விட்டு ஒன்றிற் கவனங் கொள்ளுதல்; to act with a single purpose, as setting aside everything else. *'அதை மெனக்கெட்டுச் செய்து முடித்தான்'.*

ம. மெனக்கெடு; து. மெனக்கடு, மெனெக்கடு (ஓய்வு, விடுப்பு, ஒழிவு).

*[வினை + கெடு = வினைக்கெடு → மெனக்கெடு–,]*

**மெனக்கெடு²–த்தல்** *menakkeḍu-,* 17 செ.குன்றாவி. (v.t.) மெனக்கெடுத்து–தல் பார்க்க; see *mena-k-keḍuttu-,* *'பொழுதை யெல்லாம் மெனக் கெடுக்கிறான்'.*

*[வினை + கெடு = வினைக்கெடு → மெனக்கெடு–,]*

**மெனக்கெடுத்து–தல்** *mena-k-keḍuttu-,* 18 செ.குன்றாவி. (v.t.) பயனின்றிப் போகச் செய்தல்; to waste, as one's time or labour. *'என் காலத்தை மெனக் கெடுத்து விட்டாய்'.*

*[மெனக்கெடு → மெனக்கெடுத்து–,]*

**மெனக்கேடு** *mena-k-kēḍu,* பெ.(n.) 1. வீணானது; that which is useless. 2. செயலறுகை; inactivity. 3. தாமதம்; delay.

ம. மெக்கெடு; து. மெனக்கடு, மெனெக்கடு.

*[வினைக்கேடு → மெனக்கேடு]*

# மே

**மே¹** *mē,* பெ.(n.) 'ம்' என்ற மெய்யெழுத்தும் 'ஏ' என்ற உயிரெழுத்தும் இணைந்த உயிர்மெய் (அசை) எழுத்து; the syllable formed by adding the long vowel *'ē'* to the consonant 'm'.

*[ம் + ஏ]*

**மே²** *mē,* பெ.(n.) மேவு [redacted] (வின்.) பார்க்க; [redacted] *mēvu 3.*

*[ஏ → மே]*

**மே³** *mē,* பெ.(n.) மேம்பாடு; excellence. *"மேதக மிகப்பொலிந்த........ ........... வயக்களிறு" (மதுரைக். 14).*

*[ஏ → மே (சு.வி.57)]*

**மே⁴** *mē,* பெ.(n.) வாழைப்பழச்சாறு; plantain fruit essence.

**மேக்கடி¹–த்தல்** *mēkkaḍi-,* 4 செ.கு.வி. (v.i.) ஆப்பறைதல் (வின்.); to drive in a wedge or stake.

*[மேக்கு² + அடி–,]*

**மேக்கடி²–த்தல்** *mēkkaḍi-,* 4 செ.கு.வி. (v.i.) வஞ்சித்தல் (வின்.); to deceive.

*[மேக்கு = பிளவுபடுத்தும் ஆப்பு. மேக்கடித்தல் = ஆப்பறைதல், அதைப்போல் பிளவுண்டாக்கும் செயலில் ஈடுபடுதல், வஞ்சித்தல்.]*

**மேக்கு¹** *mēkku,* பெ.(n.) 1. மேற்கு (பிங்.); west. 2. மேலிடம்; height, high place. *"மேக்கெழு பெருஞ்சினை" (குறுந். 26).* 3. மேலான தன்மை; superiority. *"மேக்கு நீங்கிய வெள்ள வுவகையால்" (கம்பரா. மீட்சி. 26).*

*[மேல் → மேற்கு → மேக்கு = மலையாலுயர்ந்த திசை அல்லது கதிரவன் செலவின் பிற்பகுதிக்குரிய திசை (மு.தா. 74), மேடான இடம், மேட்டைப் போல் உயர்ந்து காணப்படும் தன்மை.]*

**மேக்கு²** *mēkku,* பெ.(n.) 1. ஒரு பக்கம் பருத்தும், பருத்த பக்கத்திலிருந்து சரிவாகச் சென்று மறுபக்கம் மெலிவான தகடு போலக் காணப்படுவதும் பிளப்பதற்கு அல்லது உறுதியாக நிறுவுவதற்குப் பயன்படுத்து வதுமான சிறு மரக்கட்டை அல்லது மாழை

(உலோகம்), ஆப்பு (வின்.); wedge. 2. மரவாணி (இ.வ.); wooden nail, wooden peg.

*[இடுக்கு = இடுக்கிக் கொள்ளக் கூடிய இடம், விரல்களுக்கிடையே, பற்களுக்கிடையே காணப்படும் சிறு சந்து. இடுக்கு → இக்கு = இடை. இக்கு → (எக்கு) → மெக்கு → மேக்கு = பிளவுபடுத்தும் ஆப்பு]*

**மேகக்கட்டி** *mēga-k-kaṭṭi,* பெ.(n.) அரத்தக் கெடுதலினாலுண்டாகும் கட்டி வகை (இ.வ.); boil resulting from impure blood, venereal eruption.

*[மேகம் + கட்டி. குள் → குட்டி → கட்டி]*

**மேகக்கடுப்பு** *mēga-k-kaḍuppu,* பெ.(n.) கூடா ஒழுக்கத்தினால் ஏற்படும் வெட்டை நோய்ச்சுருக்கு; irritation caused by venereal heat.

*[மேகம் + கடுப்பு. கடு → கடுப்பு.]*

**மேகக்கரப்பான்** *mēga-k-karappāṉ,* பெ.(n.) மேகநீராலுண்டாகும் கரப்பான் வகை, சொறி சிரங்கு; a skin disease characterized by the development of blisters on the body (M.L.).

*[மேகம் + கரப்பான்]*

**மேகக்கருப்பக்கல்** *mēga-k-karuppa-k-kal,* பெ.(n.) மேகக்கல் பார்க்க (யாழ்.அக.); see *mēga-k-kal.*

*[மேகம் + கருப்பம் + கல்]*

**மேகக்கருவாதி** *mēga-k-karuvādi,* பெ.(n.) இஞ்சி; ginger.

*[மேகம் + கருவாதி]*

**மேகக்கல்** *mēga-k-kal,* பெ.(n.) ஆட்டுமணத்தி (ஆட்டுரோசனை) (வின்.); bezoar of the sheep.

*[மேகம் + கல்]*

**மேகக்கற்பகக்கல்** *mēga-k-kaṟpaga-k-kal,* பெ.(n.) முடவாட்டுக்கல்; a kind of mineral stone.

*[மேகம் + கற்பகம் + கல்]*

**மேகக்காக்கையோன்** *mēga-k-kākkaiyōṉ,* பெ.(n.) பிறவி நஞ்சுவகை (யாழ்.அக.); a mineral poison.

**மேகக்காங்கை** *mēga-k-kāṅgai,* பெ.(n.) 1. ஆண்பிறப்புறுப்பில் சீழ்வடிதல், சிறுநீர் கழிக்கும் போது வலியுண்டாதல் முதலிய அறிகுறிகளைக் கொண்ட ஒரு பால்வினை நோய் (இங்.வை); gonorrhoea. 2. கணைச் சூடு (இ.வ.); a disease in children.

*[மேகம் + காங்கை. குள் → (கள்) → காள் → காய். காய்தல் = எரிதல். காய் → (காய்கை) → காங்கை]*

**மேகக்காந்தல்** *mēga-k-kāndal,* பெ.(n.) பால்வினை நோயழற்சி; venereal inflammation.

*[மேகம் + காந்தல். காய்தல் = எரிதல். காய் → (காய்ந்து) → காந்து → காந்தல்]*

**மேகக்காந்தி**[1] *mēga-k-kāndi,* பெ.(n.) ஒருவகை பால்வினைநோய்; a kind of venereal disease.

**மேகக்காந்தி**[2] *mēga-k-kāndi,* பெ.(n.) கிளுவை; balsam tree, balsmondendron berryi.

*[மேகம் + காந்தி]*

**மேகக்காய்** *mēga-k-kāy,* பெ.(n.) கடுக்காய்; galnut, terminellia chebula.

*[மேகம் + காய்]*

**மேகக்காரகப்படை** *mēga-k-kāraga-p-padai,* பெ.(n.) பால்வினை நோயால் வரும் ஒருவகை தோல் நோய்; an eczerna caused by venereal affection or heat blenorrhoea.

*[மேகக்காரகம் + படை]*

**மேகக்காரகம்**[1] *mēga-k-kāragam,* பெ.(n.) பால்வினை நோயால் வரும் தோல் நோய் அதாவது கிரந்தி படை தடிப்பு முதலியன குருக்கள்; skin affection due to venereal causes.

*[மேகம் + காரகம்]*

**Skt.** *kāraka* > த. காரகம்.

**மேகக்காரகம்**[2] *mēga-k-kāragam,* பெ.(n.) கைகால் விரல்களிற் காணும் வெடிப்பு, அரிப்பு; fisture of leg or toes. 2. நீர்க்கசிவு; pus of fisture of toes.

*[மேகம் + காரகம்]*

**Skt.** *kāraka* > த. காரகம்.

**மேகக்காரகவெண்ணெய்** *mēga-k-kāraga-v-enney,* பெ.(n.) குளிகை யெண்ணெய், பால்வினை நோய்க்காக உருவாக்கப்படும் எண்ணெய்; an oil, medicated preparation given for skin affections caused by venereal heat.

*[மேகக்காரகம் + எண்ணெய். சிற்றாமணக்கெண்ணெய், வெள்ளை வெங்காயம் 5 பங்கும் ஏலம் வகைக்கு 1 பங்கும் அரைத்து எண்ணெயிற் கலந்து சூரிய புடத்தில் வைத்தெடுத்த எண்ணெய்.]*

**மேகக்கிரந்தி** *mēga-k-kirandi,* பெ.(n.) கூடா நட்பினால் ஏற்படும் கிரந்திப்புண்; syphilis sore and bubo.

மறுவ. பறங்கிப் புண்.

*[மேகம் + கிரந்தி]*

**Skt.** *granthi* > த. கிரந்தி.

**மேகக்கிரந்திபோக்கி** *mēga-k-kirandi-pōkki,* பெ.(n.) மேகக் கிரந்தியை நீக்கும் மருந்து; anti syphilitic.

*[மேகக்கிரந்தி + போக்கி. போக்கு → போக்கி.]*

**மேகக்கிராணி** *mēga-k-kirāṇi,* பெ.(n.) மேகத் தொடர்பாய்க் காணும் ஒரு வகைக் கிராணிக் கழிச்சல்; chronic diarrhoea caused by the venereal defects in the system.

*[மேகம் + கிராணி]*

**Skt.** *grahaṇi* > த. கிராணி.

**மேகக்கினி** *mēga-k-kiṉi,* பெ.(n.) மின்னல்; lightning.

*[மேகம் + அக்கினி. த. அழன் → அழனி → (அகனி) →* **Skt.** agni > *த. அக்கினி.]*

**மேகக்குத்தல்** *mēga-k-kuttal,* தொ.பெ. (vbl.n.) மேகவலி; piercing pain due venereal causes.

*[மேகம் + குத்தல்]*

**மேகக்குலாந்தகன்** *mēga-k-kulāntakaṉ,* பெ.(n.) மேக நோய்களைத் தீர்க்கும் வாணாள் (ஆயுள்) வேத மருந்து வில்லை; pill that is said to cure all the varieties of megam - venereal affections.

**மேகக்குறிஞ்சி** *mēga-k-kuriñji,* பெ.(n.) ஒரு வகை இசை; a musical mode.

*[மேகம் + குறிஞ்சி]*

**மேகக்கூட்டம்** *mēga-k-kūṭṭam,* பெ.(n.) மழைமுகிற் கூட்டத்தின் செலவு; passage of rain-clouds.

*[மேகம் + கூட்டம். கூடு → கூட்டம்.]*

**மேககர்ச்சனை** *mēga-karccaṉai,* பெ.(n.) மேகமுழக்கம் (வின்.) பார்க்க; see *mēgamuḻakkam.*

*[மேகம் + கர்ச்சனை]*

**Skt.** *garjana* > த. கர்ச்சனை.

**மேககர்ச்சிதம்** *mēgakarccidam,* பெ.(n.) மேகமுழக்கம் (வின்.) பார்க்க; see *mēga-muḻakkam.*

*[மேகம் + கர்ச்சிதம்]*

**Skt.** *garjana* > த. கர்ச்சிதம்.

**மேககாந்தி** *mēga-kāndi,* பெ.(n.) மேகக் காங்கை[1] (வின்.) பார்க்க; see *mēga-k-kāṅgai*[1].

*[மேகம் + காந்தி. காந்து → காந்தி]*

**மேககாரகம்** *mēga-kāragam,* பெ.(n.) மேகக்காங்கை, 1 (வின்.) பார்க்க; see *mēga-k-kāṅgai1.*

*[மேகம் + காரகம்]*

**Skt.** *kāraka* > த. காரகம்.

**மேககாலம்** *mēga-kālam,* பெ.(n.) கார்காலம் (யாழ்.அக.); rainy season.

*[மேகம் + காலம்]*

**மேககுலாந்தகன்** *mēga-kulāndagaṉ,* பெ.(n.) பால்வினைநோயைப் போக்கும் ஒருவகைக் கூட்டு மருந்து (பதார்த்த. 1214); a compound medicine for venereal, urinary and other diseases.

*[மேகம் + குலாந்தகன்]*

**மேககெற்சனம்** *mēga-keṟcaṉam,* பெ.(n.) மேகமுழக்கம் (யாழ்.அக.) பார்க்க; see *mēga-muḻakkam.*

*[மேகம் + கெற்சனம்]*

**Skt.** *garjana* > த. கெற்சனம்.

**மேகச்சடை** *mēga-c-caḍai,* பெ.(n.) கருப்பு மனோசிலை; a black variety of arsenic.

*[மேகம் + சடை]*

**மேகச்சத்துரு** *mēga-c-catturu,* பெ.(n.) ஆவாரை (பொன்னாவரை); a shrub-cassia auriculata.

**மேகச்சாய்** *mēga-c-cāy,* பெ.(n.) ஒருவகை நஞ்சு (சீர்பந்த பாடாணம்); a kind of arsenic.

*[மேகம் + சாய்]*

**மேகச்சாயை** *mēga-c-cāyai,* பெ.(n.) நீலக்கல்; one of nine gems, saffire.

*[மேகம் + சாயை]*

**மேகச்சிரங்கு[1]** *mēga-c-ciraṅgu,* பெ.(n.) பால்வினை நோய் தொடர்பாய் வரும் ஒருவகைச் சொறி சிரங்கு; itch due to venereal heat.

*[மேகம் + சிரங்கு]*

**மேகச்சிரங்கு**[2] *mēga-c-cirangu,* பெ.(n.) தீய நீரால் தோன்றுஞ் சிரங்குவகை; erysipelas. (M.L.).

*[மேகம் + சிரங்கு]*

**மேகச்சிலை** *mēga-c-cilai,* பெ.(n.) 1. வழலை (மாக்கல்); soap-stone. 2. சுண்ணாம்புக் கல்; kunkar stone.

மறுவ. மாக்கல், வங்கக்கல்.

*[மேகம் + சிலை]*

**Skt.** *silā* > த. சிலை.

**மேகச்சிறுநீர்** *mēga-c-cirunīr,* பெ.(n.) நீரிழிவு; passing copious urine.

*[மேகம் + சிறுநீர்]*

**மேகச்சுருக்கு** *mēga-c-curukku,* பெ.(n.) மேகத்தினால் ஏற்படும் நீர்க்கடுப்பு; dysuria caused by venereal heat.

*[மேகம் + சுருக்கு]*

**மேகச்சூடு** *mēga-c-cūḍu,* பெ.(n.) 1. மேக வெட்டை எனப்படும் மேகநோய்; greet gonorrhoea an inflammatory ailment of the genitals of both sex attended with secretion. 2. மேகக்காங்கை பார்க்க; see *mēga-k-kāngai.*

*[மேகம் + சூடு. சுள் → சுடு → சூடு]*

**மேகச்செலவு** *mēga-c-celavu,* பெ.(n.) மழைமுகிற் கூட்டத்தின் செலவு; passage of rain clouds.

*[மேகம் + செலவு]*

**மேகச்சொறி** *mēga-c-cori,* பெ.(n.) மேகச் சிரங்கு; venereal itch.

*[மேகம் + சொறி]*

**மேகச்சோரணம்** *mēga-c-cōraṇam,* பெ.(n.) ஒருவகை நீலநிற ஒளிக்கல் (ராஜா வர்த்தம்) (யாழ்.அக.); a blue coloured gem.

**மேகசஞ்சாரம்**[1] *mēga-šañjāram,* பெ.(n.) பால்வினை நோய் படருகை; spreading of venereal virus.

*[மேகம் + சஞ்சாரம்]*

**Skt.** *šañcāra* > த. சஞ்சாரம்

**மேகசஞ்சாரம்**[2] *mēga-šañjāram,* பெ.(n.) மேகச்செலவு பார்க்க; see *mēga-c-celavu.*

*[மேகம் + சஞ்சாரம்]*

**Skt.** *šañcāra* > த. சஞ்சாரம்

**மேகசஞ்சாரி** *mēga-šañjāri,* பெ.(n.) மேகநாதமூலி; an herb.

**மேகசஞ்சீவி** *mēga-šañjīvi,* பெ.(n.) மேகசஞ்சாரி; an herb.

**மேகசடை** *mēga-šaḍai,* பெ.(n.) கரிய மனோசிலை (சங்.அக.); black realgar.

**மேகசம்** *mēgašam,* பெ.(n.) முத்து (யாழ்.அக.); pearl.

*[மேகம் + அஜம் – மேகஜம் → மேகசம் = மேகத்தில் பிறக்கும் கோழி முட்டைப் பருமனுள்ள ஒரு முத்து.]*

**Skt.** a-ja > த. அசம்.

**மேகசலம்** *mēga-šalam,* பெ.(n.) பனிக் குடத்து நீர்; liquor amni.

*[மேகம் + சலம்]*

**மேகசலவித்தன்** *mēga-šalavittaṉ,* பெ.(n.) பூநீறு; salt grown in the soil of fuller's earth during new moon or full moon days.

**மேகசாதனி** *mēga-šādaṉi,* பெ.(n.) செம்பருத்தி; red cotton plant, gossypium.



மேகசாதனி

**மேகசாரம்**[1] *mēga-šāram,* பெ.(n.) 1. சூடம் (கற்பூரம்) (சங்.அக.); camphor. 2. காய்ச்சும் உப்பு; a prepared salt.

*[மேகம் + சாரம். சாறு → சாறம் → சாரம்.]*

**மேகசாலம்** *mēga-šālam,* பெ.(n.) 1. முகிற் கூட்டம் (வின்.); range of clouds. 2. ஒரு [redacted] மணி (யாழ்.அக.); a gem.

*[மேகம் + சாலம்]*

**Skt.** *jāla* > த. சாலம்.

**மேகசிந்தகம்** *mēga-šindagam,* பெ.(n.) சாதகப்புள்; a bin-lark.

*[மேகம் + சிந்தகம்]*

**மேகசீவகம்** *mēga-šīvagam,* பெ.(n.) மேகசிந்தகம் பார்க்க; see *mēga-šindagam.*

**மேகசுரம்** *mēga-šuram,* பெ.(n.) மேக நோயால் வரும் காய்ச்சல்; fever due to venereal causes (M.L.).

*[மேகம் + சுரம்]*

**மேகசூலை** *mēga-šūlai,* பெ.(n.) மேக நோயால் உடற்பொருத்தில் உண்டாகும் விறைப்புத் தன்மை, கை கால் குடைச்சல்; formation of stiff joint. anchylosis.

*[மேகம் + சூலை. சுல் → சூல் = குத்தும் கூரிய படைக்கலம். சூல் → சூலம் = முக்கவர்வேல். சூல் → சூலை = ஒருசார் நோய்.]*

த. சூலை > **Skt.** *sūlā.*

**மேகசொர்ணக்கல்** *mēga-sorṇa-k-kal,* பெ.(n.) ஒரு வகை மணிக்கல்; a kind precious stone, lapis lazuli.

*[மேகம் + சொர்ணம் + கல்]*

**Skt.** *svarṇa* > த. சொர்ணம்.

**மேகசோரணம்** *mēga-šōraṇam,* பெ.(n.) ஒருவகை நீலநிறக்கல் (ராஜாவர்த்தம்) (யாழ்.அக.); a blue coloured gem.

*[மேகம் + சோரணம்]*

**Skt.** *cōra* > த. சோரணம்.

**மேகடம்பம்** *mēgaḍambam,* பெ.(n.) நிழலுக்காக அமைக்கப்படும் ஒப்பனையுடன் கூடிய மேற்கட்டி (விதானச்சீலை) (கல்.அக.); decorated canopy, for shade.

*[மேல் + கடம்பம் – மேகடம்பம்]*

**மேகத்தடிப்பு** *mēga-t-taḍippu,* பெ.(n.) மேக நோய் காரணமாக உடம்பில் பல இடங்களிலும் வீக்கம் காணல்; venereal

patches of swelling in several parts of the body.

*[மேகம் + தடிப்பு. தடி → தடிப்பு. 'பு' தொ.பெ.ஈறு.]*

**மேகத்தண்டம்** *mēga-t-taṇḍam,* பெ.(n.) தேங்காய்; cocoanut.

*[மேகம் + தண்டம்]*



மேகத்தண்டம்

**மேகத்தருள்சிலை** *mēga-t-taruḷ-šilai,* பெ.(n.) கருங்கல்; granite stone.

*[மேகத்தருள் + சிலை]*

**Skt.** *silā* > த. சிலை.

**மேகத்திமிர்** *mēga-t-timir,* பெ.(n.) மேக நோயால் உடம்பிலுண்டாகும் திமிர்; benumb due to venereal causes.

*[மேகம் + திமிர்]*

**மேகத்திமிரம்** *mēga-t-timiram,* பெ.(n.) கருவிழியில் மேகம் கம்மியது போல் இருளடையச் செய்யும் ஓர் கண்ணோய்; an eye disease of the pupil.

*[மேகம் + திமிரம். திமிர் → திமிரம்.]*

**மேகத்திற்களிக்கும்தாசி** *mēgattir-kaḷikkum-dāši,* பெ.(n.) மயிலிறகு; feather of peacock.



மேகத்திற்களிக்கும்தாசி

**மேகத்திற்பிறந்தவுப்பு** *mēgattir-piṛanda-vuppu,* பெ.(n.) வெடியுப்பு; salt petre.

*[மேகத்தில் + பிறந்த + உப்பு]*

**மேகத்தின்கருப்பக்கல்** *mēgattiṉ-karuppa-k-kal,* பெ.(n.) 1. ஒருவகை நஞ்சு; a kind of poison. 2. ஆட்டு மணத்தி (ஆட்டுரோசனை); bezoar of the sheep.

*[மேகத்தின் + கருப்பக்கல்]*

**மேகத்தின்விந்து** *mēgattiṉ-vindu,* பெ.(n.) பூநாகம் (மூ.அ.); earthworm.

*[மேகத்தின் + விந்து. வித்து → விந்து]*

**மேகத்தினவு** *mēga-t-tiṉavu,* பெ.(n.) மேகச்சொறி பார்க்க; see *mēga-c-coṟi.*

*[மேகம் + தினவு]*

**மேகத்துவாரம்** *mēga-t-tuvāram,* பெ.(n.) வான்வெளி (ஆகாயம்) (யாழ்.அக.); sky.

*[மேகம் + துவாரம்]*

**Skt.** *dvāra* > த. துவாரம்

**மேகத்தொனி** *mēga-t-toṉi,* பெ.(n.) மேகமுழக்கம் (வின்.) பார்க்க; see *mēga-muḻakkam.*

*[மேகம் + தொனி]*

**Skt.** *dhvani* > த. தொனி.

**மேகத்தொனியான்** *mēga-t-toṉiyāṉ,* பெ.(n.) அவுரி; indigo plant-indigoferra tinctoria.


மேகத்தொனியான்

**மேகத்தோயம்** *mēga-t-tōyam,* பெ.(n.) காய்ச்சிய உப்பு; a prepared salt.

*[மேகம் + தோயம்]*

**மேகதனு** *mēga-daṉu,* பெ.(n.) வானவில்; rainbow. *"மேகதனு......... நின்றதொக்குமே" (இரகு. அயனெழுச்சி. 40).*

மறுவ. இந்திரவில்.

*[மேகம் + தனு]*

**Skt.** *dhanus* > த. தனு.

**மேகதாரி** *mēga-dāri,* பெ.(n.) மயிலிறகு (யாழ்.அக.); feather of peacock.

*[மேகம் + தாரி]*

**Skt.** *dhāri* > த. தாரி.

**மேகதிமிரம்** *mēga-timiram,* பெ.(n.) பார்வையை மங்கச் செய்யும் கண்ணோய் வகை (சீவரட்.); a disease of the eye that clouds vision.

*[மேகம் + திமிரம்]*

**மேகதீபம்** *mēga-dībam,* பெ.(n.) மின்னல் (யாழ்.அக.); lightning.

*[மேகம் + தீபம்]*

**Skt.** *dīpa* > த. தீபம்

**மேகதேகம்** *mēga-dēgam,* பெ.(n.) மேகநோய்கொண்ட உடல்; body afflicted by venereal complaints.

*[மேகம் + தேகம்]*

**Skt.** *dēha* > த. தேகம்

**மேகநாசம்** *mēga-nāšam,* பெ.(n.) வெண் காரம்; borax.

*[மேகம் + நாசம்]*

**மேகநாதத்திமூலி** *mēga-nādatti-mūli,* பெ.(n.) கட்டுக்கொடி; coagulating creeper - cocculus villosus.

**மேகநாதப்பூண்டு** *mēga-nāda-p-pūṇḍu,* பெ.(n.) ஒருவகைப் பூண்டு; a herb.

*[மேகநாதம் + பூண்டு. புண் → பூண் → பூண்டு.]*

**மேகநாதம்[1]** *mēga-nādam,* பெ.(n.) மேகத்தில் உண்டாகும் ஒலி, இடி; rumbling of clouds, thunder.

து. மேகநாதெ.

*[மேகம் + நாதம்]*

**Skt.** *nāda* > த. நாதம்.

**மேகநாதம்[2]** *mēga-nādam,* பெ.(n.) 1. சிறுகீரை (சூடா.); a species of amaranth. 2. பலாசம் (சங்.அக.); palas tree. 3. பச்சிலை (சங்.அக); gemboge. 4. மலைப்பச்சை; tree yielding white flowers.

**மேகநாதரசம்** *mēga-nāda-rašam,* பெ.(n.) மூலிகை மருந்து, வெள்ளி, வெண்பித்தளை, செம்பு, கந்தகம் சேர்த்து செங்கீரைச் சாற்றால் அரைத்து புடம் போட்டு எடுக்கப்பெற்ற வாணாள் வேத (ஆயுர்வேத) மருந்து; a Ayurvedic medicine composed of silver, white brass, copper in equal quantities to which is added three part of sulphur. The whole mixture is pounded well with the juice of red amaranthus spinose and calcined in (cowdung 100 cakes) or gajaputtam. It is prescribed for all kind of fever, thirst and burning sensation.

*[மேகநாதம் + ரசம்]*

**Skt.** *rasa* > த. ரசம்.

**மேகநாதன்[1]** *mēga-nādan,* பெ.(n.) 1. இந்திரசித்து; Indrajit. *"அடல் மேகநாதன் புகுந் திலங்கை மேயநாள்" (கம்பரா. திருவவ. 10).* 2. வருணன் (யாழ்.அக.); *Varuna.*

*[மேகம் + நாதன்]*

**Skt.** *nātha* > த. நாதன்.

**மேகநாதன்[2]** *mēga-nādan,* பெ.(n.) ஒரு வகை உப்பு (நவச்சாரம்) (சங்.அக.); sal-ammoniac.

**மேகநாதன்[3]** *mēga-nādan,* பெ.(n.) சிறுகீரை; amaranthus.

**மேகநாதி** *mēga-nādi,* பெ.(n.) 1. கட்டுக் கொடி; coagulating creeper-cocculus villosus. 2. கணங்கன் புல்; a kind of grass.

**மேகநிறத்தி** *mēga-niratti,* பெ.(n.) கருநெல்லி; black Indian gooseberry.

*[மேகம் + நிறத்தி]*




**மேகநிறப்பாடாணம்** *mēga-nira-p-pādāṇam,* பெ.(n.) கருநிற நஞ்சு; arsenic of black colour.

*[மேகநிறம் + பாடாணம்]*

**Skt.** *pāsāṇa* > த. பாடாணம்.

**மேகநிறம்** *mēga-niram,* பெ.(n.) நீலத் தாமரை; blue lotus.

*[மேகம் + நிறம்]*

**மேகநீர்[1]** *mēga-nīr,* பெ.(n.) மழைநீர்; water from the sky, rain water.

*[மேகம் + நீர்]*

**மேகநீர்[2]** *mēga-nīr,* பெ.(n.) 1. மேகக் காங்கை 1, 2 பார்க்க; see *mēga-k-kāṅgai 1,2.* 2. தீயநீர் (வின்.); impure blood in the body, venereal virus.

*[மேகம் + நீர்]*

**மேகநீர்க்கோவை** *mēga-nīr-k-kōvai,* பெ.(n.) கூடா ஒழுக்கத்தினால் ஏற்படும் தடுமன்; cold affection due to venereal infection.

*[மேகம் + நீர் + கோவை]*

**மேகநீர்ப்பாய்ச்சல்**[1] *mēga-nīr-p-pāyccal,* பெ.(n.) ஒரு வகைக் கண்நோய்; a kind of eye disease.

*[மேகம் + நீர் + பாய்ச்சல். 'அல்' தொ.பெ.ஈறு]*

**மேகநீர்ப்பாய்ச்சல்**[2] *mēga-nīr-p-pāyccal,* பெ.(n.) மேகக்காங்கை, 1 பார்க்க; see *mēga-k-kāṅgai 1.*

*[மேகம் + நீர் + பாய்ச்சல். 'சல்' தொ.பெ.ஈறு.]*

**மேகநோய்** *mēga-nōy,* பெ.(n.) தீய நீரால் உண்டாம் நோய்வகை; syphilis, primary or secondary.

*[மேகம் + நோய். ஆணின் பிறப்புறுப்பில் புண்களை உண்டாக்கும் ஒரு பால்வினை நோய்]*

**மேகநோய்நூல்** *mēga-nōy-nūl,* பெ.(n.) மேகவியல் நூல்; urology, the study of the urinary system.

*[மேகம் + நோய் + நூல்]*

**மேகப்பச்சை** *mēga-p-paccai,* பெ.(n.) ஒரு [redacted] பச்சைக்கல் (சங்.அக.); a variety of green stone, one of nine gems.

*[மேகம் + பச்சை]*

**மேகப்படலம்** *mēga-p-paḍalam,* பெ.(n.) ஒரு வகைக் கண்ணோய்; an eye disease.

*[மேகம் + படலம்]*

**மேகப்படை** *mēga-p-paḍai,* பெ.(n.) மேகத் தொடர்பு மாசுவினால் உடம்பில் காணும் ஒரு வகைப்படை, தோல் மேலுண்டாகும் சொறிவகை; a kind of spreading skin disease due to venereal causes, ringworm (M.L.).

*[மேகம் + படை]*

**மேகப்பற்று** *mēga-p-paṟṟu,* பெ.(n.) ஒரு வகை மேகநோய்; syphilitic psoriasis. (M.L.).

*[மேகம் + பற்று]*

**மேகப்பிடகம்** *mēga-p-piḍagam,* பெ.(n.) மேகக்கட்டி; venereal abscess.

*[மேகம் + பிடகம். பிள் → பிளா → பிழா = வாயகன்ற ஓலைக் கொட்டான். பிழா → பிடா = பெட்டி. பிடா → பிடகு → பிடகம் = தட்டு, பெட்டி, கொப்புளம்]*

**மேகப்பிடிப்பு** *mēga-p-piḍippu,* பெ.(n.) மேகத்தால் ஏற்படும் மூட்டு பிடிக்கை; stiffness of joints due to venereal affections.

*[மேகம் + பிடிப்பு. பிடி → பிடிப்பு, 'பு' தொ.பெ.ஈறு]*

**மேகப்பிரமிலம்** *mēga-p-piramilam,* பெ.(n.) நீர் ஒழுக்கு; urethral discharges due to venereal affections.

*[மேகம் + பிரமிலம்]*

Skt. *pramēha* > த. பிரமிலம்.

**மேகப்புட்பம்** *mēga-p-puṭpam,* பெ.(n.) 1. நீர்; water. 2. மழை; rain. 3. வஞ்சி; lady.

*[மேகம் + புட்பம்]*

Skt. *puṣpa* > த. புட்பம்.

**மேகப்புடகை** *mēga-p-puḍagai,* பெ.(n.) மேகப்பிடகம் பார்க்க; see *mēga-p-piḍagam.*

*[மேகப்பிடகம் → மேகப்புடகம் → மேகப்புடகை]*

**மேகப்புடை** *mēga-p-puḍai,* பெ.(n.) 1. பறங்கிப்புண்வகை (இங்.வை.); secondary syphillis. 2. உடல் மரத்துப்போவதால் உண்டாகும் நோய் வகை (திமிர்வாதம்) (பைஷஜ.); a kind of spasm proceeding from numbness, a kind of leprosy.

*[மேகம் + புடை]*

**மேகப்புண்** *mēga-p-puṇ,* பெ.(n.) கூடா வொழுக்கத்தினால் பரவும் கொறுக்கு நோய் (இங்.வை.); sore due to veneral causes, venereal sore or ulcer. syphilis, soft chancre.

மறுவ. பறங்கிப்புண்.

*[மேகம் + புண்]*

**மேகப்புரை** *mēga-p-purai,* பெ.(n.) மேகப்பிளவை; sinus of venereal abscess.

*[மேகம் + புரை. புல் → புர் → புரை]*

**மேகப்புள்** *mēga-p-puḷ,* பெ.(n.) வானம்பாடி (பிங்.); sky-lark. *"மேகப் புள் வயிற் பிறந்த புட் போல்" (சீவக. 2897).*

*[மேகம் + புள்]*




**மேகப்புற்று** *mēga-p-puṟṟu,* பெ.(n.) மேக நோய் முதிர்வினால் ஏற்படும் புண், கட்டிவகை (வின்.); chronic ulcer due to venereal affection, a venereal eruption.

*[மேகம் + புற்று. புல் → புற்று]*

**மேகப்புறவதம்** *mēga-p-puṟavadam,* பெ.(n.) குதிரை; horse.

*[மேகம் + புறவதம்]*




**மேகபடலம்[1]** *mēga-paḍalam,* பெ.(n.) முகிற்கூட்டம்; range of clouds. *"மேகபடலத்தால் நீலநிறத்தையுடைய ஆகாயத்தின் கண்ணே" (மதுரைக். 678, உரை).*

*[மேகம் + படலம்]*

**மேகபடலம்[2]** *mēga-paḍalam,* பெ.(n.) 1. மேக நோயால் படரும் புண் வகை (வின்.); a spreading venereal sore. 2. பார்வையை

மங்கச் செய்யும் கண்ணோய் வகை; a disease of the eye that clouds vision.

*[மேகம் + படலம்]*

**மேகபதம்** *mēga-padam,* பெ.(n.) மேக மண்டலம் பார்க்க; see *mēga-maṇḍalam.* *“மேகபதத்துக்கு மேலுள்ள தேவர்கள்” (தக்கயாகப். 510, உரை).*

*[மேகம் + பதம்]*

**மேகபதி** *mēga-padi,* பெ.(n.) ஒன்பான் மணிகளினொன்று; one of the nine gems, cinnamon stone.

*[மேகம் + பதி]*

**மேகபந்தி** *mēga-pandi,* பெ.(n.) முகிற் கூட்டம் (வின்.); mass of clouds.

*[மேகம் + பந்தி]*

**மேகபுட்பம்** *mēga-puṭpam,* பெ.(n.) 1. நீர் (வின்.); water. 2. மழை; rain.

*[மேகம் + புட்பம்]*

**Skt.** *puṣpa* > த. புட்பம்

**மேகம்**[1] *mēgam,* பெ.(n.) 1. வானவெளியில் திரண்டிருக்கும் நீராவித்திரள், முகில்; cloud. *“நன்னிற மேக நின்றது போல” (சிலப். 11, 46).* 2. நீர் (பிங்.); water.

மறுவ. ஆய், இளை, எழிலி, கணம், கந்தரம், கள், கார், காளம், குயின், கொண்டல், கொண்மு, சீதம், செல், பெயல், மங்குல், மஞ்சு, மழை, மால், முகில் , மை, வான், விசும்பு, விண், விண்டு.

ம. மேகம்; க. மேக; தெ. மேகமு; து. மேகி.

சிறுநீர் கழித்தல், நீராக்குதல், வெண்ணீர் (விந்து) வெளிப்படுதல், ஆகிய பொருளுடைய mih என்பதினின்று மேகம் என்னும் சொல் பிறந்ததாக மா.வி. அகரமுதலி காட்டுகிறது. நீர் பொழிவது என்னும் கருத்தைப் புலப்படுத்த நீர்மேகம், மழைமேகம் என்றாற் போன்று நீர்ப்பொருள் அடை கொடுத்து வழங்குவதை நோக்கும் போது மேகத்திற்கு மழை பொழிவது அடிப்படை பொருளன்று என்பது வெளிப்படை. அதேபோல் கருத்தமேகம் கார்மேகம் என்றும் வெளிறிய மேகம் வெண்மேகம் என்றும் அழைக்கப்படுவதைப் பார்க்கும் போதும் மேகம் என்பது நீர் பெய்தல் என்று பொருள்படும் அடியிலிருந்து பிறந்திருக்க வாய்ப்பில்லை என்பது உறுதிபடுகிறது. அதாவது மேகத்திற்குரிய வண்ணங்கள் இரண்டு. ஒன்று வெண்மை, மற்றொன்று கருப்பு. இவ்விரு தன்மை (வண்ணங்.) களைக் குறிக்க வெண், கார் என்னும் அடைகள் கொடுத்து வழங்குவது மேகம் என்பதற்கு நீர்பொழியும் தன்மையைக் காட்டும் கருமை வண்ணம் அடிப்படையில் அமையவில்லை என்பதைக் காட்டுகிறது. அதனால்தான் நீர், மழை போன்ற அடைகள் கொடுத்து மேகத்தின் நீர் பொழியும் பொருள் உணர்த்தப்படுகிறது.

மேகம் என்னும் சொல் மேலே இருப்பது என்னும் பொருளுடைய மீ என்னும் அடியிலிருந்து வளர்ந்துள்ளது.

*மீ → மே (மேல்) → மேகெ (க. மேகெ, மேகு = மேல்) → மேக → மேகம்.*

மேகத்தைக் குறிக்கும் மற்றொரு சொல்லான மூட்டம் (மேலே) மூடுவது என்னும் பொருளில் அமைந்தது இச்சொல்லுடன் ஒப்பிட்டுப் பார்க்கத் தக்கது,

*மூடு → மூட்டம் = மூடியிருப்பது, மூடு → மூடம் → மோடம் = முகில்.*

இனி ஓரிடத்தில் நிற்காமல் நகர்ந்து செல்லும் தன்மை நோக்கி

*ஏகு → மேகு → மேகம்* என்றுமாம்.

த. மேகம் > **Skt.** *mēgha.*

**மேகம்**[2] *mēgam,* பெ.(n.) 1. குயில் (யாழ்.அக.); the Indian cuckoo. 2. முத்தக் காசு (சங்.அக.); straight sedge. 3. தண்ணீர் விட்டான் கிழங்கு; water root. 4. கடுக்காய்; gallnut.




**மேகம்³** *mēgam,* பெ.(n.) 1. கெட்ட குருதி, ஒழுக்கக்கேடு, மூத்திரக் கோளாறு ஆகியவற்றால் உண்டாகும் நோய்; venereal or urinary disease, disease due to impure blood. 2. வெள்ளை நோய் (வின்.); a urinary disease.

து. மேக, மேவ.

*[மீ → மே (மேல்) → மேகெ → மேக → மேகம் = மேலிருப்பது, மழை பெய்வது, நீர் வெளிப் படுத்துவது, நீர் வெளிப்படும் நோய். சிறுநீர் பையிலும் அதனைச் சுற்றியுள்ள இடங்களிலும் ஏற்படும் நோய். முறைகேடான உடலுறவில் ஏற்படும் நோய். மேகம் என்னும் சொல்லிற்கு மழை பொழிதல் என்னும் வழிபொருள் ஏற்பட்ட பின் நீர்வெளிப்படும் நோய்க்கும் மேகம் என்னும் பெயர் ஏற்பட்டது. மா.வி.அகரமுதலி நோயைக் குறிக்கும் mēha என்னும் சொல்லும் நீர் வெளிப்படுதல் என்னும் பொருள்படும் mih என்னும் அடியிலிருந்து பிறந்தது எனக் காட்டுகிறது]*

த. மேகம் > **Skt.** *mēha.*

**மேகம்போக்கி** *mēgam-pōkki,* பெ.(n.) 1. மர மஞ்சள்; tree turmeric. 2. அகத்தி வேர்ப் பட்டை; root of sesbania grandifhora. 3. பாற்சுற்றி; the viscid juice of madar and other plants collected and evaporated in shallow dish in the sum or in the shade-caoout chone.

*[மேகம் + போக்கி]*




**மேகம்போல்வளர்ந்தகன்னி** *mēgam-pōl-valarnda-kaṉṉi,* பெ.(n.) கருநெல்லி; black Indian goosberry.

*[மேகம்போல் + வளர்ந்த + கன்னி]*

**மேகமண்டலம்** *mēga-manḍalam,* பெ.(n.) வான்வெளி; the region of the clouds, cloudlands.

*[மேகம் + மண்டலம். முல் → முள் → முண்டு → மண்டு. மண்டுதல் = வளைதல். மண்டு → மண்டலம் = வட்டம், நாட்டுப் பகுதி. மேகமண்டலம் = மேகம் சூழ்ந்திருக்கும் வான்வெளி]*

**மேகமந்தாரம்** *mēga-mandāram,* பெ.(n.) மந்தாரக்கல் (சிலை); a medicinal stone.

**மேகமாகி** *mēga-māgi,* பெ.(n.) ஆவாரை; a shrub-cassia auriculata.

**மேகமாலை** *mēga-mālai,* பெ.(n.) முகிற்கூட்டம்; mass of clouds. *"மேகமாலை வெங்கோடை மாரிபோல வாளி கூட" (கம்பரா. மூலபல. 84).*

*[மேகம் + [redacted] முல் → முள் → முய → முயல் → மயல் = மயக்கம். முய → முயல் → மயல் = மயக்கம். மயல் → மால் = மயக்கம். மாலுதல் = மயங்குதல். மால் → மாலை = [redacted] மலர்கள் கலக்குந் தொடை. மேகமாலை = முகில்கள் கலந்த கூட்டம்]*

**மேகமாற்றம்** *mēga-māṟṟam,* பெ.(n.) மேகநோய் குணமடைகை; curing of the venereal disease.

*[மேகம் + மாற்றம். மாறு → மாற்று → மாற்றம்]*

**மேகமுழக்கம்** *mēga-muḻakkam,* பெ.(n.) இடிமுழக்கம், மேகங்களினூடே உண்டாகும் பேரொலி (வின்.); rumbling of clouds, thunder.

*[மேகம் + முழக்கம்]*

**மேகமுறவஞ்சம்** *mēgamuṟa-vañjam,* பெ.(n.) காசிச்சாரம்; a kind of salt.

**மேகமூட்டம்** *mēga-mūṭṭam,* பெ.(n.) மேகம் பரந்து நிற்கை; overspreading of the clouds.

*[மேகம் + மூட்டம். மூடு → மூட்டம் = மூடியிருப்பது. மேகமூட்டம் = மேகம் சூழ்ந்து மூடியிருப்பது]*

**மேகமூர்ந்தோன்** *mēga-mūrndōṉ,* பெ.(n.) மேகத்தின்மேல் அமர்ந்து செல்பவன், இந்திரன் (நாமதீப. 60); Indra.

*[மேகம் + ஊர்ந்தோன்]*

**மேகமூலி**[1] *mēga-mūli,* பெ.(n.) நீர்ப்பனை (சங்.அக.); creeping aumanac.

*[மேகம் + மூலி]*

**மேகமூலி**[2] *mēga-mūli,* பெ.(n.) புல்லாமணக்கு; sebastiana chamaelea.

**மேகயெரிச்சல்** *mēga-yericcal,* பெ.(n.) மேக நோயினால் ஏற்படும் புண் முற்றி வெடிக்கும் நிலையில் ஏற்படும் எரிச்சல்; burning sensation due to venereal cause.

*[மேகம் + எரிச்சல். எரி → எரிச்சல். 'சல்' தொ.பெ.ஈறு.]*

**மேகயோனி** *mēga-yōṉi,* பெ.(n.) புகை; smoke.

*[மேகம் + யோனி]*

**Skt.** *yōni* > த. யோனி.

**மேகர்** *mēgar,* பெ.(n.) 1. (அரசர்) செல்லும் வழிகளில் நீர்த்தெளிப்போர்; water-sprinklers, those who water the roads, as for a kings progress. *"ராஜா போம்போது முன்னே மேகர் நீர் விடு:மா போலே" (ஈடு. 10, 1, 1).* 2. செல்லும் வழிகளைச் சீர்ப்படுத்துவோர் (ஈடு. 10, 1, 1, ஜீ); those who clear the way, as for a king.

*[மேகம் → மேகர்]*

**மேகரஞ்சம்** *mēga-rañjam,* பெ.(n.) கரு நாகம்; black variety of cobra.



மேகரஞ்சம்

**மேகரஞ்சி** *mēga-rañji,* பெ.(n.) ஒரு பண் (இராகம்) (வின்.); (mus.) a specific melody-type.

*[மேகக்குறிஞ்சி → மேகரஞ்சி]*

**மேகரண்டம்** *mēga-randam,* பெ.(n.) மயிர்க்குருந்து; hair root.

*[மேகவண்டம் → மேகரண்டம்]*

**மேகரணக்களிம்பு** *mēgaraṇa-k-kaḷimbu,* பெ.(n.) மேகத்தினால் வரும் புண் போக்கும் களிம்பு அல்லது மருந்து; ointment for venereal, ulcers and sores.

*[மேகம் + ரணம் + களிம்பு. களி → களிம்பு.]*

**Skt.** *vraṇa* > த. ரணம்.

**மேகரணம்** *mēga-raṇam,* பெ.(n.) 1. மேகப் புண் பார்க்க; see *mēga-p-puṇ.* 2. குட்டம்; leprosy (M.L.).

*[மேகம் + ரணம்]*

**Skt.** *vraṇa* > த. ரணம்.

**மேகராகக்குறிஞ்சி** *mēga-rāga-k-kuṟiñji,* பெ.(n.) குறிஞ்சி யாழ்த் திறத் தொன்று (பிங்.); ■ secondary melody type of *'kuṟiñji'* class.

*[மேகம் + ராகம் + குறிஞ்சி. அராகம் → ராகம்]*

**மேகராகம்** *mēga-rāgam,* பெ.(n.) பாலை யாழ்த்திறவகை (பிங்.); (Mus.) ■ secondary melody-type of the *pālai* class.

*[மேகம் + ராகம். அராகம் → ராகம்.]*

**மேகராசி** *mēga-rāśi,* பெ.(n.) முகிற்கூட்டம்; mass of clouds *"மேகராசி பொழிய" (தக்கயாகப். 643).*

*[மேகம் + ராசி]*

**Skt.** *rāśi* > த. ராசி.

**மேகராடி** *mēga-rāḍi,* பெ.(n.) மயிலடிக் குருந்து (சங்.அக.); false peacock's foot tree.

**மேகராணி** *mēga-rāṇi,* பெ.(n.) மயிலடிக் குருந்து; a kind of sacred tree.

*[மேகராடி → மேகராணி]*

**மேகரோகம்** *mēga-rōgam,* பெ.(n.) மேகம்² 1, 2 (இங்.வை.) பார்க்க; see *mēgam² 1,2.*

*[மேகம் + ரோகம்]*

**Skt.** *rōha* > த. ரோகம்.

**மேகரோகி** *mēga-rōgi,* பெ.(n.) மேகநோயால் வருந்துபவ–ன்–ள்; person afflicted with venereal disease.

*[மேகம் + ரோகி]*

**Skt.** *rōhi* > த. ரோகி.

**மேகலாபதம்** *mēgalā-padam,* பெ.(n.) இடை (யாழ்.அக.); waist.

**மேகலாபாரம்** *mēgalābāram,* பெ.(n.) மேகலை (யாழ்.அக.) பார்க்க; see *mēgalai.*

*[மேகலை + பாரம்]*

**Skt.** *bhāra* > த. பாரம்.

**மேகலை** *mēgalai,* பெ.(n.) 1. அரைஞாண்; waist-cord. *"அரைசெய் மேகலையான்" (தேவா. 281, 9).* 2. மணமாகாதவன் அணியும் கயிறு; a waist-cord of moonja grass in three strands. used by a *bachelor. "முஞ்சியெனும் புன்மூன்று புரியினுறு கயிறு...... மேகலை" (திருவானைக். கோச்செங். 116).* 3. மகளிர் இடையிலணியும் (ஒட்டியாணம் போன்ற) ஏழு அல்லது எட்டுக் கோவையுள்ள அணிவகை (திவா.); a jewelled girdle of 7 or 8 strands, a belt-

like golden ornament (formerly) worn by women round the waist. *"மின்னுமேகலையுந் தோடுங் கொடுத்து" (சீவக. 2662) (சிலப். 4, 30, உரை).* 4. ஆடை (அக.நி); cloth. 5. புடைவை (வின்.); saree. 6. கோயில் மேற்கட்டியின் (விமானத்தின்) வெளிப் புறத்திற் செய்யப்பட்ட சிற்பவேலை; ornamental mouldings as on the outside of the *vimānam* of a temple. 7. தூண் முதலியவற்றைச் சுற்றியமைக்கும் வளையம்; (Arch.) cincture, gridle. 8. வேள்விச் சாலை சுற்றியிடுங் கோலம்; lines drawn round the sacrificial pit or the receptacle in which the sacrificial fire in deposited. *"வேதியுங் குண்டமு மேகலையொடு...... கண்டு" (திருவிளை. திருமணப். 67).* 9. மலைச்சரிவு (வின்.); the sloping sides of a mountain. 10. மேருமலையின் உச்சித் தொடர் (வின்.); a row or ridge of peaks on mount *Mēru*. 11. குதிரையின் கொப்பூழுக்கு மேலே காணப்படும் நற்சுழி (அசுவசா. 20); auspicious curl of hair just above a horse's navel.

*[மேகலம் → மேகலை = பெண்டிர் அரையில் ஆடையின் மேல் அணியும் எண்கோவைப் பட்டிகையான அணிகலன். மேகலை தமிழர் அணிகலங்களுள் ஒன்று (வ.வ.2,74)]*

த. மேகலை > **Skt.** *mēkhalā.*

*mē (in mēkhalā, a waist-band, a girdle, etc.,) Gt. (p.529) takes it to be D. mey, etc., the body. If comparison is right, khala may be D.kala, "that is joined or attached to" (Cf. Sk. kalita and the D. past participle of kali) (KKEDxix)*



மேகலை

**மேகவண்டம்** *mēga-vaṇḍam,* பெ.(n.) மயிற்குருந்து; hair root.

**மேகவண்ணக்குறிஞ்சி** *mēgavaṇṇa-k-kuriñji,* பெ.(n.) மேகவண்ணப் பூவுள்ள செடிவகை, மேகவண்ணப்பூவுள்ள மருதோன்றி (யாழ்.அக.); western ghats blue nail dye.

மறுவ. மழை வண்ணக் குறிஞ்சி.

*[மேகவண்ணம் + குறிஞ்சி]*



மேகவண்ணக்குறிஞ்சி

**மேகவண்ணப்பட்டு** *mēga-vaṇṇa-p-paṭṭu,* பெ.(n.) பல நிறங்களைக் காட்டும் பட்டுத் துணிவகை; shot silk. *"மேக வண்ணப் பட்டு மேற்கட்டி" (பத்ம. தென்றல்விடு. 40).*

*[மேகவண்ணம் + பட்டு]*

**மேகவண்ணப்பூவுளமருதோன்றி** *mēga-vaṇṇa-p-pūvuḷa-maru-tōṉṟi,* பெ.(n.) மேகவண்ணக்குறிஞ்சி பார்க்க; see *mēgavaṇṇa-k-kuṟiñji.*(L.)

*[மேகவண்ணம் + பூவுளமருதோன்றி]*

**மேகவண்ணன்** *mēgavaṇṇaṉ,* பெ.(n.) திருமால் (மேகம் போன்ற நிறமுள்ளவன்); *Tirumāl* (*Vishṇu*) dark in colour like [redacted] rain-cloud. *"வண்ண மருள் கொளணி மேகவண்ணா" (திவ். திருவாய். 6, 10, 3).*

*[மேகம் + வண்ணன்]*

**மேகவண்ணிக்குறிஞ்சி** *mēgavaṇṇi-k-kuṟiñji,* பெ.(n.) மேகவண்ணக் குறிஞ்சி பார்க்க; see *mēgavaṇṇa-k-kuṟiñji.*

*[மேகவண்ணக்குறிஞ்சி → மேகவண்ணிக் குறிஞ்சி]*

**மேகவத்துமம்** *mēgavattuvam,* பெ.(n.) 1. வான்வெளி (ஆகாயம்); sky. 2. அணு (யாழ்.அக.); atom.

**மேகவர்ணப்புடைவை** *mēga-varṇa-p-puḍaivai,* பெ.(n.) மேகவரணப்புடைவை பார்க்க; [redacted] *mēga-varaṇa-p-puḍaivai.*

*[மேகவரணப்புடைவை → மேகவர்ணப் புடைவை]*

**மேகவர்ணம்** *mēga-varṇam,* பெ.(n.) மேகவரணம் (இ.வ.) பார்க்க; see *mēga-varaṇam.*

*[மேகவரணம் → மேகவர்ணம்]*

**மேகவர்ணனை** *mēga-varṇaṉai,* பெ.(n.) மேகவருணை (சங்.அக.) பார்க்க; see *mēga-varuṇai.*

*[மேகம் + வர்ணனை. வருணை → வர்ணனை]*

**மேகவரணக்கல்** *mēga-varaṇa-k-kal,* பெ.(n.) மந்தாரச் சீலை; basalt.

*[மேகம் + வரணம் + கல்]*

**மேகவரணச்செவ்வந்தி** *mēga-varaṇa-c-cevvandi,* பெ.(n.) நீலச் சிவந்தி; blue or black chrysanthem.

*[மேகம்+ வரணம் + செவ்வந்தி]*

**மேகவரணத்தான்** *mēga-varaṇattāṉ,* பெ.(n.) முத்துச்சிப்பி; pearl, oyster shell.

*[மேகம் + வரணத்தான்]*



மேகவரணத்தான்

**மேகவரணப்புடைவை** *mēgavaraṇa-p-puḍaivai,* பெ.(n.) பலபடியாக நிறம் மாறும் புடைவை வகை; a shot saree.

*[மேகவண்ணம் → மேகவரணம் + புடைவை]*

**மேகவரணம்** *mēga-varaṇam,* பெ.(n.) 1. கருநீலம்; sky-blue. 2. பலபடியாக மாறித் தோன்றும் நிறம் (இ.வ.); shifting or changing colour, as of shot silk.

*[மேகம் + வரணம். வள் → வண் → வண்ணம் = வளைத்தெழுதும் எழுத்து அல்லது ஓவியம், எழுதும் மை அல்லது கலவை நீர், எழுதிய [redacted]*

நீரின் நிறம். வள் → வர் → வரி. வரிதல் = எழுதுதல், சித்திரமெழுதுதல், பூசுதல். வரி = வளைகோடு, கோடு, எழுத்து, நிறம். வரி + அணம் – வரிணம் → வரணம்]

**மேகவரணன்** *mēga-varaṇaṉ,* பெ.(n.) நாவற்பழம்; the jambo fruit.

*[மேகம் + வரணன். வருணன் → வரணன் = கருப்பு நிறப் பழம்.]*

**மேகவரணனை** *mēga-varaṇaṉai,* பெ.(n.) மேகநாதத்திமூலி பார்க்க; see *mēganādatti-mūli.*

**மேகவருணை** *mēga-varuṇai,* பெ.(n.) அவுரி (யாழ்.அக.); indigo.

**மேகவழலை** *mēga-vaḻalai,* பெ.(n.) பாலியல் அழலை (எரிச்சல்); venereal inflammation.

*[மேக(ம்) + அழலை. அழல் → அழலை. 'ஐ' தொ.பெ.ஈறு.]*

**மேகவறட்சி** *mēga-vaṟaṭci,* பெ.(n.) மேகத்தினால் ஏற்படும் நாவறட்சி; venereal thirst.

*[மேகம் + வறட்சி]*

**மேகவன்னம்** *mēga-vaṉṉam,* பெ.(n.) காக்காய்ப் பொன் (அப்பிரகம்); mica.

**மேகவாகனன்**[1] *mēga-vāgaṉaṉ,* பெ.(n.) 1. மேகத்தின் மேல் அமர்ந்து செல்பவன், இந்திரன் (பிங்.); Indra, as riding on a cloud. 2. சிவன் (யாழ்.அக.); *śivaṉ.*

*[மேகம் + வாகனன்]*

**Skt.** *vāhana* > த. வாகனம்.

**மேகவாகனன்**[2] *mēga-vāgaṉaṉ,* பெ.(n.) கருங்கல் (யாழ்.அக.); granite stone.

*[மேகம் + வாகனன்]*

**Skt.** *vāhana* > த. வாகனம்.

**மேகவாதசூலை** *mēga-vāda-śūlai,* பெ.(n.) மேகநோய்வகை; syphilis (M.L.).

*[மேகம் + வாதம் + சூலை. சுல் → சூல் → சூலை.]*

**Skt.** *vāta* > த. வாதம்.

**மேகவாதப்பிடிப்பு** *mēga-vāda-p-piḍippu,* பெ.(n.) ஒரு வகை பிடிப்பு நோய்; venereal arthritis.

*[மேகம் + வாதம் + பிடிப்பு. பிடி → பிடிப்பு. 'பு' தொ.பெ.ஈறு.]*

**Skt.** *vāta* > த. வாதம்.

தன்னால் உணவை உண்ண முடியாது பிறரைக் கொண்டு ஊட்டச் செய்யும் ஒருவகை நோய்; இவ்வகை நோய்கள் வெள்ளி நீற்றால் (பற்பத்தால்) குணப்படும்.

**மேகவாதம்** *mēga-vādam,* பெ.(n.) மேகவூதை பார்க்க; see *mēga-v-ūdai.*(M.L.)

*[மேகம் + வாதம்]*

**Skt.** *vāta* > த. வாதம்

**மேகவாய்** *mēga-vāy,* பெ.(n.) தயிர் (சங்.அக.); curd.

**மேகவாயு** *mēga-vāyu,* பெ.(n.) 1. மேகநோய் வெப்பத்தாலுண்டாகும் வாயு (வின்.); flatulency caused by venereal heat. 2. மேகவூதை (இ.வ.) பார்க்க; see *mēga-v-ūdai.*

*[மேகம் + வாயு]*

**Skt.** *vāyu* > த. வாயு.

**மேகவார்த்தையறிபவன்** *mēga-vārttai-yaṟibavaṉ,* பெ.(n.) தவளை; frog.

*[மேகம் + வார்த்தை + அறிபவன்]*

**Skt.** *vārttā* > த. வார்த்தை.


மேகவார்த்தையறிபவன்

**மேகவிடுதூது** *mēga-viḍu-tūdu,* பெ.(n.) காதலரிடம் மேகத்தைத் தூது விடுவதாகக் கூறும் சிற்றிலக்கிய வகை (திருநறையூர் நம்பி மேகவிடு தூது); [redacted] poem in which a lover is supposed to send a love-message by means of [redacted] cloud.

*[மேகம் + விடு + தூது]*

**மேகவித்திரதி** *mēga-vittiradi,* பெ.(n.) 1. பிளவை நோய் (பைஷஜ.); carbuncle. 2. மேகக்கட்டி; venereal abscess.

*[மேகம் + வித்திரதி]*

[redacted] *vidradhi* > த. வித்திரதி.

**மேகவிநாசம்** *mēga-vināśam,* பெ.(n.) மழைமேகம் கலைகை (சீவக. 2833, உரை); dispersing of clouds.

*[மேகம் + விநாசம்]*

**Skt.** *vi-nāśa* > த. விநாசம்.

**மேகவியாதி** *mēga-viyādi,* பெ.(n.) மேக நோய் பார்க்க; see *mēga-nōy.* (M.L.).

*[மேகம் + வியாதி (நோயுள்ளோருடன் கூடாவொழுக்கத்தால் வரும் நோய்]*

**Skt.** *vyādhi* > த. வியாதி.

**மேகவிரஞ்சி** *mēga-virañji,* பெ.(n.) மேகக் குறிஞ்சி (பரத. இராக. 56) பார்க்க; see *mēga-k-kuṟiñji.*

*[மேகக்குறிஞ்சி → மேகவிரஞ்சி]*

**மேகவிரணம்** *mēga-viraṇam,* பெ.(n.) மேகப்புண் பார்க்க; see *mēga-p-puṇ.* (M.L.)

*[மேகம் + விரணம்]*

**Skt.** *viraṇa* > த. விரணம்.

**மேகவிரிஞ்சி** *mēga-viriñji,* பெ.(n.) மேகக் குறிஞ்சி (சங்.அக.) பார்க்க; see *mēga-k-kuṟiñji.*

*[மேகக்குறிஞ்சி → மேகவிரிஞ்சி]*

**மேகவிருளி** *mēga-viruḷi,* பெ.(n.) பித்து (சங்.அக.); bile, insanity.

*[மேகம் + விருளி]*

**மேகவுப்பு** *mēga-v-uppu,* பெ.(n.) வெடியுப்பு; salt petre.

*[மேகம் + உப்பு]*

**மேகவூதை** *mēga-vūdai,* பெ.(n.) ஊதை நோய்வகை; gout, gonorrhoeal rheumatism.

*[மேகம் + ஊதை]*

**மேகவூறல்** *mēga-vūṟal,* பெ.(n.) 1. தீயநீர் பரவுகை; spread of bad harmours in the body. 2. மேகப்படை பார்க்க; see *mēga-p-paḍai.* 3. மேகத்தினவு; itching caused by venereal affections.

[மேகம் + ஊறல். ஊறு → ஊறல். 'அல்' தொபெ.ஈறு.]

**மேகவெட்டை** *mēga-veṭṭai,* பெ.(n.) மேகக்காங்கை, 1 பார்க்க; see *mēga-k-kāṅgai1.*(M.L.).

[மேகம் + வெட்டை. வெக்கை → வெட்டை.]

**மேகவெடிசூலை** *mēga-veḍi-cūlai,* பெ.(n.) மேகவெடிப்புண்; rheumatism due to venereal causes accopanied by sores.

[மேகம் + வெடி + சூலை]

**மேகவெள்ளை** *mēga-veḷḷai,* பெ.(n.) மேகக்காங்கை, 1 பார்க்க; see *mēga-k-kāṅgai1* (M.L.).

[மேகம் + வெள்ளை, வெள்ளையொழுக்கு]

**மேகவேக்காடு** *mēga-vēkkāḍu,* பெ.(n.) மேகத்தினால் ஏற்படும் அழற்சி நோய்; venereal inflammation.

[மேகம் + வேக்காடு. வேதல் = அழலுதல். வே + காடு – வேக்காடு = எரிகை, அழற்சி.]

**மேகவேர்** *mēga-vēr,* பெ.(n.) சல்லிக் குடல்; umbilical cord.

[மேகம் + வேர்]

**மேகனக்கிளை** *mēgana-k-kiḷai,* பெ.(n.) அடிவயிற்றுக் கீழும் குறிக்கு மேலும் உள்ள எலும்பின் கிளை; touch of the pubis - Ramus.

[மேகனம் + கிளை]

**மேகனப்பொருத்து** *mēgana-p-poruttu,* பெ.(n.) முருந்து, தசைநாரினால் எதிரெலும்புடன் இணைக்கப்பட்ட பொருத்து; joint of the pubis which is united at its termination to the opposite as pubis by the thick cartilage ligaments and fibres.

[மேகனம் + பொருத்து. பொரு → பொருத்து.]

**மேகனபாலிரேகை** *mēgana-pāli-rēgai,* பெ.(n.) பாலிமேகன வரி; iliopeotineal line.

[மேகனம் + பாலி + ரேகை, ஏகை = கோடு ஏடுதல் – செல்லுதல், ஏகை → ரேகை. ஏகையும் மாலையும் இருளொடு துறந்த பாசார் மேனிப் பசுங்கதிர் ஒளிரவும் (சிலப். ஊர் – 184–5)]

**மேகனம்** *mēganam,* பெ.(n.) 1. ஆண்குறி (வின்.); membrum virile, penis. 2. மயிரால் மூடப்பட்ட பெண்குறிப் பாகம்; pons pubis. 3. சிறுநீர்; urine.

[மேகம் → மேகனம் = நீர் (சிறுநீரை) வெளியேற்றுவது]

**மேகாக்கினி** *mēgākkiṉi,* பெ.(n.) மேகக்கினி (யாழ்.அக.) பார்க்க; see *mēga-k-kiṉi* (M.L.).

[மேகம் + அக்கினி – மேகக்கினி → மேகாக்கினி. மேகம் → அழனி → (அகனி) → Skt. agni.]

**மேகாகுந்தம்** *mēgā-kundam,* பெ.(n.) மயிலிறகினடி (சங்.அக.); quill-end of peocock's feather.

**மேகாதிபதி** *mēgādibadi,* பெ.(n.) நவ நாயகருள் குறித்த ஆண்டு மழைக்குரிய கோள் (கிரகம்) (பஞ்.); the planet that determines the rainfall in a particular year, one of '*nava-nāyagar*'.

[மேகம் + அதிபதி – மேகதிபதி → மேகாதிபதி]

**Skt.** *adhi-pati* > த. அதிபதி.

**மேகாதிபன்** *mēgādibaṉ,* பெ.(n.) மேகாதிபதி (வின்.) பார்க்க; see *mēgādibadi.*

*[மேகம் + அதிபன்]*

**Skt.** *adhi-pa* > த. அதிபன்.

**மேகாந்தகாரம்** *mēgānda-kāram,* பெ.(n.) மழைக்காலிருட்டு (வின்.); cloudy darkness.

*[மேகம் + அந்தகாரம்]*

**Skt.** *andha-kāra* > த. அந்தகாரம்.

**மேகாரடி** *mēgāraḍi,* பெ.(n.) ஒருவகை சிறுமரம் (மயிலடிக்குருந்து) (மலை.); false peacock's foot tree.

*[மேகாரம் → மேகாரடி]*

**மேகாரம்** *mēgāram,* பெ.(n.) மயில்; peacock. *"உரகமதெடுத்தாடு மேகார மீதின் மிசை" (திருப்பு. 153).*

மறுவ. தோகை, பிணிமுகம், மஞ்ஞை.

*[மேகம் → மேகரம் → மேகாரம்]*




**மேகாரி** *mēgāri,* பெ.(n.) 1. அறுகம்புல் (நாமதீப. 325); harialli grass. 2. கொடி வகை, அவரை (நாமதீப. 315); field-bean.

**மேகாரித்தைலம்** *mēgāri-t-tailam,* பெ.(n.) மேகநோயைக் குணமாக்கும் எண்ணெய் (தைலவ. தைல.); a medicinal oil for venereal diseases.

*[மேகம் + அரி + தைலம்]*

**Skt.** *taila* > த. தைலம்.

**மேகானந்தி** *mēgāṉandi,* பெ.(n.) மயில் (வின்.); peacock.

**மேகை** *mēgai,* பெ.(n.) இறைச்சி (சங்.அக.); flesh.

*[மேதை → மேகை]*

**மேங்கா** *mēṅgā,* பெ.(n.) கட்டுமரவகை (இ.வ.); [redacted] kind of catamaran.

**மேங்காவல்** *mēṅgāval,* பெ.(n.) 1. மேற்பார்வை; superintendence. 2. மேங்காவற்காரன் பார்க்க; [redacted] *mēṅkāvaṟ-kāraṉ.*

*[மேல் + காவல். கா → காவல்]*

**மேங்காவற்காரன்** *mēṅgāvaṟ-kāraṉ,* பெ.(n.) நாட்டில் களவு முதலியன நேராமற் காப்பவன் (இ.வ.); supervising watchman of a country or district.

*[மேங்காவல் + காரன்]*

**மேங்கை** *mēṅgai,* பெ.(n.) மேலிடம்; upper portion, higher place. *'அவன் என்ன செய்வான், மேங்கையில் இருப்பவர்கள் சொல்வதைத்தான் அவன் கேட்க வேண்டும்' (உ.வ.).*

[redacted] மேங்கெய் (புறங்கை), மேங்கால் (புறங்கால்).

*[மேல் + கை]*

**மேச்சேரி** *mēccēri,* பெ.(n.) சேலம் மாவட்டம் ஓமலூர் வட்டத்தில் அமைந்த ஊர்; a village *Omalūr* taluk in *Sēlam* dt.

*[மேய்ச்சல் + ஏரி – மேய்ச்சேரி → மேச்சேரி]*

தாரமங்கலம், அமரகுந்தி ஆகிய ஊர்களிலுள்ள கோயில்களைக் கட்டுவதற்காகக் கருங்கற்களைத் தூக்கிச் சென்ற எருமைகள் மேய்வதற்காக வெட்டப்பட்ட ஏரி மேய்ச்சலேரி எனப்பட்டது. மேய்ச்சலேரிக்கு அருகில் அமைந்த ஊர் மேய்ச்சலேரி → மேய்ச்சேரி → மேச்சேரி என வழங்கப்பட்டது. இப்பகுதியில் எருமை வளர்க்கப்படுவது மிகுதி.

**மேசகம்** *mēšagam,* பெ.(n.) 1. விரிந்த மயிற்றோகை (பிங்.); expanded plumage of a peacock. 2. குதிரையின் பிடரிமயிர்; mane of horse. 3. இருள் (சங்.அக.); darkness. 4. கருமை (சங்.அக.); blackness. 5. புகை (சங்.அக.); smoke. 6. முகில் (சங்.அக.); cloud.



மேசகம்

**மேச்கை** *mēšagai,* பெ.(n.) 1. மேசகம், 3 (சங்.அக.) பார்க்க; see *mēšagam3.* 2. கரிய மனோசிலை (மூ.அ.); black realgar.

**மேசை** *mēšai,* பெ.(n.) 1. எழுது கருவி முதலிய பொருள்களை வைப்பதற்குரியதும் கால் களால் தாங்கப்படும் பலகை யுடையதுமான பொருள் வகை, மிசை (இக்.வ.); table. *'மேசை மேல் உள்ள புத்தகத்தை எடுத்து வா' (உ.வ.).* 2. சூதாட்டத்தில் வைக்கும் பந்தயப்பணம் (கொ.வ.); money staked at a card-game.

து. மோச, மேசெ.

*[மிசை → மீசை → மேசை]*



மேசை

**மேசைக்கத்தி** *mēšai-k-katti,* பெ.(n.) கத்தி வகை (இக்.வ.); table-knife.

து. மேசெகத்தி

*[மேசை + கத்தி]*

**மேசைக்காரர்** *mēšai-k-kārar,* பெ.(n.) பரவர் வகையினர்; a sub-division of Paravas. (G.Tn.D.T, 123).

**மேசைத்துப்பட்டி** *mēšai-t-tuppaṭṭi,* பெ.(n.) மேசைவிரிப்பு (வின்.) பார்க்க; see *mēšai-virippu.*

*[மேசை + துப்பட்டி]*

Skt. *dvi-paṭ* > த. துப்பட்டி.

**மேசைவிரிப்பு** *mēšai-virippu,* பெ.(n.) மேசை மேல் விரிக்கும் துணி; table-cloth.

*[மேசை + விரிப்பு. விரி → விரிப்பு]*

**மேட்டாங்காடு** *mēṭṭāṅ-kāḍu,* பெ.(n.) புஞ்சைச் சாகுபடிக்குரிய மேட்டுப்பாங்கான நிலம்; elevated land fit only for dry cultivation.

*[மேடு → மேட்டாங் + காடு]*

**மேட்டி**[1] *mēṭṭi,* பெ.(n.) 1. மேட்டிமை, 1 பார்க்க; see *mēṭṭimai* 1. *"மேட்டி பேசுவாய்" (குருகூர்ப். 91).* 2. மேட்டிமை, 3 பார்க்க; see *mēṭṭimai* 3. *"மேட்டி குலைந்தது" (திருப்பு. 1111).* 3. தலைவன் (வின்.); chief, head. 4. கிராமத் தலைவனுக்கு விடப்பட்ட மானியம்; land granted free of tax to the headman of a village (R.T.).

தெ. மேட்டி.

*[மேல் → மேள் → மேட்டி]*

**மேட்டி**[2] *mēṭṭi,* பெ.(n.) மேதி; stake (R.T).

*[மேதி → மேடி → மேட்டி]*

**மேட்டிமை** *mēṭṭimai,* பெ.(n.) 1. செருக்கு (அகந்தை) (வின்.); haughtiness. 2. தலைமை; leadership. 3. மேன்மை (வின்.); excellence.

து. மேண்டு, மேண்ட.

*[முகடு = உச்சி, மேலிடம், கூரை. முகடு → மோடு → மேடு → மேடை → மேட்டிமை (மு.தா.68)]*

**மேட்டிரம்** *mēṭṭiram,* பெ.(n.) ஆண்குறி; membrum virile, penis. *"குறுகிச் சிவந்த மேட்டிரமும்" (திருவாலவா. 28, 67)*

**மேட்டுக்கால்வாய்** *mēṭṭu-k-kālvāy,* பெ.(n.) மேட்டுப் பகுதியில் அமைந்த கால்வாய்; canal which dug at high ground.

*[மேட்டு + கால்வாய்]*

**மேட்டுக்குடி** *mēṭṭu-k-kuḍi,* பெ.(n.) பொருளியல், கல்வியியல், குமுகவியல் – போன்றவற்றில் உயர்ந்தவர்; the elite, the privileged or upper class.

*[மேட்டு + குடி. மேடு → மேட்டு = உயரம், பெருமை, மேன்மை.]*

**மேட்டுக்கழனி** *mēṭṭu-k-kaḻaṉi,* பெ.(n.) மேட்டுப் பாங்கான இடத்தில் உள்ள கழனி; cultivable field at high land.

*[மேட்டு + கழனி]*

**மேட்டுநாயக்கன்** *mēṭṭu-nāyakkaṉ,* பெ.(n.) தொட்டியர் தலைவன்; headman of the *toṭṭiya* caste. (E.T.vii. 185).

*[மேட்டு + நாயக்கன்]*

**மேட்டுநிலம்** *mēṭṭu-nilam,* பெ.(n.) உயர்வான நிலம்; high or elevated land, rising ground. *"சிவந்த மேட்டு நிலத்து" (புறநா. 120, உரை).*

*[மேடு → மேட்டு + நிலம்]*

**மேட்டுப்பட்டி** *mēṭṭu-p-paṭṭi,* பெ.(n.) திண்டுக்கல் மாவட்டம், நிலக்கோட்டை வட்டம் வைகையாற்றின் தென்கரையில் அமைந்த ஊர்; a village in Dindukkal dt, *Nilakkōṭṭai* Taluk, situated on the bank of vaigai river.

*[மேடு + பட்டி. மேடான பகுதியில் அமைந்த ஊர்]*

**மேட்டுப்பாய்ச்சல்** *mēṭṭu-p-pāyccal,* பெ.(n.) 1. நீர் ஏறிப்பாய வேண்டியதான மேட்டு நிலம்; elevated land, as difficult for irrigation. 2. மேட்டில் நீரிறைத்துப் பாய்ச்சுகை; irrigation of land at a high

level. 3. கடினமான வேலை (கொ.வ.); uphill work.

*[மேட்டு + பாய்ச்சல். பாய் → பாய்ச்சல். 'சல்' தொ.பெ.ஈறு.]*

**மேட்டுப்பாளையம்** *meṭṭu-p-pāḷaiyam,* பெ.(n.) கோயம்புத்தூர் மாவட்டத்தில் அமைந்த நகரம்; a city in coimbatore dt.

*[மேடு + பாளையம். பாளையம் என்பது படையிருக்கும் ஊர். மேட்டுப்பாளையம் என்னும் பெயரில் தமிழ் நாட்டில் பல ஊர்கள் உள்ளன. உத்தமபாளையம், உடையார்பாளையம், பாளையங் கோட்டை என்றாற்போன்று பல ஊர்களுக்குப் பாளையம் பெயராய் அமைந்துள்ளது]*

**மேட்டுமடை** *meṭṭu-maḍai,* பெ.(n.) 1. மேட்டு நிலத்துப் பாயும் நீர்க்கால்; channel which irrigates lands on a higher level, high level channel. 2. மேட்டு நிலத்துக்கான நீர்ப் பாய்ச்சு மடை; sluice or opening that turns water on to a high-level channel. 3. மேட்டுப்பாய்ச்சல், 1, 2 பார்க்க (ஈடு.); see *meṭṭu-p-pāyccal 1,2.* 4. எளிதில் இணங்காதவ–ன்–ள்; one whom it is very difficult to persuade. *'மூடர்களுக்குப் படிப்பென்பது மேட்டு மடை'.*

*[மேட்டு + மடை. மேடு → மேட்டு. மடு → மடை]*

**மேட்டூர்** *meṭṭūr,* பெ.(n.) சேலம் மாவட்டத்தில் அமைந்த ஊர்; a village in *Sēlam* dt.

*[மேடு + ஊர். இவ்வூர் குன்றுகள் அமைந்த பகுதியில் அமைந்ததால் இப்பெயர் பெற்றது]*

**மேட்டூரணை** *meṭṭūraṇai,* பெ.(n.) மேட்டூரில் அமைந்த அணை; the dam of *Meṭṭūr.*

*[மேட்டூர் + அணை. தமிழ்நாட்டில் காவிரி ஆற்றில் அமைந்ததும் மிகப்பெரியதுமான அணை.]*



மேட்டூரணை

**மேடகம்** *mēḍagam,* பெ.(n.) மேடம்[1], 1, 2 பார்க்க; see *mēḍam[1]-1,2.*

பிரா. ஏளக.

*[மேழம் → மேடம் = செம்மறியாட்டுக்கடா. மேழம் → மேழகம் = செம்மறியாட்டுக் கடா. மேழகம் → ஏழகம் = செம்மறியாட்டுக்கடா. மேழகம் → மேடகம். (வே.க.4.46, 47)]*

**மேடச்செலவு** *mēḍa-c-celavu,* பெ.(n.) 1. மேழ ஓரையில் ஞாயிறு புகுங்காலம்; (astron.) vernol equinox. 2. விடை (இடபம்), இரட்டை (மிதுனம்), கடகம், மடங்கல் (சிங்கம்) ஆகிய ஓரைகள் (ராசிகள்) சேர்ந்த ஞாயிறு வீதியின் பகுதி; a section of the zodiac embracing the signs Tarus, Gemini, Cancer and Leo.

*[மேழம் → மேடம் + செலவு]*

**மேடசிங்கி** *mēḍaśiṅgi,* பெ.(n.) ஆடு தின்னாப்பாளை (மலை.); worm-killer.

**மேடம்[1]** *mēḍam,* பெ.(n.) 1. செம்மறியாட்டுக் கடா, ஆடு (பிங்.); sheep, ram. 2. ஓரை (ராசி) மண்டலத்தின் முதற்பகுதி; aries of a zodiac. 3. மேடமதி (சித்திரை) (தமிழாண்டின் முதல் மாதம்); the first solar month. *"மேடமாமதி" (கம்பரா. திருவவதா. 110).*



மேட்டூர் அணை

மறுவ. உதள், கொறி, தகர், மறி, மை, வருடை.

*[முழு → முழா = திரண்டமுரசு; முழு → முழுமை = பருமை. முழா → மிழா = பருத்த ஆண்மான். மிழா → மேழம் = செம்மறியாட்டுக் கடா. மேழம் → மேடம் (வே.க.4,46,47)]*

த. மேட > **Skt.** *mēṣa.*

**மேடம்²** *mēḍam,* பெ.(n.) கவசம்; coat of armour.

*[மேழம் → மேடம்]*



மேடம்²

**மேடவிடவம்** *mēḍa-viḍavam,* பெ.(n.) மேடச்செலவு (வின்.) பார்க்க; see *mēḍa-c-celavu.*

*[மேடம் + விடவம்]*

**Skt.** *visuva* > த. விடவம்

**மேடவீதி** *mēḍa-vīdi,* பெ.(n.) விடை (இடபம்), இரட்டை (மிதுனம்), கடகம், மடங்கல் (சிங்கம்) ஆகிய ஓரை (இராசி)கள் சேர்ந்த ஞாயிறு வீதியின் பகுதி (பரிபா. 11, 2, உரை); (astron.) a section of the zodiac embracing the signs Taurus, Gemini, Cancer and Leo.

*[மேடம் + வீதி]*

**மேடவோரை** *mēḍa-vōrai,* பெ.(n.) ஆடு என்னும் விலங்கைக் குறியீட்டு வடிவமாக உடைய முதல் ஓரை (ராசி); first contellation of the zodiac having the ram as its sign, Aries.

*[மேடம் + ஓரை]*

**மேடன்** *mēḍan,* பெ.(n.) மேழ ஓரைக்கு உடையவன், செவ்வாய் (நாமதீப. 98); the planet Mars, as the lord of the sign aries.

*[மேடம் → மேடன். 'ன்' உடைமை குறித்த ஈறு]*

**மேடாதிபன்** *mēḍādiban,* பெ.(n.) நெருப்புக் கடவுள் (அக்கினி தேவன்) (வின்.); Agni, as riding a ram.

*[மேடம் + அதிபன் – மேடதிபன் → மேடாதிபன்]*

**மேடாயனம்** *mēḍāyanam,* பெ.(n.) மேடச்செலவு (வின்.) பார்க்க: [redacted] *mēḍa-c-celavu.*

*[மேடம் + அயனம் – மேடயனம் → மேடாயனம்]*

**Skt.** *ayana* > த. அயனம்.

**மேடாயனமண்டலம்** *mēḍāyana-maṇḍalam,* பெ.(n.) ஞாயிறு வீதியைச் செலவு தொடக்கத்தில் (அயனாரம்பங்களில்) இருபகுதியாக்கும் செலவு (அயன) மண்டலம் (வின்.); (astron.) equinoctial colure.

*[மேடம் + அயனம் + மண்டலம்]*

**Skt.** *ayana* > த. அயனம்.

**மேடிக்கம்பு** *mēḍi-k-kambu,* பெ.(n.) நெசவுக்கருவியின் உறுப்பு [redacted] (இ.வ.); warp beam, roller on which the warp in wound in a loom.

*[மேடி + கம்பு]*




**மேடிடு—தல்** *mēḍiḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) (அடித்து வரப்படும்) மண்ணால் (பள்ளம்) நிரப்பப்படுதல்; to silt up. *"வண்டல் அதிகமாகப் படிந்து ஏரிகள் மேடிட்டு விட்டன".*

*[மேடு + இடு-,]*

**மேடியுப்பு** *mēḍi-y-uppu,* பெ.(n.) வளையலுப்பு; glass-gall.

*[மேடு + உப்பு]*

**மேடு** *mēḍu,* பெ.(n.) 1. உயரம் (பிங்.); height. 2. உயர்வான நிலம்; hilly ground. *'மேனாமினுக்கியைக் கொண்டவன் கெட்டான், மேட்டிலே பயிரிட்டவன் கெட்டான்' (பழ.).* 3. சிறு திடர்; eminence, little hill, hillock, ridge, rising ground. *"மேட்டிமைப்பன" (கம்பரா. நாட்டு. 27).* 4. பெருமை (பிங்.); greatness. 5. வயிறு (பிங்.); abdomen, belly. 6. உள்ளங்கையிலுள்ள மேட்டுப் பகுதிகள்; (Palmistry.) mounts on palm of hand.

ம., க., பட. மேடு; தெ. மெட்ட.

*[முகடு = உச்சி,மேலிடம், கூரை. முகடு → மோடு → மேடு (மு.தா.68)]*

**மேடுகல்லு—தல்** *mēḍu-kallu-,* 5 செ.கு.வி. (v.i.) மேட்டு நிலத்தை வெட்டிச் சமமாக்குதல் (S.I.I.vii. 277); to level down, by digging up the high ground.

*[மேடு + கல்லு-,]*

**மேடும்பள்ளமும்** *mēḍum-paḷḷamum,* பெ.(n.) உயர்ச்சியும் தாழ்ச்சியும்; ups and downs. *'வாழ்க்கை மேடும் பள்ளமுமாகத் தான் இருக்கும்' (உ.வ.).*

*[மேடு + உம் + பள்ளம் + உம்]*

**மேடூகம்** *mēḍūgam,* பெ.(n.) சுவர் (சது.); wall.

*[மேடு → மேடுகம் → மேடூகம்]*

**மேடேற்றம்** *mēḍēṟṟam,* பெ.(n.) மேட்டு நிலம் (S.I.I.iii. 288); high land.

*[மேடு + ஏற்றம்]*

**மேடை** *mēḍai,* பெ.(n.) 1. தளமுயர்ந்த இடப்பகுதி; platform, raised floor. 2. சொற்பொழிவு, இசை நிகழ்ச்சி போன்றவற்றை நடத்த உதவும் சற்று உயரமான தளம்; dais. *'அறிஞர் அண்ணா மேடையேறிப் பேசும் போது பெருங்கூட்டம் கூடும்' (உ.வ.).* 3. செய் குன்று (வின்.); artificial mound. 4. மாடி; storey, terraced house or palace. *"விண்ணார் நிலவுதவழ் மேடை" (தாயு. பைங்கிளி. 54).* 5. சமையலறையில் பொருள்கள் வைக்க உயர்த்தப்பட்ட இடம்; (in kitchen) a berth.

ம. மே; தெ. மேட.

*[முகடு = உச்சி, மேலிடம், கூரை. முகடு → மோடு → மேடு → மேடை (மு.தா.68)]*

**மேடைச்சுவர்** *mēḍai-c-cuvar,* பெ.(n.) அடிச்சுவர் (C.E.M.); basement wall.

*[மேடை + சுவர். சுவல் → சுவர்.]*

**மேடைப்பேச்சு** *mēḍai-p-pēccu,* பெ.(n.) பொதுக்கூட்டங்களில் ஆற்றும் சொற்பொழிவு; public speaking. *'மேடைப்*

*பேச்சுக் கென்று அரசியல் கட்சிகள் தனியான ஆட்களைக் கொண்டுள்ளன' (உ.வ.).*

*[மேடை + பேச்சு. பேசு → பேச்சு.]*

**மேடையேற்று-தல்** *mēḍai-y-ēṟṟu-,* 5 செ.கு.வி. (v.i.) நாடகம், நடனம் முதலியவற்றைப் பலரும் கண்டு களிக்க நிகழ்த்துதல்; to stage (a drama, dance etc.). *'இராமாயண நாட்டிய நாடகத்தை நூறாவது முறையாக மேடையேற்றி நடித்தனர்'.*

*[மேடை + ஏற்று. ஏறு → ஏற்று-,]*

**மேடையேறு-தல்** *mēḍai-y-ēṟu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. நிகழ்ச்சியாக மேடையில் அளிக்கப் படுதல்; (of drama, dance, etc.) to be staged. *'நாடகங்கள் பலவும் மேடையேற வாய்ப்பில்லாமல் இருக்கின்றன'.*

*[மேடை + ஏறு-,]*

**மேடைவீடு** *mēḍai-vīḍu,* பெ.(n.) மேடை, 4 பார்க்க; see *mēḍai 4.*

*[மேடை + வீடு]*

**மேண்டம்** *mēṇḍam,* பெ.(n.) ஆடு (பரி.அக.); ram.

*[மேழம் → மேடம் → மேண்டம்]*



மேண்டம்

**மேத்தியம்** *mēttiyam,* பெ.(n.) 1. தூய்மை; purification, purity, cleanliness. *"மேத்திய மாக்கும் புந்தியும்" (சேதுபு. சாத். 2).* 2. ஒருவகை செடி (சீரகம்) (தைலவ. தைல.); cumin.

**மேத்தியாசம்** *mēttiyāšam,* பெ.(n.) வசம்பு (பரி.அக.); sweet flag.

**மேத்திரம்** *mēttiram,* பெ.(n.) ஆட்டுக்கடா (சங்.அக.); ram.

*[மேழம் → மேடம் → மேட்டிரம் → மேத்திரம்]*

**மேதகம்¹** *mēdagam,* பெ.(n.) 1. தொன் மணிகளுள் ஒன்று (கோமேதகம்) (வின்.); sardonyx. 2. சாலாங்க செய்நஞ்சு (பாடாணம்) (மூ.அ.); a mineral poison.

**மேதகம்²** *mēdagam,* பெ.(n.) மேதகவு (யாழ்.அக.) பார்க்க; see *mēdagavu.*

*[மே + தகம். தகவு → தகம்]*

**மேதகவு** *mēdagavu,* பெ.(n.) 1. மேன்மை; excellence, greatness. 2. மதிப்பு (யாழ்.அக.); value. *"மேதக வாக்கலும்" (சீவக. 1922).*

*[மே + தகவு]*

**மேதகு¹-தல்** *mē-dagu-,* 2 செ.கு.வி. (v.i.) மேன்மையாதல்; to be eminent. *"மேதகு காலி னூக்கங் கண்டோன்" (திருவாச. 3, 23).*

*[மே + தகு-.]*

**மேதகு²** *mēdagu,* பெ.அ. (adv.) குடியரசுத் தலைவர், மாநில ஆளுநரைக் குறிக்கும் முன்னடை; excellency - title and form of address for the president and governor of a state.

[மே → மேதகு]

**மேதகை** *mēdagai,* பெ.(n.) மேன்மை; greatness, excellence, eminence. *"விருத்த மேதகையவர்" (கம்பரா. யுத்த. மந்திரப். 67).*

*[மே + தகை. தகு → தகை.]*

**மேதங்கரர்** *mēdaṅgarar,* பெ.(n.) சாக்கிய முனிவருக்கு முன் தோன்றிய புத்தருள் ஒருவர் (மணிமே. 30, 14, கீழ்க் குறிப்பு); one of the Buddhas before Gautama.

*[மே + தங்கரர்]*

**மேதச்சி** *mēdacci,* பெ.(n.) கற்பரி செய்நஞ்சு (பாடாணம்) (யாழ்.அக.); a mineral poison.

**மேதசு** *mēdašu,* பெ.(n.) மேதம்[2] பார்க்க;see *mēdam* [2].

*[மே → மேத → மேதசு]*

**மேதம்**[1] *mēdam,* பெ.(n.) வேள்வி (யாகம்) (பிங்.); sacrifice.

*[ஏதம் → மேதம் = கேடு, கொலை உயிர்க்காவு கொடுத்துச் செய்யும் வேள்வி]*

**மேதம்**[2] *mēdam,* பெ.(n.) கொழுப்பு (யாழ்.அக.); fat.

*[மே → மேதை → மேதம்]*

**மேதம்**[3] *mēdam,* பெ.(n.) கொலை (வின்.); murder.

*[ஏ → ஏவு → ஏது (ஏவுகை) (வ.வ.98) ஏது → ஏதம் = கேடு. ஏதம் → மேதம்]*

த. மேதம் > **Skt.** *mētha.*

**மேதர்** *mēdar,* பெ.(n.) மேதரவர் பார்க்க; see *mēdaravar.*

*[மே → மேதர்]*

**மேதரம்** *mēdaram,* பெ.(n.) மலை (பிங்.); mountain.

*[மே → மேதரம்]*

**மேதரவர்** *mēdaravar,* பெ.(n.) மூங்கில் வேலை செய்து வாழும் ஒரு வகையினர் (வின்.); a class of people who do bamboo work.

தெ. மேதரவாடு; க. மேதரு,

*[மேதர் → மேதரவர்]*

**மேதவர்** *mēdavar,* பெ.(n.) மேதரவர் பார்க்க (அபி.சிந்.); see *mēdaravar.*

*[மேதர் → மேதரவர்]*

**மேதன்** *mēdaṉ,* பெ.(n.) மேதாவி பார்க்க; see *mēdāvi.* *"மேதா விளையோய்" (கம்பரா. பிராட்டிகளங். 18).*

*[மே → மேதன்]*

**மேதாவர்** *mēdāvar,* பெ.(n.) மேதரவர் (யாழ்.அக.) பார்க்க; see *mēdaravar.*

*[மேதரவர் → மேதாவர்]*

**மேதாவி** *mēdāvi,* பெ.(n.) அறிவுடையவர்; person of supreme intelligence. *"மேதாவிகட்கெல்லா மேலாய" (கம்பரா. இரணிய. 176).*

ம. மேத்தாவி.

*[மேதை = மேன்மை, மேலோன், அறிஞன். மேதாள்வி → மேதாவி (மு.தா. 73)]*

**மேதாவினி** *mēdāviṉi,* பெ.(n.) நாகணவாய்ப்புள் (மூ.அ.); bush myna.


மேதாவினி

மேதி¹ *mēdi,* பெ.(n.) 1. எருமை; buffalo. *"மேதியன்ன கல்பிறங்கியவின்" (மலைபடு. 111).* 2. எருமை முகங்கொண்டவனும் கொற்றவையால் அழிக்கப்பட்டவனுமான ஓர் அசுரன் (பிங்.); a buffalo-faced demon, slain by *Durgā.*

மறுவ. கவலி, காரான்.

*[முள் → மொள் → மொய் = வலிமை. மொய் → மொய்ம்பு = வலிமை (மு.தா.223). மொய் → மய் → மை → மைந்து = வலிமை. மைந்து → மைது → (மைதி) → மேதி = வலிமையுடைய எருமை. ஒ.நோ.எருமை மறம் (மறவனொருவன் தன்படை முதுகிடவும் பகைவர் படையைத் தான் அஞ்சாது எதிர்த்து நிற்கும் புறத்துறை (பு.வெ.7.13))]*

மேதி² *mēdi,* பெ.(n.) வெந்தயம்; fenugreek.

மறுவ. மேத்து, வெந்தயம் வெந்தை.

ம. வெந்தயம்; க. மெத்தெ, மெந்தெய; தெ. மெந்தி; து. மெத்தெ, மெந்தி, மெந்தெ; பட. மெத்தெ.

*[மெல் → மெல்தி → மெத்தி → மேதி]*

த. மேதி > **Skt.** *manthā, methi, methinī, vedhanī.*

மேதி³ *mēdi,* பெ.(n.) களத்திற் பொலி யெருதுகளைக் கட்டுங்கட்டை; stake at the threshing - floor to which oxen are tied.

*[மே → மேழி → மேதி]*

மேதி⁴ *mēdi,* பெ.(n.) நெற்களம் (யாழ்.அக.); threshing - floor.

*[மேடு → மேடி → மேதி]*


மேதி⁴

மேதிக்கவுணன் *mēdi-k-kavuṇaṉ,* பெ.(n.) வைப்பு செய்நஞ்சுவகை (யாழ்.அக.); a prepared arsenic.

மேதிச்சென்னிமிதித்தோள் *mēdi-c-ceṉṉi-midittōḷ,* பெ.(n.) கொற்றவை (வின்.); *Durgā.*

*[மேதி + சென்னி + மிதித்தோள்]*

மேதித்தலைமிசைநின்றாள் *mēdi-t-talai-miśai-niṉṟāḷ,* பெ.(n.) கொற்றவை; *Durgā.*

*[மேதி + தலை + மிசை + நின்றாள்]*

மேதியன் *mēdiyaṉ,* பெ.(n.) மேதியான் (வின்.) பார்க்க; see *mēdiyāṉ.*

*[மேதி → மேதியன்]*

மேதியான் *mēdiyāṉ,* பெ.(n.) (எருமை யூர்வன்) காலன்; Yama, as riding a buffalo. *"சுருதிநாதன் மேதியான் முகநோக்கி" (குற்றா. தல. மந்தமா. 120).*

*[மேதி → மேதியான்]*

**மேதினி** *mēdiṉi,* பெ.(n.) நிலவுலகம் (பிங்.); earth. *"மேதை படப்படர் மேதினியானது" (கம்பரா. அதிகாய. 75).*

*[மே = மேல், மேம்படு. மேதுதல் = பள்ளத்தை நிரப்புதல். மேதை = மேன்மை, மேலோன், அறிஞன். மேதாள்வி → மேதாவி (மு.தா.73). மே → மேது → மேதுனி → மேதினி = மேலாக (நீர்ப்பரப்பின்மேல்) இருக்கும் நிலவுலகம் அல்லது நீர் சூழ்ந்து இருக்கும் நிலவுலகம். mēdini என்னும் சொல் கொழுப்பு, எலும்பு மச்சை, நிணநீர் எனப் பொருள்படும் mēdas என்பதிலிருந்து வந்ததாக மா.வி. அகரமுதலி காட்டுகிறது. இப்பொருள்களும் உடற்றோலுடன் (மேலாக) இருப்பது என்னும் பொருளடிப்படையில் உருவானவையே.]*

**மேதினிபடைத்தோன்** *mēdiṉi-paḍai-t-tōṉ,* பெ.(n.) 1. நிலவுலகத்தைப் படைத்தவன், நான்முகன் (பிரமன்); *Brahmā,* as the creator of the earth. 2. நிலவுலகத் தலைவன், திருமால் (சூடா.); *Viṣṇu,* as the lord of the earth.

*[மேதினி + படைத்தோன். படை → படைத்தோன்.]*

**மேதினிவிளக்கு** *mēdiṉi-viḷakku,* பெ.(n.) உலகத்தில் விளங்கும் புகழ் (கல்.அக.); fame, renown, glory.

*[மேதினி + விளக்கு]*

**மேதை**[1] *mēdai,* பெ.(n.) 1. பேரறிவு; supreme intelligence, powerful intellect. 2. மேன்மை (சூடா.); greatness. 3. பேரறிவாளி (சிறுபஞ். 22); person of supreme intelligence. 4. அறிவன் (புதன்) (பிங்.); the planet mercury.

*[மேல் → மேலை. மேல் → மேன்மை. மேல் → மேன் → மேன்படு → மேம்படு → மேம்பாடு (மு.தா.74). மேல் → மேது → மேதை = மேலான அறிவு (பேரறிவு) உடையவர்]*

**மேதை**[2] *mēdai,* பெ.(n.) கள் (சூடா.); intoxicating drink.

*[(முள்) → முளி. முளிதல் = பொங்குதல். முளிதயிர் = நன்றாய்த் தோய்ந்த தயிர். முண்டகம் = கள். (முள்) → முர → முரப்பு. முரத்தல் = புளித்தல். முர → மோர். முனி → முடை → முதை → (மூதை) → மேதை]*

**மேதை**[3] *mēdai,* பெ.(n.) 1. கொழுப்பு; fat. *"மதுமேதை படப்படர் மேதினியானது" (கம்பரா. அதிகாய. 75).* 2. இறைச்சி (சூடா.); flesh. 3. தோல் (சூடா.); skin. 4. நரம்பு (பிங்.); nerve.

*[மேல் → மேன் → மேனி = உடம்பின் மேற்புறம், உடம்பு (மு.தா.74). மேல் → (மேது) → மேதை = உடம்பின் மேலாக இருக்கும் தோல், தோலுடன் இணைந்திருக்கும் இறைச்சி, கொழுப்பு]*

**மேதை**[4] *mēdai,* பெ.(n.) பொற்றலைக் கையாந்தகரை (மருந்துப் பூடுவகை) (மலை.); Ceylon verbesina.

**மேதை**[5] *mēdai,* பெ.(n.) உடலிலுள்ள ஓகங்களாகிய பதினாறு கலைகளுளொன்று; a yogic centre in the body. *"போக்குவது மேதை கலை" (தத்துவப். 135) (செந். ix, 248).*

**மேதைமரியாதை** *mēdai-mariyādai,* பெ.(n.) மேரை, 3 (இ.வ.) பார்க்க; see *mērai 3.*

*[மேரை → மேதை + மரியாதை]*

**Skt.** *maryāda* > த. மரியாதை.

**மேதைமை** *mēdaimai,* பெ.(n.) மேதை[1], 1 பார்க்க; see *mēdai*[1]*-1.* *"ஆயுமேதைமை தெளிவு" (விநாயகபு. 69, 59).*

*[மேதை → மேதைமை. 'மை'. ப.பெ.ஈறு]*

**மேதையர்** *mēdaiyar,* பெ.(ந.) புலவர் (திவா.); learned men, poets.

மறுவ. அவை, அறிஞர், கலைஞர், கவிஞர், கற்றவர், சங்கம், சவை, புதர், முதுவோர், மூத்தோர்.

*[மேதை → மேதையர்]*

**மேந்தலை** *mēn-talai,* பெ.(n.) 1. மேன்மை (வின்.); eminence, excellence. 2. கப்பலின் காற்று தாக்கும் பக்கம் (வின்.); windward side of a vessel. 3. தலைவன் (இ.வ.); leader.

*[மேல் + தலை]*

**மேந்தானம்** *mēn-dāṉam,* பெ.(n.) உயர்ந்த இடம் (யாழ்.அக.); elevated place, height.

*[மேல் + தானம்]*

**மேந்தி** *mēndi,* பெ.(n.) மேதி[2] (மூ.அ.) பார்க்க; see *mēdi*[2].

*[மேதி → மேந்தி]*

**மேந்திகை** *mēndigai,* பெ.(n.) மேதி[2] (மூ.அ.) பார்க்க; see *mēdi*[2].

*[மேதி → மேந்தி → மேந்திகை]*

**மேந்திரி** *mēndiri,* பெ.(n.) பரண்கட்டு (வின்.); the frame - work of a loft or ceiling.

*[மெந்திரி → மேந்திரி]*

**மேந்தோல்** *mēn-tōl,* பெ.(n.) மேற்றோல் (மீந்தோல்); superficial skin, epidermis. *"மேந்தோல் களைந்த தீங்கொள் வெள்ளெள்" (புறநா. 321, 2).*

*[மேல் + தோல்]*

**மேந்தோன்று-தல்** *mēn-tōṉṟu-,* 5 செ.கு.வி. (v.i.) மேம்பட்டு விளங்குதல்; to become eminent, famous. *"அரசியல் பிழையாது செருமேந் தோன்றி" (பதிற்றுப். 89).*

*[மேல் + தோன்று-,]*

**மேநடைநீர்** *mēnaḍainīr,* பெ.(n.) பருவ காலத்தில் பாசன வாய்க்காலில் பெருகிவரும் நீர்; water that flows first in the irrigation during monsoon. *"இவ்வாய்க்கால் மேநடைநீர் பாயப் பெறுவதாக" (தெ. கல். தொ. 19. கல். 344)*

*[மேல் + நடை + நீர் – மேல் நடைநீர் → மே நடை நீர். மேல் = மேலிடம், முன்னிடம்]*

**மேம்படு-தல்** *mēmbaḍu-,* 20 செ.கு.வி. (v.i.) சிறத்தல்; to rise high, as in status, to be pre-eminent to be great, as is learning. *"நல்லவையுண் மேம்பட்ட கல்வியும்" (திரிகடு. 8).*

ம. மேம்படுக.

*[மேல் → மேன் → மேம்படு (மு.தா. 74) 'படு' து.வி.]*

**மேம்படுநன்** *mēmpaḍunaṉ,* பெ.(n.) மேம்பாடுற்றவன்; one who stands pre-eminent. *"போற்றிக்கேண்மதி புகழ் மேம்படுக" (பொருந. 60).*

*[மேம்படு → மேம்படுநன்]*

**மேம்பாடு** *mēm-pāḍu,* பெ.(n.) 1. (இருக்கும் நிலையிலிருந்து அடையும்) உயர்வான நிலை; upliftment, betterment. *'மனித குலம் மேம்பாட்டிற்கு மட்டுமே அணுஆற்றலைப் பயன்படுத்த வேண்டும்' (உ.வ.).* 2. சிறப்பு;

greatness, grandeur, dignity, pre-eminence. *"விரிந்த மதிநிலவின் மேம்பாடும்" (இலக். வி. 659, உதா.).* 3. (மேலும் பயன்பாடு கருதி செய்யப்படும்) சீரமைப்பு, சீர்திருத்தம்; improvement, development. *'பெரிய நகரங்களின் மேம்பாட்டிற்காகத் திட்டப் பணிகள் செயல்பாட்டில் உள்ளன' (உ.வ.).*

*[மேல் → மேன் → மேன்படு → மேம்படு → மேம்பாடு (மு.தா.74). படு → பாடு, முதனிலைத் திரிந்த தொ.பெ.]*

**மேம்பார்வை** *mēm-pārvai,* பெ.(n.) 1. வேலைகளைக் கண்காணிக்கை; superintendence. 2. அழுத்தமில்லாத நோக்கு (கொ.வ.); superficial or cursory look.

*[மேல் + பார்வை. பார் → பார்வை.]*

**மேம்பாலம்** *mēmbālam,* பெ.(n.) இருப்புப்பாதை முதலியவற்றின் மேலே கட்டப்பட்ட பாலம்; overbridge.

*[மேல் + பாலம் – மேல்பாலம் → மேன்பாலம் → மேம்பாலம். மே → மேல்.]*



மேம்பாலம்

**மேம்புள்ளி** *mēm-pulli,* பெ.(n.) மேம்புள்ளி மதிப்பு பார்க்க; see *mēmpulli-madippu.*

*[மேல் + புள்ளி]*

**மேம்புள்ளிமதிப்பு** *mēmpulli-madippu,* பெ.(n.) அறுவடைக்கு முன் தவச (தானிய) விளைவைப் புள்ளி மதிப்புச் செய்கை; estimate of the produce of fields just before harvest. (Tj).

*[மேம்புள்ளி + மதிப்பு. மதி → மதிப்பு]*

**மேம்போக்கு** *mēm-pōkku,* பெ.(n.) மேலோட்டம்; superficiality. *'நுணுக்கமான சிவனியக் கொண்முடிபு (சைவசித்தாந்தம்) நூலை மேம்போக்காகப் படித்துவிட்டுத் திறனாய்வு செய்ய முடியாது'.*

*[மேல் + போக்கு]*

**மேமூட்டைபோடு-தல்** *mē-mūttai-pōdu-,* 19 செ.குன்றாவி. (v.t.) ஏமாற்றுதல் (கொ.வ.); to deceive.

*[மேல் + மூட்டை + போடு-,]*

**மேமூட்டையாசாமி** *mē-mūttai-y-āšāmi,* பெ.(n.) வஞ்சகன்; cheat.

*[மேல் + மூட்டை + ஆசாமி]*

U. *āsāmi* > த. ஆசாமி.

**மேய்[1]-தல்** *mēy-,* 2 செ.குன்றாவி. (v.t.) 1. விலங்கு முதலியன உணவு கொள்ளுதல்; to graze, feed, prey on as beasts or birds, to gnaw, as white ants. *"பெற்றம்...... .......... மேய்ந்தற்று" (குறள், 273), "மேயுங் குருகினங்காள்" (திவ். திருவாய். 6,1,1), 'மாடுகள் புல் மேய்ந்து கொண்டிருந்தன' (உ.வ.).* 2. பருகுதல்; drink. *"கலங்கு தெண்டிரை மேய்ந்து" (சீவக. 32).* 3. கெடுத்தல் (வின்.); to spoil. *'இந்த வண்டி மாட்டை மேய்ந்துவிடும்'.* 4. பறித்து நுகர்தல் (கொ.வ.); to obtain and enjoy unlawfully. 5. மேற்போதல்; to dominate, to surpass.

*'பேச்சில் அவன் எல்லாரையும் மேய்ந்து விடுவான்'.*

ம. மேய்க; க. மே, மேயு, மேய்; தெ. மேயு; து. மேயுணி, மேபிணி, மேபாவுனி; பட. மேயி; கோத. மெய், மெச்; துட. மிய்; கொலா. மி; நா. மீய்; பர். மேய்; கோண். மேயியானா; குவி. மெயலி; குரு. மென்னா; மா. மினெ; பிரா. பெய்.

*[மீ = உயரம், மேலிடம். மிசை = உயர்ச்சி. மி → மெ → மெச்சு. மெச்சுதல் = உயர்த்திப் பேசுதல். மெ → மே → மேல் = மேம்பாடு. மே → மேய். மேய்தல் = விலங்கு மேலாகப் புல்லைத் தின்னுதல், பெரும்பாலும் கால்நடைகள் நிலத்தில் முளைத் திருப்பனவற்றை அலைந்து திரிந்து தேடித் தின்னுதல் ]*

**மேய்[2]–தல்** *mēy-,* 2 செ.கு.வி. (v.i.) 1. திரிதல் (சஞ்சரித்தல்); to roam. *"உடன்மேயுங் கருநாராய்" (திவ். திருவாய். 6, 1, 2).* 2. விடனாய்த் திரிதல்; to lead a profligate life.

*[மேய்[1] → மேய்–, விலங்குகள் புல் பூண்டுகளை அலைந்து திரிந்து தின்னுதலை உணர்த்தும் மேய்தல் வினையின் பொருள் தின்னுதல் இல்லாமல் வெறுமனே அலைந்து திரிவதை உணர்த்திற்று]*

**மேய்[3]–த்தல்** *mēy-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. புல் முதலியவற்றை விலங்குகள் உண்ணச் செய்தல்; to graze, to feed. *"பசு..... மேய்ப்பாரு மின்றி" (திருமந். 2883), 'அவர்கள் கால்நடைகளை மேய்ப்பதையே தொழிலாகக் கொண்டவர்கள்' (உ.வ.).* 2. மருந்து முதலியன செலுத்துதல் (வின்.); to administer, as physic to horses. *'மசாலை மேய்க்கிறான்'.* 3. அடக்கி யாளுதல் (கொ.வ.); to govern.

ம. மேய்க்க; க. மேயிசு, மேசு; தெ. மேபின்சு; து. மேபாவுனி; கோத. மேச்; துட. மீச்; பட. மேசு; கொலா., நா. மீப்.

*[மே = மேல். மே → மேய். மேய்தல் = விலங்கு புல்லின் மேற்பகுதியைத் தின்னுதல் (தமி.வ.72)]*

**மேய்[4]–தல்** *mēy-,* [redacted] செ.குன்றாவி. (v.t.) 1. கூரை முதலியன வேய்தல்; to cover fully, to thatch, as with leaves, to roof, as with tiles. *"இறைச்சி மேய்ந்து தோல்படுத்து" (தேவா. 838, 4).*

*[மெத்துதல் = மேலிடுதல், மெத்து → மெத்தை = மேல்நிலை, மேல்தளம். மே → மேதுதல் = பள்ளத்தை நிரப்புதல். மே → மேய். மேய்தல் = கூரையின் மேல் இலை வைக்கோல் முதலியவற்றை இடுதல் (மு.தா. 74). மேய் → வேய். வேய்தல் = கூரையின் மேல் வைக்கோலிடுதல் (தமி.வ.72)]*

**மேய்க்கி** *mēykki,* பெ.(n.) ஆடுமாடு முதலியன மேய்ப்பவன்; one who tends cattle, shepherd, cowherd. *"எமதருமனும் பகடு மேய்க்கியாய்த் தனியிருப்ப" (தாயு. சிற்சுகோ.10).*

மறுவ. மேய்ப்பன், இடையன்.

*[மேய் → மேய்க்கி]*

**மேய்கானிலம்** *mēy-kāṉilam,* பெ.(n.) மேய்ச்சற்றரை பார்க்க; see *mēy-c-caṟṟarai* (C.G.).

*[மேய் + கால் + நிலம்]*

**மேய்கோல்** *mēy-kōl,* பெ.(n.) இடையன் கோல் (வின்.); shepherd's crook or staff.

*[மேய் + கோல். ஆடு மாடுகளை மேய்ப்பதற்குப் பயன்படுத்தும் கோல்.]*

**மேய்ச்சல்** *mēyccal,* பெ.(n.) 1. மேய்கை; grazing. *'மாடுகள் மேய்ச்சலுக்குப் போயிருக்கின்றன' (உ.வ.).* 2. மேய்ச் சற்றரை; common pasturage, grazing

ground. *'மேய்ச்சலுக்காகக் காடுகளைப் பெருமளவில் அழித்து வந்துள்ளனர்' (உ.வ.).* 3. உணவு; food. 4. ஊதாரித்தனமாய் (விடனாய்)த் திரிகை; profligacy. 5. கேடுற்றது; anything rendered useless, as land for cultivation. *'இந்தப் புன்செய் மேய்ச்சலாய் விட்டது'.*

ம. மேய்ச்சல்; க. மேகு; து. மேசெல்; பட. மேசலு.

*[மேய் → மேய்ச்சல். 'சல்' தொ.பெ.ஈறு]*

**மேய்ச்சல்காடு** *mēyccal-kāḍu,* பெ.(n.) விலங்குகள் மேயும் காட்டுப்பகுதி; the wild or jungle where beasts graze, pasture-ground.

க. மேகு காடு.

*[மேய்ச்சல் + காடு]*

**மேய்ச்சல்நிலம்** *mēyccal-nilam,* பெ.(n.) மேய்ச்சற்றரை பார்க்க; see *mēy-c-carrarai.*

*[மேய்ச்சல் + நிலம்]*

**மேய்ச்சற்கறையான்** *mēyccar-karaiyān,* பெ.(n.) கறையான் வகை (வின்.); predatory termite.

*[மேய்ச்சல் + கறையான்]*

**மேய்ச்சற்றரை** *mēyccarrarai,* பெ.(n.) ஆடு மாடுகள் மேயுமிடம்; pasture land, common pasturage.

*[மேய்ச்சல் + தரை. மேய் → மேய்ச்சல். 'சல்' தொ.பெ.ஈறு.]*

**மேய்ச்சற்றலம்** *mēy-c-carralam,* பெ.(n.) மேய்ச்சற்றரை பார்க்க (வின்.); see *mēy-c-carrarai.*

*[மேய்ச்சல் + தலம்]*

**மேய்ச்சற்றலை** *mēy-c-carralai,* பெ.(n.) மேய்ச்சற்றரை; pasture land, meadow. *"கன்றுகளுக்கு மேய்ச்சற்றலை பார்க்கையாலும்" (திவ். பெரியாழ். 3, 3, 4, வியா. பக். 570).*

*[மேய்ச்சற்றரை → மேய்ச்சற்றலை]*

**மேய்ப்பன்** *mēyppan,* பெ.(n.) 1. இடையன்; herdsman, shepherd, grazier. 2. ஆளுநர், அடக்கியாளுபவன்; governor. 3. ஆயர் (போதகன்); pastor (Chr.). *'நல்ல மேய்ப்பனா யிரு'.*

*[மேய் → மேய்ப்பன் = ஆடுமாடுகளைக் கட்டுப்பாட்டிற்குள் வைத்து மேயச் செய்பவன், அதுபோல பிறரைக் கட்டுக்குள் வைப்பவன்]*

**மேய்ப்பு** *mēyppu,* பெ.(n.) 1. மேய்க்கை; feeding, pasturing. 2. மேய்க்கைக் குரிய நிலம்; grazing ground.

*[மேய் → மேய்ப்பு. 'பு' பெ.ஆ.ஈறு]*

**மேய்மணி** *mēy-mani,* பெ.(n.) இரை தேடுவதற்கு வெளிச்சந் தந்துதவும்படி நாகம் உமிழ்வதாகக் கருதப்படும் ஒளிக்கல் (இரத்தினம்) (மலை.); gem believed to be ejected by a cobra to serve as a light in finding its prey. *"நாம நல்லராக் கதிர்ப்பட வுமிழ்ந்த மேய்மணி" (அகநா. 72).*

*[மேய் + மணி]*

**மேயம்** *mēyam,* பெ.(n.) 1. அளவிடற்குரியது (சங்.அக.); that which is capable of being estimated. 2. அறியத்தகுந்தது (சங்.அக.); that which is cognisable or capable of

being known. 3. உவமேயம்; that which is compared. *"இயலுமேயமு மானவியலனே" (சிவதரு. கோபுர. 225).*

*[ஏய்தல் = பொருந்துதல். ஏய் → மேய் → மேயம் = பொருத்தி அளவு பார்ப்பது, அளவிடற்குரியது]*

மேயல் *mēyal,* பெ.(n.) 1. மேய்கை; grazing. *"மானினப் பெருங்கிளை மேயலாரும்" (ஐங்குறு. 217).* 2. மேயும் புல் முதலியன; pasture, herbage for cattle to eat. *"பதவு மேயலருந்து மதவு நடை நல்லான்" (அகநா. 14).* 3. பறித்து நுகர்தல் (கொ.வ.); grabbing; obtaining and enjoying unlawfully.

க. மேவு; படை. மேசல்.

*[மேய் → மேயல். 'அல்' தொ.பெ.ஈறு]*

மேயவன் *mēyavaṉ,* பெ.(n.) மேயான் பார்க்க; see *mēyāṉ*. *"மேயவன் றன்னொடு மெண்ணி" (கம்பரா. இலங்கைகேள். 13).*

*[மே → மேவு. மே → மேயான் → மேயவன்]*

மேயான் *mēyāṉ,* பெ.(n.) உறைபவன்; resident, dweller. *"பெருந்துறையின் மேயானை" (திருவாச. 8, 7).*

*[மே → மேவு. மேவுதல் = தங்குதல், உறைதல். மே → மேயான் = ஓரிடத்தில் தங்குபவன்]*

மேர்வை *mērvai,* பெ.(n.) மேரை, 5 (இ.வ.) பார்க்க; see *mērai5*.

*[மேல் → மேர் → மேர்வை]*

மேரக்காலி *mērakkāli,* பெ.(n.) பேய் (கரு.அக.); ghost.

*[மேல்காலி = தரையோடு பொருந்தாது மேலே கால் வைப்பது. மேல்காலி → மேலக்காலி → மேரக்காலி]*

மேரு *mēru,* பெ.(n.) ஏழு தீவுகளின் நடுபாகத்திலுள்ளதும் கோள்கள் சுற்றி வருவதாகக் கருதப்படுவதுமான பொன் மலை; the golden mountain round which the planets are said to revolve, believed to be the centre of the seven *Dvīpas*. *"மாநிலத் திடைநின் றோங்கிய நெடுநிலை மேரு" (சிலப். 28, 48).* 2. மலை (யாழ்.அக.); mountain. 3. தேர் முதலியவற்றின் உச்சியில் அழகணியாக அமைந்த குடம்; ornamental globular top, as of a car. 4. சாய்ந்த கூரையின் உச்சி (இ.வ.); top or ridge of a sloping roof. 5. ஆயிரம் உச்சிகளையும் நூற்றிருபத்தைந்து மேனிலைக்கட்டுகளையும் ஆயிரமுழம் அகலத்தையும் அவ்வளவு உயரத்தையும் கொண்டு விளங்கும் கோயில் (சுக்கிர நீதி, 229); a temple 1000 hands wide and 1000 hands high with 1000 domes and 125 floors. 6. மேருமணி (இ.வ.) பார்க்க; see *mērumaṇi*. 7. பெண்குறி (கொக்கோ. 1, 17); pudendum muliebre. 8. உட்காரும் (ஆசனப்) பலகை (யாழ்.அக.); sitting plank. 9. திருசக்கரம் (ஸ்ரீ சக்ரயந்திரம்); the mystical diagram of *śrīcakram*, made in relief. 10. பன்னீர்க் குடுவை வகை (யாழ்.அக.); carboy, jar, big bottle of rose water.

*[மே → மேல் → மேரு = உயர்ந்து காணப்படுவது. ஏழு தீவுகள் நடுவில் அமைந்ததாகவும் கோள்கள் அதைச் சுற்றி வருவதாகவும் கூறும் கற்பனை மலை வழக்கூன்றியது முதல்நிலை. அடுத்து பொதுப் படையாக மலையைக் குறித்தது. பின்னர் மலைபோல் உயர்ந்து காணப்படுவனவும் இச்சொல்லால் குறிக்கப்பட்டன.]*

த. மேரு > **Skt.** *mēru*.


மேரு

மேருக்குப்பி *mēru-k-kuppi,* பெ.(n.) 1. வழிப் போக்கன் (பயணி) கங்கை நீரை அடைத்துக் கொண்டு செல்லும் ஒருவகைக் கண்ணாடிக் கொள்கலம்; a kind of glass bottle in which Ganges water is carried by pilgrims. 2. மேரு, 10 பார்க்க; see *mēru10.*

*[மேரு + குப்பி]*

**மேருகம்** *mērugam,* பெ.(n.) நறுமண (வாசனை)ப் பண்ட வகை (யாழ்.அக.); a kind of incense.

மேருத்தீபம் *mēru-t-tīpam,* பெ.(n.) மேருவிளக்கு பார்க்க; see *mēru-viḷakku.* *"அணிமிகு மேருத்தீபம்" (பிரத. ஒழிபி. 41).*

*[மேரு + தீபம்]*

மேருதாமன் *mēru-tāmaṉ,* பெ.(n.) சிவ பெருமான்; *Sivaṉ.*

*[மேரு + தாமன்]*

**Skt.** *dhāman* > த. தாமன்.

**மேருமணி** *mēru-maṇi,* பெ.(n.) வழிபாட்டு (செப) மாலை முதலியவற்றின்நாயகமணி (யாழ்.அக.); the principal or central bead in a rosary or necklace.

*[மேரு + மணி]*

**மேருமந்தரபுராணம்** *mērumandara-purāṇam,* பெ.(n.) 14–ஆம் நூற்றாண்டி னிறுதியில் வாமனாசிரியர் செய்ததும், மேருமந்தரர்களின் வரலாற்றைக் கூறுவது மான ஒரு சமணக் காப்பியம்; a Jaina Tamil poem on the lives of *Mēru* and Manthara, by *Vāmanācārya,* composed towards the end of the 14th C.

*[மேரு + மந்திரம் + புராணம்]*

**Skt.** *purāṇa* > த. புராணம்.

மேருயந்திரம் *mēru-yandiram,* பெ.(n.) கதிர்க்கோல் (யாழ்.அக.); spike.

*[மேரு + இயந்திரம்]*


மேருயந்திரம்

மேருவில்லாளன் *mēru-villāḷaṉ,* பெ.(n.) மேருவில்லி பார்க்க; see *mēru-villi.* *"மேரு வில்லாளன் கொடுத்த —— யாவையு மாய்ந்து கொண்டான்" (கம்பரா. நாகபாச. 18).*

*[மேரு + வில் + ஆள் + அன்]*

மேருவில்லி *mēru-villi,* பெ.(n.) மேருமலையை வில்லாகக் கொண்டவன், சிவபெருமான்; *Sivaṉ,* [redacted] having Mt. *Mēru* for his bow. *"மேருவில்லி மஞ்சனச் சாலைவாய்" (தக்க யாகப். 379).*

*[மேரு + வில்லி]*

**மேருவிளக்கு** *mēru-viḷakku,* பெ.(n.) இறைவன் முன் எடுக்கும் அடுக்கு விளக்கு; a cluster of lights, waved before gods.

*[மேரு + விளக்கு]*



மேருவிளக்கு

**மேருவின்வாரி** *mēruviṉ-vāri,* பெ.(n.) பொன்மணல் (யாழ்.அக.); golden sand.

*[மேருவின் + வாரி]*

**மேரை** *mērai,* பெ.(n.) 1. எல்லை; boundary, limit. 2. வகை (வின்.); manner, way. 3. மரியாதை (யாழ்.அக.); rule of propriety or decorum, limits of propriety. 4. அடக்கம் (வின்.); gravity, sobriety, modesty. 5. மொத்த விளைச்சலின்றும் சிற்றூர் வேலைக்காரர், காணியாட்சிக் காரர் முதலியோருக்குக் களத்திற் பிரித்துத் தனியாகக் கொடுக்கப்படும் தவசம்; the portion of the crop, given as a perquisite to holders of *kāṇi-y-āṭci,* or to hereditary village officers and servants, out of the common stock on the threshing-floor. (R.T.).

க., து. மோர; தெ. மேர.

*[மேல் → மேலை → மேரை = மேலெல்லை, எல்லை, அளவு, மதிப்பு, மதித்தளிக்கும் மானியம் (மு.தா.74)]*

த. மேரை > **Skt.** *maryā.*

**மேரைத்திட்டம்** *mērai-t-tiṭṭam,* பெ.(n.) மேரை பிரித்துக் கொடுப்பதற்காக ஏற்பட்ட திட்டம்; regulation or rule relating to the proportion of allowances to the village officers and servants from the crops. (W.G.).

*[மேலை + திட்டம்]*

**மேரைமரியாதை** *mērai-mariyādai,* பெ.(n.) மேரை, 3 (இ.வ.) பார்க்க; see *mērai 3.*

*[மேரை + மரியாதை]*

**Skt.** *maryāda* > த. மரியாதை.

**மேரைமானியம்** *mērai-māṉiyam,* பெ.(n.) முற்காலத்தில் தவசமாகக் கொடுக்கப்பட்டுப் பின்னர் பணமாகச் செலுத்தப்படும் விளைச் சற்பாகம்; grant of a portion of the gross produce of cultivated lands, now commuted into money. (W.G.).

*[மேரை + மானியம்]*

**மேரையழித்தல்** *mērai-y-aḻittal,* பெ.(n.) எல்லையைக் குறிக்கும் வரப்பு முதலியவற்றை அழிக்கை; destruction of landmarks, as by removing survey stones, etc.

*[மேரை + அழித்தல். அழி → அழித்தல். 'தல்' தொ.பெ.ஈறு.]*

**மேல்**[1] *mēl,* பெ.(n.) 1. கீழ்ப்பகுதிக்கு அல்லது அடிப்பகுதிக்கு எதிரான பகுதி, மேலிடம்; that which is above or over, upper side, surface. *"ஓலை..... தொட்டு மேற்பொறியை நீக்கி" (சீவக. 2143). 'அறையின் மேல் தட்டில் திறவுகோல் உள்ளது' (உ.வ.).* 2. அதிகப்படி; upper or higher (limit), further, additional,

extra. *'இது குறித்து மேலும் விளக்கம் தேவை' (உ.வ.).* 3. வானம் (சூடா.); sky. *"மேலுயர் கைலையை" (கம்பரா. யுத்த. மந்திரப். 80).* 4. மேற்கு (பிங்.); west. *'மேல் திசையில் ஞாயிறு மறையும் நேரம்' (உ.வ.).* 5. தலை; head. *"மேவா ருயிருணங்க மேன்முடித்த பிள்ளையன்" (பு.வெ.2,8).* 6. தலைமை; leadership, superiority. *'மேலதிகள்'.* 7. மேன்மை (பிங்.); excellence. 8. உயர்ந்தோர்; the great. *"இன்னாமை நோக்கிப் பசைதல் பரியாதா மேல்" (நாலடி, 60).* 9. உடம்பு; body. *'மேலுக்குச் சுகமில்லை, மேல்வலி'.* 10. கல்வி(அறிவு) (தக்கயாகப். 545, உரை); knowledge, science. 11. இடம் (பிங்.); place. 12. மேலெழுந்தவாரியானது; that which is superficial. 13. முன்புள்ளது; that which goes before. 14. பின்புள்ளது; that which comes after.

ம. மேல்; க., து., பட. மேலு; தெ. மேல.

*[மே = மேல், மேம்பாடு. மேதுதல் = பள்ளத்தை நிரப்புதல். மேவுதல் = மேலிட்டுக் கொள்ளுதல். மே → மேல். எ,ஏ,சே,தெ,தே, மெ,மே,வே ஆகிய எழுத்துக்களில் தொடங்கும் சொற்கள் உயர்ச்சியைக் குறிக்கின்றன. (மு.தா.70–74)]*

இற்றைத் தமிழ்நாட்டிற் போன்றே பண்டைத் தமிழகமாகிய குமரிநாட்டிலும் மேல்கோடியிலேயே பெருமலைத் தொடரிருந்தது. அதனால், நிலம் மேற்கில் உயர்ந்தும் கிழக்கில் தாழ்ந்தும் இருந்தது. இந்நிலைமை பற்றியே குடதிசை மேல் (மேற்கு) என்றும், குணதிசை கீழ் (கிழக்கு) என்றும் பெயர் பெற்றன. (தமி.வ.முன்.11).

*mēlu, a particular high number. Gt. (p.529) compares D. mēl, etc. (KKED XXXVII)*

**மேல்²** *mēl,* பெ.(n.) (ஒன்றோடு ஒப்பிடும் போது குறிப்பிடப்படுவது) சிறந்தது, மேம்பட்டது; better, superior. *'இதுவரை வாங்கிய அரிசியே மேல், சொல்லிச் செய்யாமல் இருப்பதை விடச் சொல்லாமல் இருப்பதே மேல்' (உ.வ.).*

*[மே → மேல்]*

**மேல்³** *mēl,* இடை. (part.) 1. மேல், மீது எனப் பொருள்படும் ஒரு முன்னொட்டு (பி.வி. 45, உரை); a particle meaning on, upon above used with verbs. 2. ஏழாம் வேற்றுமைப் பொருளில் வரும் சொல்லுருபு (தொல். சொல். 82); word used as a locative sign. *'உன் மேல் தவறில்லை, அவன் மேல் பழி சுமத்தப்பட்டுள்ளது'.*

*[ஏ → மே → மேல்]*

ஏழாம் வேற்றுமையின் பொருள் இடம். 'மேல்' மீது எனப் பொருள்பட்டு இடத்தைக் குறிப்பதால் இது ஏழாம் வேற்றுமை உணர்த்தும் சொல்லுருபாக ஆளப்படுகிறது.

**மேல்⁴** *mēl,* வி.அ. (adv.) 1. அதிகமாக (வின்.); more, more than, over. *'சுமார் ஐந்து இலக்க உருபாவுக்கு மேல் கையாடல் செய்யப்பட்டுள்ளது'.* 2. பிறகு; beyond. *'இதற்கு மேல் அவரால் இந்தப் பதவியில் நீடிக்க முடியாது'.* 3. வெளிப்புறத்தில்; on, at. *'பெட்டிக்கு மேல் உள்ளது புத்தகம்'.* 4. முன்; before, previously, formerly. *"சிறுபட்டி மேலோர்நாள்" (கலித். 51).* 5. பற்றி; about. *'சிவபெருமான் மேற் பாடிய நூல்'.* 6. அப்பால் (வின்.); afterwards, subsequently. *"அங்கே போனதின்மேல் எனக்கெழுது".* 7. இனி (உரி.நி.); hereafter.

*[ஏ → மே → மேல் (சு.வி.57)]*

**மேல்கட்டு** *mēl-kaṭṭu,* பெ.(n.) பந்தல் போன்றவற்றில் ஓலைக்கடியில் மேல்பாகத்தில் கட்டும் துணி; cloth spread on the lower side of the thatch of a pandal.

து. மேல்கட்டு.

*[மேல் + கட்டு]*


மேல்கட்டு

**மேல்கடல்** *mēl-kaḍal,* பெ.(n.) மேற்றிசையிலுள்ள கடல்; the Arabian sea, as the western sea. *"மேல்கடல் வானுகத் தின்றுளை வழி" (திருக்கோ. 6).*

*[மேல் + கடல். தமிழ்நாட்டிற்கு மேற்குப் பக்கத்தில் அமைந்த கடல்]*

**மேல்காது** *mēl-kādu,* பெ.(n.) காதின் உயரப்பகுதி; the top part of the ear.

*[மேல் + காது]*

**மேல்கால்** *mēl-kāl,* பெ.(n.) மேல்காற்று பார்க்க (நாமதீப. 91); [redacted] *mēl-kāṟṟu.*

*[மேல் + கால்]*

**மேல்காற்று** *mēl-kāṟṟu,* பெ.(n.) மேற்குத் திசையினின்று வீசும் காற்று (திவா.); west wind. *"கோடை மேல் காற்றே".*

மறுவ. கோடைக்காற்று, கோடை.

ம. மேல்காற்று.

*[மேல் + காற்று]*

**மேல்கீழாதல்** *mēl-kīḻādal,* பெ.(n.) தலை கீழாதல்; topsy - turvy.

ம. மேல்கீழாயி.

*[மேல் + கீழ் + ஆதல். ஆ → ஆதல் 'அல்' தொ.பெ.ஈறு]*

**மேல்கை** *mēlkai,* பெ.(n.) 1. அப்பாலானது; that which is farther or on the further side. 2. உயர்தரம்; higher rank, standing, degree or pedigree. 3. மேடு; highland, elevation. 4. மேற்கு; west.

து. மேல்கயி (வெற்றி, மேன்மை).

*[மேல் + கை]*

**மேல்கோட்டை** *mēl-kōṭṭai,* பெ.(n.) சீரங்கப் பட்டினத்திற்கு அருகில் அமைந்த மாலிய வழிபாட்டிடம்; name of a place of *Vaishṇava* pilgrimage near *śrīraṅga-paṭṭiṉan* in Mysore.

*[மேல் + கோட்டை. திருவரங்கத்திலிருந்து சென்ற இராமானுசர் தங்கிய இடம்.]*

**மேல்சாதி** *mēl-cādi,* பெ.(n.) மேற்குலம் பார்க்க; [redacted] *mēṟkulam.*

க. மேலு சாதி.

*[மேல் + சாதி]*

**Skt.** *jāti* > த. சாதி.

**மேல்சாந்தி** *mēl-cānti,* பெ.(n.) 1. கோயிலின் தலைமைப் பூசகன் (T.A.S.ii.48,49); chief priest, in a temple.

ம. மேல்சாந்தி.

*[மேல் + சாந்தி]*

**மேல்சார்** *mēl-šār,* பெ.(n.) 1. மேல்பக்கம் (கொ.வ.); western side. 2. மேற்கு (யாழ்.அக.); west.

*[மேல் + சார்]*

**மேல்டாப்பு** *mēltāppu,* பெ.(n.) வண்டி முதலியவற்றின் மேற்கூடு (இக்.வ.); roof or hood, [redacted] of a vehicle.

*[மேல் + டாப்பு]*

E. top > த. டாப்பு.

**மேல்தட்டு** *mēl-taṭṭu,* பெ.(n.) 1. மேல்மாடம்; upperstorey. 2. உயர்வானது; superior. *'மேல்தட்டு மக்கள் வாழ்க்கையே வேறானது' (உ.வ.).*

ம. மேத்தட்டு.

*[மேல் + தட்டு]*

**மேல்தட்டுமக்கள்** *mēl-taṭṭu-makkaḷ,* பெ.(n.) 1. உயர் குலத்தினர்; people of high caste. 2. வசதி வாய்ப்புப் படைத்தவர்; people who are in well-to-do position.

*[மேல்தட்டு + மக்கள்]*

**மேல்தரம்** *mēl-taram,* பெ.(n.) சிறந்தது, உயர்வானது; the best sort, superior.

ம. மேத்தரம்.

*[மேல் + தரம்]*

**மேல்தரை** *mēl-tarai,* பெ.(n.) தறியில் நெசவாளர் அமையும் மேட்டுப் பகுதி; the sitting (raised) place of a weaver at loom.

*[மேல் + தரை]*

**மேல்தளம்** *mēl-taḷam,* பெ.(n.) மேற்றளம் பார்க்க; see *mēṟṟaḷam.*

*[மேல் + தளம்]*

**மேல்தறி** *mēl-taṟi,* பெ.(n.) நெசவில் திண்ணை போல் மேடாக்கி அமைக்கப்பட்ட தறி; weaving made at pial like structure.

*[மேல் + தறி]*

**மேல்தாடை** *mēl-tāḍai,* பெ.(n.) கீழ்த் தாடைக்கு மேலாக அமைந்த தாடை; the upper jaw.

க. மேல்தவடெ.

*[மேல் + தாடை]*

**மேல்துண்டு** *mēl-tuṇḍu,* பெ.(n.) தோளில் போடும் துண்டு; towel worn over the shoulder. *'காமராசர் எப்போதும் மேல்துண்டு அணியும் பழக்கமுள்ளவர்'.*

*[மேல் + துண்டு]*



மேல்துண்டு

**மேல்தோல்** *mēl-tōl,* பெ.(n.) மேற்றோல் பார்க்க; see *mēṟṟōl.*

க. மேலுதோலு.

*[மேல் + தோல்]*

மேல்நாடு *mēl-nāḍu,* பெ.(n.) வெளிநாடு (குறிப்பாக) அமெரிக்காவும், ஐரோப்பிய நாடுகளும்; foreign country especially western country. *'மேல் நாட்டு மோகம் இன்றைய இளைஞர்களை மிகுதியாகப் பாதித்திருக்கிறது'.*

*[மேல் + நாடு. மேல் = மேற்கு]*

மேல்நாள் *mēl-nāḷ,* பெ.(n.) மேனாள் பார்க்க; see *mēṉāḷ.*

ம. மேநாள்.

*[மேல் + நாள்]*

மேல்நிலைப்பள்ளி *mēl-nilai-p-paḷḷi,* பெ.(n.) மேனிலைப்பள்ளி காண்க; see *mēṉilai-p-paḷḷi.*

*[மேல்நிலை + பள்ளி. புள் → பள் → பள்ளம். பள் → பள்ளி = சமமான நிலம், சமணப் பள்ளி, கல்விக்கூடம். மேல்நிலை = பள்ளியிறுதி வகுப்பிற்கு மேலானது.]*

மேல்படிப்பு *mēl-paḍippu,* பெ.(n.) மேற்படிப்பு பார்க்க; see *mēṟ-paḍippu.*

*[மேல் + படிப்பு. படி → படிப்பு. 'பு' தொ.பெ.ஈறு.]*

மேல்பல் *mēl-pal,* பெ.(n.) மேல்வாய்ப்பல் பார்க்க; see *mēlvāy-p-pal.*

*[மேல் + பல்]*

மேல்பாகம் *mēlbāgam,* பெ.(n.) மேலாக அமைந்த பாகம்; upper portion.

க. மேல்பாக.

*[மேல் + பாகம். பகு → பாகு → பாகம்]*

மேல்பாதி *mēl-pādi,* பெ.(n.) 1. மேற்குப் பகுதி; western portion. *'பழந்தமிழகத்தின் மேல்பாதி மலையாள நாடாகி விட்டது' (உ.வ.).* 2. மேல் வாரம் (இ.வ.); the share of the produce assigned to the landlord or the government.

*[மேல் + பாதி. பகுதி → பாதி]*

மேல்பால் *mēl-pāl,* பெ.(n.) மேற்குப் பக்கம்; western side. *"பகலிழந்த மேல்பாற் றிசைப் பெண் புலம்புறுமாலை" (திவ். இயற். திருவிருத். 35).*

*[மேல் + பால். பகல் → பால்]*

மேல்பால்விதேகம் *mēl-pāl-vidēgam,* பெ.(n.) ஒன்பது வகை நிலத்தின் பெரும் பிரிவுகளுள் ஒன்று (பிங்.); a continent, one of *nava-kaṇṭam,* q.v.

*[மேல் + பால் + விதேகம்]*

**Skt.** *vi-dēha* > த. விதேகம்.

மேல்பீட்டி *mēl-pīṭṭi,* பெ.(n.) சட்டையின் மேற்பகுதி (இ.வ.); breast of a garment.

*[மேல் + பீட்டி]*

மேல்பேச்சு *mēl-pēccu,* பெ.(n.) பிறருரையை மறுத்தோ, எதிர்த்தோ பேசும் பேச்சு; counter argument, contradicting. *'நீ ஏன் ஒவ்வொரு பேச்சுக்கும் மேல் பேச்சு பேசுகிறாய்?'*

*[மேல் + பேச்சு. பேசு → பேச்சு.]*

மேல்மட்டம் *mēl-maṭṭam,* பெ.(n.) 1. மேற்புறத்தின் மட்டம்; superficial level at the top. 2. மட்டப் பலகை (இ.வ.); mason's level.

*[மேல் + மட்டம்]*




**மேல்மடை** *mēl-maḍai,* பெ.(n.) 1. நீர் மடையை அடுத்துள்ள விளைநிலம்; field near the sluice. (R.T.). 2. மேட்டிலுள்ள வாய்க்கால் (இ.வ.); water-way at high level.

*[மேல் + மடை. மடு → மடை]*

**மேல்மண்டலம்** *mēl-manḍalam,* பெ.(n.) எருமையூர் (மைசூர்)ப் பகுதி; Mysore region. (I.M.P. Sm. 94).

*[மேல் + மண்டலம். மண்டு → மண்டலம்]*

**மேல்மாடி** *mēl-māḍi,* பெ.(n.) வீட்டின் மேனிலைக் கட்டு (வின்.); upper storey.

க. மேலுப்பரிகெ; து. மேல்மாரிகெ, மேலுப் பரிகெ, மேல்மெஞ்சி.

*[மேல் + மாடி]*

**மேல்மிதந்தபுத்தி** *mēl-midanda-butti,* பெ.(n.) மேலெழுத்து வாரியாகக் காணப்படும் அறிவு (ஞானம்), ஆழமில்லாத அறிவு; superficial knowledge or understanding.

*[மேல் + மிதந்த + புத்தி]*

**மேல்முகம்** *mēl-mugam,* பெ.(n.) மேற்குப் பகுதி (நாஞ்.); western division.

*[மேல் + முகம். மேடான பகுதி]*

**மேல்முகவரி** *mēl-mugavari,* பெ.(n.) மடலின் புறத்தே மடலைப் பெறுவோரின் பெயர், ஊர் முதலியனவற்றைக் குறிக்கும் அடையாளம்; super scription, address, [redacted] of a letter. *'மேல் முகவரி தெளிவாக இல்லாத அஞ்சல் உரிய காலத்தில் சேரும் என்று சொல்ல வியலாது' (உ.வ.).*

*[மேல் + முகவரி]*

**மேல்முந்தானை** *mēl-mundāṉai,* பெ.(n.) மேல்முன்றானை பார்க்க (இ.வ.); see *mēl-muṉṟāṉai.*

*[மேல்முன்றானை → மேல்முந்தானை]*

**மேல்முந்தி** *mēl-mundi,* பெ.(n.) மேல் முன்றானை பார்க்க (இ.வ.); see *mēl-muṉṟāṉai.*

*[மேல் + முந்தி]*

**மேல்முந்திரி** *mēl-mundiri,* பெ.(n.) முந்திரி (வின்.); a minute fraction.

*[மேல் + முந்திரி]*

மேல் வாய்ச் சிற்றிலக்கத்தில் அடிமட்ட எண் மேல் முந்திரி என்னும் முந்திரி (1/320) யும் கீழ்வாய்ச்சிற்றிலக்கத்தில் அடிமட்ட எண் கீழ் முந்திரி (1/102, 1/400)யும் ஆகும். (ப.அ.72)

முந்து + இரி = முந்திரி. இரிதல் = விலகுதல், பிளத்தல், கெடுதல். இரிசல் = பிளவு. ஒ.நோ: பின்னம் = பிளவு கீழ்வாயிலக்கம். E. fraction, fL. frang, break. கீழ்வாயிலக்கங்களுள் முந்தியது முந்திரி யெனப்பட்டது. (வே.க.4,12).

**மேல்முந்திரிகை** *mēl-mundirigai,* பெ.(n.) மேல்முந்திரி பார்க்க; see *mēl-mundiri.*

*[மேல் + முந்திரிகை. முந்திரி → முந்திரிகை]*

**மேல்முந்திரை** *mēl-mundirai,* பெ.(n.) மேல்முந்திரி (கணக்கதி. 2, உரை) பார்க்க; see *mēl-mundiri.*

*[மேல் + முந்திரை. முந்திரி → முந்திரை]*

**மேல்முறையீடு** *mēl-muṟaiyīḍu,* பெ.(n.) வழக்கில் தோற்றவர் மேல்முறை மன்றத்தில் செய்யும் முறையீடு; appeal (by one aggrieved by decree or order of a court. *'மாவட்ட நீதி மன்றத்தில் தீர்ப்பை எதிர்த்து உயர் நீதி மன்றத்தில் மேல் முறையீடு செய்ய முற்பட்டனர்'.*

*[மேல் + முறையீடு. முறையிடு → முறையீடு]*

**மேல்முன்றானை** *mēl-muṉṟāṉai,* பெ.(n.) உடுத்தும்போது மேற்புறமாக வரும் சேலையின் முகப்பு (இ.வ.); the front or outer end of a saree, pallu lait on the top of a saree.

து. மெண்ணடெ, மெந்நடெ (பெண்கள் தம் மார்பை மூடிக்கொள்ள பயன்படுத்தும் துணி).

*[மேல் + முன்றானை. முன் + தானை - முன்றானை]*

**மேல்முனை** *mēl-muṉai,* பெ.(n.) உச்சி; top.

*[மேல் + முனை. முன் → முனை]*

**மேல்மூச்சு** *mēl-mūccu,* பெ.(n.) 1. முயற்சி முதலியவற்றால் மேலெழும் பெருமூச்சு; deep breath, as at the time of exertion. *'மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்க ஓடி வந்தார்' (உ.வ.).* 2. இறக்கும் தறுவாயில் மேனோக்கி யெழும் மூச்சுக் காற்று; dying breath.

*[மேல் + மூச்சு. மூசு → மூச்சு.]*

**மேல்யோசனை** *mēl-yōšaṉai,* பெ.(n.) மேலோசனை பார்க்க; see *mēlōšaṉai.*

*[மேல் + யோசனை]*

**Skt.** *yōjanā* > த. யோசனை.

**மேல்வக்கணை** *mēl-vakkaṇai,* பெ.(n.) 1. மேல்முகவரி பார்க்க; see *mēl-mugavari.* 2. தேவைக்கு அதிகமாகப் பேசுதல் (அதிகப் பிரசங்கம்); insolent or impertiment talk. *'மேல் வக்கணை பேசாதே'.*

*[மேல் + வக்கணை]*

**மேல்வட்டம்** *mēl-vaṭṭam,* பெ.(n.) 1. நகர முதலியவற்றின் வெளிச்சுற்று; outlying portion beyond the fixed limits of a city, temple or fort. 2. முதன்மை; superiority, leadership. *"சபையின் மேல்வட்டமாகக் [redacted] வைப் போன் பிதாவாம்" (குமரேச. சத. 58).* 3. மதிப்பு (யாழ்.அக.); regard.

*[மேல் + வட்டம். வள் → வட்டு → வட்டம்]*

**மேல்வட்டி** *mēl-vaṭṭi,* பெ.(n.) வட்டிக்கு வாங்கிக் கூடுதல் வட்டிக்கு விட்டுப் பெறும் பணம்; sum taken on loan which is lent in turn with higher interest by the borrower.

*[மேல் + வட்டி]*

**Skt.** *vṛddhi* > த. வட்டி.

**மேல்வடதிக்காள்வோன்** *mēl-vaḍa-tik-k-āḷvōṉ,* பெ.(n.) காற்றுக் கடவுள் (நாமதீப. 90); god of wind, as the regent of the north-west.

*[மேல் + வட + திக்கு + ஆள்வோன்]*

**மேல்வரி[1]** *mēl-vari,* பெ.(n.) மேல்வரிச்சட்டம் பார்க்க; see *mēlvari-c-caṭṭam.*

*[மேல் + வரி]*

**மேல்வரி²** *mēl-vari,* பெ.(n.) வரியாக உறுதியிடப்படும் தொகையின் மீது குறிப்பிட்ட அளவின்படி கூடுதல் கட்டணம்; surcharge. *'இந்த வகைப் பொருள்களுக்கு 10% விற்பனை வரியும் 2% மேல் வரியும் செலுத்த வேண்டும்'.*

*[மேல் + வரி]*

**மேல்வரிச்சட்டம்** *mēlvari-c-caṭṭam,* பெ.(n.) 1. முன்மாதிரியாய் அமைந்தது; model. 2. ஒருவர் தாம் கையாளுவதற்குத் தாமே அமைத்துக் கொண்ட திட்டச் சொற்றொடர் (வாக்கியம்); motto.

*[மேல்வரி + சட்டம்]*

**மேல்வரிசை** *mēl-varišai,* பெ.(n.) 1. மேலிடமாக அமைந்துள்ள வரிசை; upper row. 2. செங்கற் கட்டடத்தில் எழுதகத்துக்கு மேலுள்ள படைச்சுவர்; blocking course, upper layer in masonry. (C.E.M.).

[redacted] மேல்வரிசெ.

*[மேல் + வரிசை. [redacted]ரி → வரிசை]*

**மேல்வரும்படி** *mēl-varum-baḍi,* பெ.(n.) (சம்பளம் போன்ற வருமானம் தவிர்த்து) அதிகப்படியாகக் கிடைக்கக்கூடிய வருமானம்; income in addition to the salary. *'மேல்வரும்படி இருப்பதால் அவர் பகட்டாக (ஆடம்பரமாக) நடக்கிறார்' (உ.வ.).*

*[மேல் + வரும்படி. வரு(வா) + படி]*

**மேல்வருமானம்** *mēl-varumāṉam,* பெ.(n.) மேல்வரும்படி பார்க்க; see *mēl-varum-baḍi.*

ம. மேல்வரவு.

*[மேல் + வருமானம். வரு → வருமானம். மானம் = அளவு, அவ்வளவு குறித்தபொருள், பொருள்.]*

**மேல்வலி** *mēl-vali,* பெ.(n.) உடம்பு நோவு (கொ.வ.); myalgia.

*[மேல் + வலி]*

**மேல்வா—தல் (மேல்வருதல்)** *mēl-vā-,* 18 செ.கு.வி. (v.i.) 1. எழுதல்; to rise. *"நாச்செற்று விக்குண் மேல் வாராமுன்" (குறள், 335).* 2. ஒருவர் மீது எதிர்த்து வருதல்; to advance against, as an enemy. *"பரதனிப் படைகொடு..... மேல் வந்தான்" (கம்பரா. கிளை. 27).* 3. நெருங்கி வருதல்; to approach. *"மூப்பு மேல் வாராமை முன்னே" (நாலடி, 326).*

*[மேல் + வா (வரு)-.]*

**மேல்வாசகம்** *mēl-vāšagam,* பெ.(n.) மேல் முகவரி பார்க்க (இ.வ.); see *mēl-mugavari.*

*[மேல் + வாசகம். வாயி → வாசி → வாசகம்.]*

**மேல்வாசி** *mēl-vāši,* பெ.(n.) 1. ஒப்படிக் கணக்கைத் தீர்க்குமுன் அறம் முதலிய வற்றிற்குச் செலவிடும் தவசம்; corn distributed for charitable and other purposes before the settlement of harvest accounts. 2. மதிப்பிற்கு மேல் விளைச்சல் காணும் போது நில உரிமை யாளர்க்கு அதிகப்படியாகக் கிடைக்கும் தவசம்; the quantity of corn due to the landlord when the produce exceeds the estimation or *pulli.* 3. மேல்வாசிநிலம் பார்க்க; [redacted] *mēl-vāsi-nilam.*

*[மேல் + வாசி. வாய் → வாசி]*

**மேல்வாசிநிலம்** *mēl-vāśi-nilam,* பெ.(n.) அயல் நிலங்களினும் அதிக வருவாயுள்ள நிலம் (இ.வ.); land that produces *pro rata* more than other lands in the neighbourhood.

*[மேல்வாசி + நிலம்]*

**மேல்வாசியளவு** *mēl-vāśi-y-aḷavu,* பெ.(n.) நெல் முதலியவற்றை அளவில் அதிகப் படுத்திக் காட்டும் அளத்தல் முறை (இ.வ.); a skilful method of measuring corn so as to show more than the real quantity.

*[மேல்வாசி + அளவு. அள் → அள → அளவு]*

**மேல்வாய்** *mēl-vāy,* பெ.(n.) 1. வாயின் மேற்பகுதி (உரி.நி.); palate. 2. மேல் வாயிலக்கம், 1 பார்க்க; see *mēl-vāyilakkam 1.*

ம. மேல்வாயி.

*[மேல் + வாய்]*

**மேல்வாய்க்கணக்கு** *mēlvāy-k-kaṇakku,* பெ.(n.) மேல்வாயிலக்கம், 1 பார்க்க(வின்.); see *mēl- vāyilakkam1.*

*[மேல்வாய் + கணக்கு]*

**மேல்வாய்ச்சிற்றிலக்கம்** *mēlvāy-c-ciṟṟilakkam,* பெ.(n.) மேல்வாயிலக்கம் பார்க்க (வின்.); see *mēl- vāyilakkam.*

*[மேல்வாய் + சிற்றிலக்கம்]*

எண்ணலளவை, சிற்றிலக்கம், பேரிலக்கம் என இருவகை. அரை, கால், அரைக்கால், வீசம் (மாகாணி) முதலிய பின்னவெண்கள் சிற்றிலக்கமும், ஒன்று இரண்டு மூன்று முதலிய முழுவெண்கள் பேரிலக்கமும் ஆகும். சிற் றிலக்கத்தில், கீழ்வாயிலக்கமென்றும் மேல் வாயிலக்கமென்றும் இருவகையுண்டு. கீழரை 1/640, கீழ்க்கால் 1/1280, கீழரைக்கால் 1/2560, கீழ்வீசம் 1/5120 முதலியன கீழ்வாய்ச் சிற்றிலக்கமும், மேலரை (அரை), மேற்கால் (கால்), மேலரைக்கால் (அரைக்கால்), மேல் வீசம் (வீசம்) முதலியன மேல்வாய்ச் சிற்றிலக்கமுமாகும். கீழ்வாய்ச் சிற்றிலக்கத்தொடு ஒப்பு நோக்கியே அரைகால் அரைக்கால் முதலியன மேல்வாய்ச் சிற்றிலக்கமெனப்படும். (ப.ஆ.72).

**மேல்வாய்ப்பல்** *mēlvāy-p-pal,* பெ.(n.) வாயின் மேல்வரிசைப்பல்; upper tooth or teeth. *'குழந்தைக்கு மேல்வாய்ப்பல் முளைத்து விட்டதா?' (உ.வ.).*

மறுவ. அண்பல்.

*[மேல்வாய் + பல்]*

**மேல்வாய்ப்புறம்** *mēlvāy-p-puṟam,* பெ.(n.) மேல்வாய், 1 (பிங்.) பார்க்க(வின்.); see *mēl-vāy 1.*

*[மேல்வாய் + புறம்]*

**மேல்வாயிலக்கம்** *mēl-vāy-ilakkam,* பெ.(n.) 1. ஒன்றிலிருந்து மேலெண்ணப்படும் எண்முறை; enumeration of whole number, as from one upwards, dist. fr. *kīlvāy-ilakkam.* 2. பின்னத்தில் மேலெழுதப்படும் எண் (வின்.); (Arith.) numerator of a fraction.

*[மேல்வாய் + இலக்கம்]*

**மேல்வாரதார்** *mēl-vāratār,* பெ.(n.) நிலத்தின் உரிமையாளர்; the proprietor or owner of the land.

*[மேல்வாரம் + தார்]*

Skt. *dārin* > த. தார்.

**மேல்வாரம்** *mēl-vāram,* பெ.(n.) விளைவி லிருந்து உரிமையாளருக்குக் கொடுத்தற் குரிய தவசம்; the proportion of the crop or produce claimed by the land-holder, dist. fr. *kuḍi-vāram.* (C.G.). *"இந்நிலம் உழுது மேல் வாரத்தால் வந்து நெல்லு ஆயிரத்திருநூற்றி பத்தைங்கல்" (தெ. கல். தொ. 4. கல். 223).*

ம. மேல்வாரம்.

*[மேல் + வாரம்]*

**மேல்வாரை** *mēl-vārai,* பெ.(n.) 1. சாரத்தின் மேற் போடப்படும் பலகை; planks in scaffolding. 2. ஊர்தி (வாகனம்) முதலிய வற்றைத் தூக்கிச் செல்ல உதவும் தண்டு; poles for carrying *vāganam* etc., tied to it on the outside. 3. கைம்மரம்; rafter.

*[மேல் + வாரை. வார் → வாரை]*

**மேல்விசாரணை** *mēl-višāraṇai,* பெ.(n.) 1. கண்காணிப்பு (வின்.); superintendence, inspection. 2. மேற்கொண்டு செய்யும் புலனாய்வு (விசாரணை); further enquiry or trial, retrial, rehearing.

*[மேல் + விசாரணை]*

Skt. *vi-cāraṇā* > த. விசாரணை.

**மேல்விட்டம்** *mēl-viṭṭam,* பெ.(n.) வீட்டின் முகட்டு வளை (வின்.); ridge-piece.

*[மேல் + விட்டம்]*

**மேல்விட்டவளைவு** *mēl-viṭṭa-vaḷaivu,* பெ.(n.) கட்டட வளைவின் வெளிவீச்சு; extrados of an arch.

*[மேல்விட்ட + வளைவு. முள் → (மள்) → வள் → வளை → வளைவு]*

**மேல்விதேகம்** *mēl-vidēgam,* பெ.(n.) மேல்பால்விதேகம் (வின்.) பார்க்க; see *mēlpālvidēgam.*

*[மேல் + விதேகம்]*

Skt. *vi-dēha* > த. விதேகம்.

**மேல்விரி** *mēl-viri,* பெ.(n.) 1. படுக்கையின் மேல்விரிப்பு; bed-sheet. *"நாநா வர்ணமா யிருப்பதொரு மேல்விரியை விரித்தாற் போலே" (ஈடு. 7, 6, 6).* 2. மேற்கட்டி (விதானம்); canopy.

*[மேல் + விரி]*

**மேல்விரிப்பு** *mēl-virippu,* பெ.(n.) மழைக் காகவோ, சூரிய ஒளி மறைப்புக் காகவோ மேலாகக் கட்டும் துணி; an awning.

ம. மேல்விரிப்பு.

*[மேல் + விரிப்பு]*

**மேல்விலங்கு** *mēl-vilaṅgu,* பெ.(n.) உயிர் மெய்களில் இகர ஈகாரங்களைக் குறிக்க மெய்கள் மேல் இடும் குறியீடு (தொல். எழுத். 17, உரை); (Gram.) sign. of i, *ī,* in vowel consonants.

*[மேல் + விலங்கு. வில் → விலங்கு = குறுக்காக வளர்வது, குறுக்காக நிற்கும் குன்று, குறுக்குக் கோடுகள் போல் உயிர் மெய்யெழுத்துகளில் இகர ஈகாரங்களைக் குறிக்கும் அடையாளமாக உயிர்மெய் எழுத்துகளின் மேல் வரையும் வளைவு. உயிர்மெய் எழுத்துகளின் மேல் இடம் பெறுவது மேல்விலங்கு.]*

**மேல்விலாசம்** *mēl-vilāšam,* பெ.(n.) மேல்முகவரி பார்க்க; see *mēl-mugavari.*

து. மேல்விளாச.

*[மேல் + விலாசம்]*

Skt. *vi-lāsa* > த. விலாசம்.

**மேல்விழு-தல்** *mēl-viḻu-,* 2 செ.கு.வி. (v.i.) 1. முற்படச் சென்று பாய்தல்; to rush, as upon an enemy. *"கம்ஸப் ரேரிதராய்......... மேல்விழுவார்கள்" (ஈடு. 10, 3, 9).* 2. வலியப் புகுதல்; to volunteer, to offer voluntarily. *"மேல் வீழ்ந்து நாமே விளம்பினோம்" (தனிப்பா. ii, 97, 249).* 3. ஊக்கத்துடன் செயலில் முந்துதல்; to fall to work with enthusiasm.

க. மேல்பிழு; து. மேலுகு பூருனி (ஒன்றின் மேல் விழுதல், தாக்குதல்); பட. மேலெபுய்.

*[மேல் + விழு-,]*

**மேல்விளாசம்** *mēl-viḷāšam,* பெ.(n.) மேல் முகவரி பார்க்க; see *mēl-mugavari.*

*[மேல் + விலாசம்]*

Skt. *vilāsa* > த. விளாசம்.

**மேல்விளைவு** *mēl-viḷaivu,* பெ.(n.) 1. பிற் பயன்; consequence, future result. *"என்னதாகு மேல் விளை வென் றிருந்தா னிராமன்" (கம்பரா. கடல்காண். 12).* 2. மேற் செய்ய வேண்டிய செயல்; business that ought to be done in the near future. *"தூதன் வந்திறைஞ்சி மேல்விளைவு மனையன்றன் வரவுஞ் சொலி" (பிரபோத. 10, 14).* 3. ஓராண்டில் அதிகப்படியாகப் பயிரிட்டுப் பெறும் விளைச்சல் (இ.வ.); additional or extra crop for the year.

க. மேல்விழு; பட. மேல்புய்.

*[மேல் + விளைவு. விளை → விளைவு]*

**மேல்வினை** *mēl-viṉai,* பெ.(n.) 1. இப் பிறப்பிலே செய்யும் நற்செயல் (புண்ணியம்), அறங்கடை (பாவம்) கள்; karma which is yet to come. *"மெய்ஞ்ஞானத்தால்........ மேல்வினை கூடாது" (வேதா. சூ. 162).*

2. மேல்விளைவு, 1 பார்க்க (இ.வ.); see *mēl-viḷaivu*1.

*[மேல் + வினை]*

**மேல்வீடு** *mēl-vīḍu,* பெ.(n.) 1. தரையில் அமைந்த அறைகளுக்கு மேல் அறைகள் அமையுமாறு கட்டப்பட்ட வீடு, மெத்தை வைத்த வீடு; storeyed house. 2. வீட்டின் மேல் கட்டப்பட்ட அறை அல்லது அறைகள்; upper storey. *'அப்பா மேல் வீட்டில் இருக்கிறாரா பார்' (உ.வ.).* 3. துறக்கம் (மோட்சம்) (ஈடு.); heaven.

மறுவ. மாடிவீடு, மெத்தைவீடு.

*[மேல் + வீடு]*

**மேல்வீராணம்** *mēl-vīrāṇam,* பெ.(n.) வட வார்க்காடு மாவட்டத்திலுள்ள ஓர் ஊர்; a village in North Arcot dt.

*[மேல் + வீராணம். பராந்தகமன்னனின் சிறப்புப் பெயர்களுளொன்று வீர நாராயணன். மேற்குத் திசையில் அமைந்த வீர நாராயணபுரம் மேல் வீரநாராயணபுரம். அது மேல் வீராணமாய் மருவியுள்ளது. ஆர்க்காடு வட்டத்தில் வீர நாராயணபுரம் என்னும் ஊர், தென்னார்க்காடு மாவட்டத்திலுள்ள வீராணத்தேரி என்னும் ஏரி, திருவண்ணாமலை வட்டத்திலுள்ள வீராணம் என்னும் ஊர், அம்மன்னன் பெயரால் பெயர் பெற்றவை.]*

**மேல்வெள்ளம்** *mēl-veḷḷam,* பெ.(n.) முதல் வெள்ளத்திற்குப் பின்வரும் வெள்ளம் (இ.வ.); second or subsequent spate.

*[மேல் + வெள்ளம். விள் → வெள் → வெள்ளம் = வெளுப்பான புதுப்பெருக்கு நீர்]*

**மேல்வேட்டி** *mēl-vēṭṭi,* பெ.(n.) துண்டு; towel.

*[மேல் + வேட்டி. வெட்டு → வெட்டி → வேட்டி]*

**மேலகம்** *mēlagam,* பெ.(n.) மேல்வீடு, 2 பார்க்க; see *mēl-vīḍu* 2.

*[மேல் + அகம்]*

**மேலங்கம்** *mēlaṅgam,* பெ.(n.) 1. வெளிப் படை; exterior, external appearance. 2. வெளிப் பகட்டு; outward show.

*[மேல் + அங்கம்]*

**Skt.** *aṅga* > த. அங்கம்.

**மேலங்கி** *mēlaṅgi,* பெ.(n.) மேற்சட்டை (வின்.); outer coat.

து. மேலங்கி.

*[மேல் + அங்கி]*

**Skt.** *aṅgin* > த. அங்கி.

**மேலடி** *mēlaḍi,* பெ.(n.) தவசமாகச் செலுத்தும் இறை (T.A.S.vi. 14); tax paid in kind.

*[மேல் + அடி]*

**மேலடைப்பு** *mēl-aḍaippu,* பெ.(n.) மேற் கூரை அல்லது மச்சின் அடிப்புறத்தில் தைக்கப்படும் பலகை (இ.வ.); ceiling planks, planks of a loft below the roof.

*[மேல் + அடைப்பு. அடை → அடைப்பு. 'பு' தொ.பெ.ஈறு]*

**மேலத்தாட்சி** *mēla-t-tāṭci,* பெ.(n.) உறுதி மொழி (வின்.); attestation, confirmatory sworn statement, written or oral.

*[மேல் + அத்தாட்சி]*

**Skt.** *hasta-sākṣin* > த. அத்தாட்சி.

**மேலத்து** *mēlattu,* பெ.(n.) பெருமிதம்; superior airs. *"மிகமேலத்தாய்ப் பேசிவெளிப் பகட்டாய்" (பஞ்ச. திருமுக. 970).*

**மேலதிகம்** *mēladigam,* பெ.(n.) தேவைக்கு அதிகமாக கூடுதல்; additional, extra. *'உன்னிடம் மேலதிகமாகவுள்ள பாவாணரின் கட்டுரைப் படியொன்றை என்னிடம் கொடுக்கக் கூடாதா?'. 'மேலதிகமாக உள்ள ஆடைகளை ஆதரவற்றோருக்குக் கொடுத் துதவலாம்'.*

*[மேல் + அதிகம்]*

**மேலதிகாரம்** *mēladigāram,* பெ.(n.) உயர் அதிகாரம், கண்காணிக்கும் பொறுப்பு; higher authority.

து. மேலதிகார.

*[மேல் + அதிகாரம். அதி + (கரி)காரம் → அதிகாரம் = மிகுதி, வலிமை, ஆட்சி.]*

**மேலதிகாரி** *mēladigāri,* பெ.(n.) உயர் அதிகாரி, பணியைக் கண்காணிக்கும் பொறுப்பதிகாரி; high command, boss. *'அரசு அலுவலகங்களில் குறைந்த எண்ணிக்கையில்தான் மேலதிகாரிகள் இருப்பார்கள்'.*

து. மேலதிகாரி.

*[மேல் + அதிகாரி]*

**மேலப்பட்டு** *mēla-p-paṭṭu,* பெ.(n.) செங்கல் பட்டு மாவட்டத்திலுள்ள ஓர் ஊர்; a village in *Ceṅgalpaṭṭu.*

*[மேல் + பட்டு – மேல்பட்டு → மேலப்பட்டு. செங்கல்பட்டு, மதுராந்தகம் வட்டங்களில் இப்பெயர் கொண்ட ஊர்கள் சில உள்ளன. திசை அடிப்படையில் கீழ்ப்பகுதி ஊர்களினின்று வேறுபடுத்திக்காட்ட அமைந்ததே 'மேல்' அடை]*

**மேலவர்** *mēlavar,* பெ.(n.) அறிஞன் (திவா.); wise man.

மறுவ. ஆய்ந்தோர், ஆரியர், ஆன்றோர், உயர்ந்தோர், உலகு, சான்றோர், நல்லவர், மிக்கோர்.

*[மேல் → மேலவர்]*

**மேலவர்க்கிறைவன்** *mēlavar-k-kiṟaivaṉ,* பெ.(n.) மேலவரிறைவன், 1 பார்க்க (திவா.); see *mēlavar-iṟaivaṉ1.*

*[மேலவர்க்கு + இறைவன்]*

**மேலவரிறைவன்** *mēlavar-iṟaivaṉ,* பெ.(n.) 1. முருகக் கடவுள்; Lord Murugan, Kandan. 2. இந்திரன்; Indran.

*[மேலவர் + இறைவன். இறை → இறைவன்]*

**மேலவளைவு** *mēla-valaivu,* பெ.(n.) மதுரை மாவட்டம் மேலூர் வட்டத்திலுள்ள ஊர்; [redacted] village in Madurai dt, *Mēlūr* taluk.

*[மேல் + வளைவு. வளைவு அல்லது வளவு ஒருவருக்குச் சொந்தமான பல வீடுகள் சேர்ந்த இடம். கள்ளர்கள் இப்பகுதியை வளைத்துக் குடியேறியவூர் என்றும் காரணம் கூறுவர்.]*

**மேலவன்** *mēlavaṉ,* பெ.(n.) 1. பெரியோன்; great or superior person. *"மேலவன் விளம்பலும் விளம்பன் மேயினான்" (கம்பரா. விபீடண. 78).* 2. அறிஞன் (திவா.); wise man. 3. தேவன் (பிங்.); celestial being. 4. மேலிடத்துள்ளவன்; one who is seated high, as on a horse. *"குதிரையின் றலைகள் கொய்து மேலவன் சிரத்தைச் சிந்தி" (கம்பரா. அதிகாய. 201).*

ம. மேலவன்.

*[மேல் → மேலவன்]*

**மேலவை** *mēlavai,* பெ.(n.) சட்டமன்ற உறுப்பினர்கள் தன்னாட்சி (சுயாட்சி) அமைப்புகளால் தேர்ந்தெடுக்கப்பெறும் உறுப்பினர்கள், ஆளுநரால் அமர்த்தப் (நியமிக்கப்) பெறுபவர்கள், திறனாய் வறிஞர்கள் ஆகியோர்களைக் கொண்ட அவை; upper chamber in the bicameral legislature (of a state). *'மேலவையில் அமர்த்த (நியமிக்க)ப் பெற்றவர்கள் யாவரும் மக்கள் நலனில் கருத்து கொள்தல் வேண்டும்'.*

*[மேல் + அ[redacted] அ[redacted] → அ[redacted]]*

**மேலழுக்கு** *mēlaḻukku,* பெ.(n.) உடம்பழுக்கு (வின்.); dirt or filth on the body.

*[மேல் + அழுக்கு]*

**மேலறை** *mēlaṟai,* பெ.(n.) உயரே அமைந்த உள் வீடு, அரங்கு; upper compartment.

து. மேல் அதெ.

*[மேல் + அறை]*

**மேலன்** *mēlaṉ,* பெ.(n.) மேலவன் பார்க்க; see *mēlavaṉ.*

ம. மேலன்.

*[மேல் → மேலன். 'அன்' ஆ.பா.ஈறு]*

**மேலனம்** *mēlaṉam,* பெ.(n.) 1. பழக்கம்; acquaintance. 2. மேளனம், 1, 3 பார்க்க (யாழ்.அக.); see *mēḷaṉam1,3.*

*[மேல் + அனம்]*

**மேலா[1]–த்தல்** *mēlā-,* 12 செ.குன்றாவி. (v.t.) மேற்புறமாக்குதல் (யாழ்.அக.); to turn upward.

*[மேல் + ஆ–,]*

**மேலா²–தல்** *mēlā-,* 6 செ.கு.வி. (v.i.) 1. சிறத்தல் (கொ.வ.); to excel. 2. வெற்றி பெறுதல்; to succeed, overcome.

து. மேலாபுனி.

*[மேல் + ஆ–,]*

**மேலா³** *mēlā,* பெ.(n.) மேலிடம், மேற்பட்ட அதிகாரப் பதவி (இ.வ.); superior or higher authorities. *'மேலாவிலிருந்து ஆணை வந்துள்ளது'.*

*[மேல் → மேலா]*

**மேலாக்கம்** *mēlākkam,* பெ.(n.) உயர்வு, மேம்பாடு; elevation, promotion.

ம. மேலாக்கம்.

*[மேல் + ஆக்கம். ஆக்கு → ஆக்கம்]*

**மேலாக்கு** *mēlākku,* பெ.(n.) மகளிர் மார்பின் மேலிடும் சேலை; upper garment worn by women, the part of a saree thrown over breast and shoulders.

*[மேல் + ஆக்கு]*

**மேலாக¹** *mēlāga,* வி.எ. (adv.) மேல் பரப்பை ஒட்டிய பகுதியில்; on the surface, not deeply. *'விதையை மேலாக ஊன்ற வேண்டும் அப்போது தான் எளிதில் முளைக்கும்' (உ.வ.).*

*[மேல் + ஆக]*

**மேலாக²** *mēlāga,* வி.எ. (adv.) அதிகமாக, மேல்; more than. *'கடந்த ஓராண்டுக்கும் மேலாக அனுமதி கேட்டுப் போராட்டம் நடைபெறுகிறது'. 'அவர் ஒரு மணி நேரத்திற்கும் மேலாகப் பேசிக் கொண்டிருக்கிறார்'.*

*[மேல் + ஆக]*

**மேலாகு–தல்** *mēlāgu-,* 7 செ.கு.வி. (v.i.) மேலா²–தல் பார்க்க; see *mēlā²-,*

து. மேலாபுனி.

*[மேல் + ஆகு–, ஆ → ஆகு]*

**மேலாடை** *mēlāḍai,* பெ.(n.) 1. மேல்துண்டு, மேற்றுணி; upper cloth, cloth worn loosely over the shoulders. *"மேலாடை வீழ்ந்த தெடுவென்றான்" (நள. கலிநீங்கு. 45).* 2. காய்ச்சும் பாலின் மேற்பரப்பில் படியும் ஏடு; cream of milk.

ம. மேலாட; க. மேலுது.

*[மேல் + ஆடை]*

**மேலாண்மை** *mēlāṇmai,* பெ.(n.) பிறரைக் கட்டுப் படுத்தக்கூடிய வலு (பலம்), மேலாளுமை, மேலோங்கிய நிலை; dominance, suzerainty. *'அணு ஆயுத மேலாண்மை'.*

*[மேல் + ஆண்மை. ஆள்(ளு)மை → ஆண்மை]*

**மேலாண்(மை)இயக்குநர்** *mēlāṇ(mai)-iyakkunar,* பெ.(n.) ஆளுவ (நிருவாக)த் துக்காக அரசின் ஒப்புதலுடன் அமர்த்தப்படும் சிறப்பு அதிகாரமுடைய உயர் அதிகாரி; managing director.

*[மேலாண்மை + இயக்குநர்]*

**மேலாதிக்கம்** *mēlādikkam,* பெ.(n.) முறை யற்ற அதிகாரம், கட்டுப்படுத்தி ஆளும் அதிகாரம்; hegemony (of a country), domination (by a nation or a group of people). *'தீவிர (பயங்கர) வாதிகளின் மேலாதிக் கத்தில் மேலும் சிலர் சிக்கியுள்ளனர்'.*

*[மேல் + ஆதிக்கம்]*

**மேலாநெல்லி** *mēlā-nelli,* பெ.(n.) ஒரு வகைச் செடி; black-berried feather foil.

*[மேலா + நெல்லி]*

**மேலாப்பு** *mēlāppu,* பெ.(n.) மேற்கட்டு (மேல்விதானம்); awning canopy. *"விண்ணீல மேலாப்பு விரித்தாற்போல் மேகங்காள்" (திவ். நாய்ச். 8,1).*

*[மேல் → மேலாப்பு]*

**மேலாம்புறம்** *mēlām-puṟam,* பெ.(n.) மேலெழுந்த வாரி; superficiality.

*[மேல் → மேலாம் + புறம்]*

**மேலாம்மினுக்கி** *mēlām-miṉukki,* பெ.(n.) மேலால்மினுக்கி பார்க்க; see *mēlāl-miṉukki. 'மேலாம்மினுக்கியைக் கொண்டவன் கெட்டான், மேட்டிலே பயிரிட்டவன் கெட்டான்' (பழ.).*

*[மேலால்மினுக்கி → மேலாம்மினுக்கி]*

**மேலாமத்தூர்** *mēlāmattūr,* பெ.(n.) விருது நகர் மாவட்டம், சாத்தூர் வட்டத்திலுள்ள ஊர்; a village in Virudunagar dt., *Sāttūr* taluk.

*[மேல் + ஆமத்தூர். ஆமத்தூர் என்னும் ஊருக்கு மேற்கே அமைந்தவூர்]*

**மேலாமரம்**[1] *mēlā-maram,* பெ.(n.) கட்டு மரவகை (இ.வ.); a kind of catamaran.

*[மேலா + மரம்]*

**மேலாமரம்**[2] *mēlā-maram,* பெ.(n.) பட்டினவரின் கருவி வகை (அபி.சிந்.); a kind of fisherman's instrument.

*[மேலா + மரம்]*

**மேலாமினுக்கி** *mēlā-miṉukki,* பெ.(n.) மேலால்மினுக்கி பார்க்க (வின்.); see *mēlāl-miṉukki.*

*[மேலா + மினுக்கி]*

**மேலாமுதுரம்** *mēlā-muduram,* பெ.(n.) கத்தூரிமானின் எலும்பு (யாழ்.அக.); bone of musk-deer.

*[மேலா + முதுரம்]*

**மேலாயினார்** *mēlāyiṉār,* பெ.(n.) உயர்ந்தோர்; elders. *"இது மேலோயி னாரிடங்களிற் பூப்புணர்த்துமாறு" (இறை. 43, பக். 175).*

க. மேலாதவரு.

*[மேல் + ஆயினார்]*

**மேலார்** *mēlār,* பெ.(n.) 1. மேலாயினார் பார்க்க; see *mēlāyiṉār.* 2. வீரர்; warriors. *"மேலாரிறையமருள்" (பு.வெ. 9,8).*

*[மேல் → மேலார்]*

**மேலார்ப்பு** *mēlārppu,* பெ.(n.) மேலாப்பு பார்க்க (யாழ்.அக.); see *mēlāppu.*

*[மேலாப்பு → மேலார்ப்பு]*

**மேலால்**[1] *mēlāl,* வி.எ. (adv.) உயர்தரமான; upper, higher.

*[மேல் → மேலால்]*

**மேலால்**[2] *mēlāl,* வி.எ. (adv.) 1. இனிமேல்; hereafter. *'மேலால் இப்படிச் செய்யாதே'.* 2. மேலெழுந்த வாரியாக; superficially. *'அவன் வேலை எப்பொழுதும் மேலாலாகத் தான் இருக்கும்' (உ.வ.).*

*[மேல் → மேலால்]*

**மேலால்மினுக்கி** *mēlāl-miṉukki,* பெ.(n.) மேனியை அழகுபடுத்தி(அலங்கரித்து)க் கொண்டு மினுக்குபவள் (வின்.); woman who decks herself meretriciously.

*[மேலால் + மினுக்கி. மினுக்கு → மினுக்கி. 'இ'.பெ.பா.ஈறு.]*

**மேலாலம்** *mēlālam,* பெ.(n.) மழை (சது.); rain.

*[மேல் + ஆலம். ஆல் → ஆலம் = நீர், மழை]*

**மேலாலவத்தை** *mēlālavattai,* பெ.(n.) நெற்றியில் (லலாடத்தில்) ஆதன் (ஆன்மா) தங்கி நிற்கும் நிலைகளாகிய விழிப்பில் விழிப்பு (சாக்கிரத்திற் சாக்கிரம்), விழிப்பில் கனவு (சாக்கிரத்திற் சொப்பனம்), விழிப்பில் உறக்கம் (சாக்கிரத்தில் சுழுத்தி), விழிப்பில் அயர்வுறக்கம் (சாக்கிரத்தில் துரியம்), விழிப்பில் உயிர்ப்படக்கம் (சாத்திரத்தில் துரியாதீதம்) என்னும் ஐவகை நிலைகள் (அவத்தைகள்); (சி.சி. 4, 35, நிரம்ப); (Saiva) the five *avattai* which the soul, seated in the forehead, undergoes viz. *šākkirattiṟ-šākkiram, šakkirattiṟ-soppanam, šākkirattil-suḻutti, šakkirattil-turiyam, šākkirattil turiyātītam.*

*[மேலால் + அவத்தை]*

**Skt.** *ava-sthā* > த. அவத்தை.

**மேலாவலை** *mēlā-valai,* பெ.(n.) மீன் பிடிக்கும் வலை வகை (அபி.சிந்.) (இ.வ.); a kind of fishing net, used in the sea.

*[மேலா + வலை]*

**மேலாவு** *mēlāvu,* பெ.(n.) மேலதிகாரி; high command.

*[மேல் → மேலா → மேலாவு (மு.தா. 74)]*

**மேலாழியார்** *mēlāḻiyār,* பெ.(n.) வித்தியாதர மன்னர்; Vittiyadara chiefs. *"மேலாழியார் வெள்ளிவேதண்ட லோகம்" (தக்கயாகப். 545).*

*[மேல் + ஆழியார். ஆழி → ஆழியார்]*

**மேலாள்** *mēlāḷ,* பெ.(n.) 1. நாற் குலத்து (சாதியு) ளொன்றைச் சேர்ந்தவன்; caste Hindu. *'மேலாளா ? கீழாளா?'.* 2. கண் காணிப்போன்; overseer, supervisor.

ம. மேலாள்.

*[மேல் + ஆள்]*

**மேலாளர்** *mēlāḷar,* பெ.(n.) செயலாட்சி யாளர்; manager. *'உங்கள் அலுவலகத்தின் மேலாளர் திறமைசாலி'.*

*[மேல் + ஆளர். மேல் பார்வை பார்ப்பவர்.]*

**மேலான்** *mēlāṉ,* பெ.(n.) மேலோன் பார்க்க; see *mēlōṉ.*

ம. மேலான்.

*[மேல் → மேலான்]*

**மேலான** *mēlāṉa,* பெ.எ. (adj.) 1. (குறிப்பிடப் படும் அளவுக்கு) அதிகமான; more than. *'நூற்றுக்கும் மேலானோர் கொல்லப்பட்டனர்'.* 2. சிறந்த, உயர்ந்த; excellent, superior, better. *'இவ்விளம்பரம் குறித்து தங்களின் மேலான கருத்துகள் கோரப்படுகின்றன'.*

*[மேல் + ஆன]*

**மேலிடம்** *mēliḍam,* பெ.(n.) செயல்பாடுகளை ஆய்வு செய்யும் உயர்மட்ட அமைப்பு அல்லது குழு; decision making body, high-level authority. *'வேட்பாளர்களைத் தேர்வு செய்வது கட்சி மேலிடம்'.*

து. மேல்சர.

*[மேல் + இடம்]*

**மேலிடு[1]-தல்** *mēliḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. அதிகமாதல்; to increase, grow, as love. 2. மேல் விழு-தல், 1 பார்க்க; see *mēl-viḻu-, 1.* *"புகழோடே முடிய வமையு மென்று மேலிட்டார்கள்"* *(ஈடு. 6, 4, 3).* 3. மேலெழுதல் (யாழ்.அக.); to rise above, as water. 4. உமட்டுதல்; to be vomitted. *'சாப்பிட்ட சோறு மேலிடுகிறது'.*

*[மேல் + இடு-, 'இடு'. து.வி.]*

**மேலிடு[2]-தல்** *mēliḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) தலைக்கீடு கொள்ளுதல்; to put forward, as a pretext. *"மூரிவெஞ் சிலைமேலிட்டு மொய்யமர் மூட்டிவிட்டான்"* *(கம்பரா. பரசு. 28).*

*[மேல் + இடு-,]*

**மேலிதழ்** *mēliḍaḻ,* பெ.(n.) மேல் வாயிதழ்; upper lip.

*[மேல் + இதழ். உதடு → (உதழ்) → இதழ் = உதடு, உதடு போன்ற பூவிதழ்]*

**மேலிமை[1]** *mēlimai,* பெ.(n.) மேன்மை (இ.வ.); excellence.

க. மேல்மெ; தெ. மேலிமி.

*[மேல் → மேலிமை]*

**மேலிமை[2]** *mēlimai,* பெ.(n.) கண்ணுக்கு மேலுள்ள இமை; upper eyelid.

*[மேல் + இமை]*

**மேலிமைத்தாறு** *mēlimai-t-tāṟu,* பெ.(n.) பிறவி நச்சு வகையில் ஒன்று (யாழ்.அக.); a kind of mineral poison.

*[மேலிமை + தாறு]*

**மேலீடு** *mēlīḍu,* பெ.(n.) 1. மேலிடுவது; that which is placed over. 2. குதிரைச் சேணம் முதலியன; accoutrements of a horse. *"பூணும் பொற்படையாகிய மேலீட்டையும்"* *(பு.வெ.10, 2, உரை).* 3. கண்காணிப்பு முதலியன செய்யும் மேற்பதவி (வின்.); superintendence, superioity in office. 4. மிகுதியாக விருக்கை (வின்.); prevalence, predominance. 5. மிகை; being overwhelmed. *'உணர்ச்சி மேலீட்டால் அழலாமா?'.* 6. உணவுடன் சேரும் கறி முதலியன (வியஞ்சனம்); relish or sauce used with food, as curry with rice. *"வாளையினது...... தடியை....... சோற்றிற்கு மேலீடாகக் கொண்டு"* *(புறநா. 61, உரை).* 7. மகளிர் காதணி வகை (வின்.); a jewel worn in the ear by women. 8. தலைக்கீடு; pretext, pretence. 9. அடுத்த வாய்ப்பு; next occasion. *'மேலீட்டுக்குப் பார்த்துக் கொள்வோம்'.* 10. ஒரு இணை (ஜதை)யில் மேம்பட்டிருப்பது; the superior of a pair. 11. வெளிப்பகட்டு; outward appearance. 12. கோயில் மேற்சுவர்; capital, projecting structure on the top of walls, especially round temples and forts. 13. வரிசை அல்லது அடுக்கில் மேலாக இருப்பது; that which is uppermost in a pile or first in a series. *'இது மேலீட்டு இட்டலி'* 14. அடைமானக் காரனிடம் மீண்டும் கடன் வாங்கி அடைமானச் சொத்தையே பொறுப்புக் கட்டுகை (Legal.); further charge or mortgage.

*[மேல் + ஈடு. இடு → ஈடு]*

**மேலுக்கு** *mēlukku,* வி.அ. (adv.) 1. புறத்தே மட்டும், கமுக்கமாயல்லாமல்; formally, to keep up appearances. *'மேலுக்குச் சினந்துக் கொள்ளுகின்றான்'.* 2. மேற்புறமாக; on the outer side.

*[மேல் + கு. 'கு' நான்காம் வே. உருபு]*

**மேலுக்கெடு-த்தல்** *mēlu-k-keḍu-,* 4 செ.கு.வி. (v.i.) வாயிலெடுத்தல் (இ.வ.); to vomit.

*[மேலுக்கு + எடு-,]*

**மேலுசாவல்** *mēlušāval,* பெ.(n.) மேற்கொண்டும் செய்யும் புலனாய்வு (மேல் விசாரணை); further enquiry or trial. *'அவரது வழக்கு மேலுசாவலுக்காக உயர்நீதி மன்றத்திற்கு வந்துள்ளது' (பழ.).*

*[மேல் + உசாவல். உசாவு → உசாவல். 'அல்', தொ.பெ.ஈறு.]*

**மேலுத்தரியம்** *mēluttariyam,* பெ.(n.) மேலாடை பார்க்க; see *mēlāḍai.*

*[மேல் + உத்தரியம். உ = உயர்ந்த தரம் = நிலைமை, உ + தரம் – உத்தரம் = மேற்பட்டது, மேலானது. உத்தரம் → உத்தரியம் = மேலாடை.]*

**மேலுதடு** *mēludaḍu,* பெ.(n.) மேல் வாயிதழ்; the upper lip.

க. மேலுதடி.

*[மேல் + உதடு. ஊ → (ஊது) → உதடு = வாயின் முற்பகுதி]*

**மேலுபசாரம்** *mēl-upacāram,* பெ.(n.) வாய்ச்சொல் (வார்த்தை) இ.வ.); lip-deep courtesy.

*[மேல் + உபசாரம்]*

**Skt.** *upa-cāra* > த. உபசாரம்.

**மேலும்** *mēlum,* வி.எ. (adv.) பின்னும்; moreover, further, besides. *'மேலும் அவனுக்கு நேற்று கொடுத்தது தவறாகிப் போய்விட்டது'.*

*[மேல் → மேலும்]*

**மேலுரம்** *mēluram,* பெ.(n.) நிலப்பயிர் நட்டபின் இடும் உரம்; application of (fertilizer) top dressing. *'சாம்பலை மேலுரமாகப் போடுவது நல்லது'.*

*[மேல் + உரம்]*

**மேலுருளை** *mēluruḷai,* பெ.(n.) கவலைப் பாதையின் நடுவிலுள்ள உருளை; in between roller of a *'kamalai'* (waterlift).

*[மேல் + உருளை. கொண்டான் இழுத்துவரும் கயிற்றைத் தேயாமல் காக்கவும் இழுப்பதற்கு எளிதாகவும் இருக்கப் பயன்படுவது]*

**மேலுலகம்** *mēl-ulagam,* பெ.(n.) 1. வானுலகு; the celestial world. *"மேலுலக மில்லெனினு மீதலே நன்று" (குறள், 222).* 2. மேலேழுலகம் பார்க்க (யாழ்.அக.); see *mēlēḻulagam.*

து. மேல்லோகொ; பட. மேல்லோக.

*[மேல் + உலகம்]*

**மேலுலகு** *mēlulagu,* பெ.(n.) மேலுலகம் பார்க்க; see *mēlulagam.*

*[மேல் + உலகு]*

**மேலுறுதி** *mēluṟudi,* பெ.(n.) கூடுதல் சான்று (யாழ்.அக.); confirmatory evidence.

*[மேல் + உறுதி]*

**மேலூமலை** *mēlūmalai,* பெ.(n.) தர்மபுரி மாவட்டம் ஒசூர் வட்டத்தில் அமைந்த ஊர்; a village in Dharmapuri dt, *Osūr* taluk.

*[மேல் + மலை – மேல்மலை → மேலூமலை = மலைமேல் அமைந்த ஊர்]*

**மேலூர்** *mēlūr,* பெ.(n.) மதுரை மாவட்டத்தில் அமைந்த மேலூர் என்ற நகரம்; a town in Madurai dt.

*[மேல் + ஊர். மேல் = மேற்கு. ■ ஆம் நூற்றாண்டில் தோன்றியவூர். அக்காலத்தில் சிறப்புற்றிருந்த ஒரு ஊருக்கு மேற்கே அமைந்ததால் இப்பெயர் பெற்றது. பெரும்பாலும் மேற்குப் பக்கத்தில் அமைந்த ஊர் மேலூர் எனப்படும். இப்பெயர் தாங்கிய பல ஊர் தமிழ்நாட்டிலுள்ளன. இதைப்போல் கிழக்குத் திசையில் அமைந்த ஊர் கீழூர் எனப்படும்.]*

**மேலெழ** *mēleḻa,* வி.எ.(adv.) மேலுக்கு; superficially, on the surface. *"மேலெழச் சிறிது கலங்கிற்றாகிலும்"* (ஈடு, 1, 4, 3, வ்யா. பக். 183).

*[மேல் + எழ]*

**மேலெழு–தல்** *mēleḻu-,* 2 செ.கு.வி. (v.i.) 1. மேற்கிளம்புதல்; to rise up. 2. மிதத்தல்; to float. 3. எதிர் நோக்கி வருதல்; to advance against a person. *"அடர்ந்து வந்தனன் மேலெழ"* (திருவாலவா. 46, 15). 4. மேம்படுதல்; to be superior.

*[மேல் + எழு–.]*

**மேலெழுச்சி** *mēleḻucci,* பெ.(n.) 1. மேற் கிளம்புகை; rising. 2. செருக்கு (வின்.); pride, haughtiness. 3. ஊன்றி நோக்காத் தன்மை (வின்.); superficiality, careless ness. *'மேலெழுச்சியாயிராதே'.*

*[மேல் + எழுச்சி. எழு → எழுச்சி. 'சி' தொ.பெ.ஈறு]*

**மேலெழுத்திடு–தல்** *mēleḻuttiḍu-,* 20 செ.கு.வி. (v.i.) ஒப்புக் கொண்டதற்கு அறிகுறியாகக் கையெழுத்திடுதல்; to accept, certify. *"எதிரிகள் மதித்து மேலெழுத்திட்ட வீரப்பாட்டுக்கு"* (ஈடு. 6, 2, 2).

*[மேல் + எழுத்திடு–,]*

**மேலெழுத்து** *mēleḻuttu,* பெ.(n.) 1. மேல் முகவரி பார்க்க; see *mēl-mugavari.* 2. சான்று (சாட்சி)க் கையெழுத்து; signature of an attesting witness. *"வாசகங் கேட்ட பின்னர் மற்று மேலெழுத்திட்டார்கள்"* (பெரியபு. தடுத்தாட். 60). 3. அரசியற் கணக்கதிகாரி; accountant-general, auditing officer. *"மேலெழுத்துக் கணக் கிட்டினன்"* (T.A.S.i. 177). 4. மேலதிகாரி அனுப்பும் கடிதம்; instructions of a superior authority order.

*[மேல் + எழுத்து. எழு → எழுது → எழுத்து]*

**மேலெழுந்தவறிவு** *mēleḻunda-vaṟivu,* பெ.(n.) ஆழமில்லாத அறிவு; superficial knowledge or understanding.

*[மேலெழுந்த + அறிவு. அறி → அறிவு. 'வு' தொ.பெ.ஈறு]*

**மேலெழுந்தஞானம்** *mēleḻunda-ñāṉam,* பெ.(n.) மேலெழுந்தவறிவு பார்க்க; see *mēleḻunda-vaṟivu.*

*[மேலெழுந்த + ஞானம்]*

Skt. *jñāna* > த. ஞானம்.

**மேலெழுந்தபுத்தி** *mēleḻunda-puddi,* பெ.(n.) மேலெழுந்தவறிவு பார்க்க; see *mēleḻunda-vaṟivu.*

*[மேலெழுந்த + புத்தி]*

**மேலெழுந்தவாரி** *mēleḻunda-vāri,* பெ.(n.) 1. எளிமை; ease, facility, as in doing anything. *"மேலெழுந்தவாரியாக இவர்களோடே யுத்தம் பண்ணுகையாலே" (ஈடு. 6, 4, 3, ஜீ.).* 2. ஊற்றிக் கவனியாமை (வின்.); superficiality. *'ஆழ்ந்த இலக்கியப் புலமை வாய்ந்த பாவாணரின் நூல்களை மேலெழுந்தவாரியாகப் பயின்றால் புரிந்து கொள்ள இயலாது'.*

*[மேல் + எழுந்த + வாரி]*

**மேலெறி-தல்** *mēleṟi-,* 2 செ.குன்றாவி. (v.t.) மேலே வீசுதல்; to upthrow. 2. பொருள், விலங்கு, மனிதன் போன்றவற்றின் மேல் எறிதல்; to throw upon a thing, animal, person etc.

*[மேல் + எறி-,]*

**மேலே** *mēlē,* பெ.(n.) 1. ஒட்டியபடி மேல்; over an object. 2. உயரே மேல்நோக்கி; up. 3. தொடர்ந்து; further. *'பாய் முதுகில் குத்தாதிருக்க மேலே ஒரு தாவளத்தை (சமுக்காளம்) விரித்துக் கொள்ள வேண்டும்'. 'விடை தெரிந்தவர்கள் கையை மேலே தூக்குங்கள்'. 'மேலே என்ன நடந்தது? சொல்'.*

*[மேல் → மேலே]*

**மேலேழுலகம்** *mēlēḻulagam,* பெ.(n.) ஒன்றன் மேல் ஒன்றாக அமைந்த ஏழு உலகங்கள் (பூலோகம், புவலோகம், சுவலோகம், மகலோகம், சனலோகம், தவலோகம், சத்தியலோகம்) (பிங்.); the seven upper worlds, viz., *pūlōgam, puvalōgam, šuvalōgam, magalōgam, šaṉalōgam, tavalōgam, šattiyalōgam* each succeeding world being above that which precedes it.

*[மேல் + ஏழு + உலகம்]*

**மேலேற்றமாக** *mēlēṟṟamāga,* வி.எ. (adj.) அதிகப்படியாக, முன் செய்ததை விட கூடுதல் அளவுடையதாக; excess. *"அமுது செய்தருளி வருகிற பெண் போனகத்துக்கும், பருப்புப் போனகத்துக்கும், அப்பத்துக்கும், மேலேற்றமாக பால்போனகமும்" (மேல் அளவுள்ளதாகப் பால் பொங்கலும்) (தெ. கல். தொ. 12, பகு. 1, கல். 201).*

*[மேல் + ஏற்றமாக]*

**மேலேறு-தல்** *mēlēṟu-,* 5 செ.கு.வி. (v.i.) மேலே செல்லுதல்; to climb up. *'மரத்தின் மேலேறுவதற்குப் பயிற்சி தேவை' (உ.வ.).*

து. மேலரி, மேலாரி.

*[மேல் + ஏறு-,]*

**மேலை¹** *mēlai,* பெ.(n.) வருங்காலம் (வின்.); future. *'மேலை யாண்டுகளில் நாட்டின் மின்சாரத் தேவை மிகுதியாக இருக்கும்'.*

க. மேலெ.

*[மேல் → மேலை]*

**மேலை²** *mēlai,* வி.எ.(adj.) 1. மேலிடமான; upper. *"மேலைத் தவலோகம்" (திருவிளை. மலையத். 28).* 2. மேற்கிலுள்ள; western. *"மேலைச்சேரி" (நன். 402, உரை).* 3. முந்தின; former. *"மேலைத் தவத்தாற் றவஞ் செய்யாதார்" (நாலடி, 31).* 4. அடுத்த; next in order or in time. *"மேலையாண்டு"*

*[மேல் → மேலை]*

**மேலை³** *mēlai,* து.வி. (adv.) முன்பு; formerly. *"மேலை நீள் விசும்புறையும் வெண் மதியம்" (சீவக. 2238).*

*[மேல் → மேலை]*

**மேலை**[4] *mēlai,* பெ.(n.) 1. (யாழ்.அக.) அஞ்சனக்கல் கருநிமிளை; black bismuth. 2. மை; ink.

*[மேல் → மேலை. மை → மையம் → (மையல்) → மேல்]*

**மேலைக்கடல்** *mēlai-k-kaḍal,* பெ.(n.) மேல்கடல் பார்க்க (தக்கயாகப். 124, உரை); see *mēl-kaḍal.*

*[மேல் → மேலை + கடல்]*

**மேலைக்கரை** *mēlai-k-karai,* பெ.(n.) 1. மேற்குக்கரை; western bank or coast. *'கீழைக் கரையிலிருந்து மேலைக்கரைக்குச் செல்ல பாலம் அமைத்துள்ளனர்' (உ.வ.).* 2. மேற்குப் பக்கம்; western side or portion, as of a village. *'மேலைக் கரையில் தமிழ்க் கல்லூரி அமைந்துள்ளது' (உ.வ.).*

*[மேலை + கரை. பெரும்பாலும் தமிழகத்தில் ஆறுகள் மேற்கிலிருந்து கிழக்காக ஓடும். ஆகையால் ஆற்றிற்கு வடகரை தென்கரை அமைவதே, பெரும்பான்மை. குளம், ஏரி ஆகியவற்றின் கரைகளைக் கீழைக்கரை, மேலைக்கரை என அழைக்கும் வழக்கம் உண்டு.]*

**மேலைக்காவிரி** *mēlai-k-kāviri,* பெ.(n.) குடமூக்கின் (கும்பகோணத்தின்) மேற்பகுதி; the west portion of *Kuḍamūkku* (*Kumbakōṇam*)

*[மேல் + காவிரி. குடந்தையில் ஓடும் காவிரியின் மேற்குப்பகுதி]*

**மேலைக்காற்று** *mēlai-k-kāṟṟu,* பெ.(n.) மேற்கிலிருந்து வீசும் காற்று; westerly wind.

*[மேலை + காற்று. கால் → காற்று]*

**மேலைக்கு** *mēlaikku,* வி.எ.(adv.) இனிமேல்; hereafter, afterwards, in future.

க. மேலெக்கெ.

*[மேல் → மேலை → மேலைக்கு]*

**மேலைச்சமுத்திரம்** *mēlai-c-camuttiram,* பெ.(n.) மேல்கடல் (தக்கயாகப்.124, உரை) பார்க்க; see *mēl-kaḍal.*

*[மேலை + சமுத்திரம்]*

**மேலைச்சிதம்பரம்** *mēlai-c-cidambaram,* பெ.(n.) கோயம்புத்தூர் மாவட்டத்திலுள்ள திருப்பேரூர் என்னும் சிவக்கோயில்; *Tiru-p-pērūr,* a *śiva*-shrine in Coimbatore district.

*[மேலை + சிதம்பரம். சிற்றம்பலம் → சிதம்பரம்]*

**மேலைச்சீமை** *mēlai-c-cīmai,* பெ.(n.) மேலைநாடு பார்க்க; see *mēlai-nāḍu.*

*[மேலை + சீமை. சேய்மை → சீமை]*

**மேலைச்சேரி** *mēlai-c-cēri,* பெ.(n.) தென்னார்க்காடு மாவட்டம் செஞ்சி வட்டத்திலுள்ள ஓர் ஊர்; a village in South Arcot dt., *Señji* Taluk.

*[மேல் → மேலை + சேரி. சேர் → சேரி. வீடுகள் சேர்ந்திருக்கும் இடம்]*

**மேலைத்திசை** *mēlai-t-tišai,* பெ.(n.) மேற்கு பார்க்க; see *mēṟku.*

*[மேலை + திசை. திக்கு → திசை.]*

**மேலைநாடு** *mēlai-nāḍu,* பெ.(n.) மேற்குத் திசைக் கண் அமைந்த நாடு; western country. *'மேலை நாட்டு மோகம் இளைஞர்களிடையே மிகுதி' (உ.வ.).*

*[மேலை + நாடு]*

**மேலைநெற்றி** *mēlai-neṟṟi,* பெ.(n.) சிவனது நெற்றிக்கண்; the third eye of *Sivaṉ* on His forehead. *"இறைவர்தம் மேலை நெற்றி*

*விழிக்க" (தக்கயாகப். 334).*

*[மேலை + நெற்றி]*

**மேலையுலகு** *mēlai-y-ulagu,* பெ.(n.) வானுலகு (பிங்.); heaven, [redacted] the upper world.

*[மேலை + உலகு]*

**மேலைவீடு** *mēlai-vīḍu,* பெ.(n.) மேல்வீடு பார்க்க; see *mēl-vīḍu.* *"நாமேலை வீடெய்த" (திருவாச. 8,6).*

*[மேலை + வீடு]*

**மேலைவெளி** *mēlai-veḷi,* பெ.(n.) இயலுலகொடு சார்ந்த இடம் (பரவெளி); the great cosmic space. *"மேலை வெளியி லொளிரும்" (திருப்பு. 459).*

*[மேலை + வெளி]*

**மேலொடி** *mēloḍi,* பெ.(n.) மேல்வாரம் பார்க்க; see *mēl-vāram* (T.A.S.iv. 74).

*[மேல் + ஒடு (உடைமைப் பொருள். வே. உருபு) – மொலொடு → மேலொடி]*

**மேலொப்பம்** *mēl-oppam,* பெ.(n.) 1. சரிபார்ப்பு கையெழுத்து; attestation signature, counter signature. *'மதிப்பெண் பட்டியல் படிக்கு அரசு சான்றிதழ் பெற்ற அலுவலர் மேலொப்பம் இட வேண்டும்' (உ.வ.).* 2. எழுத்து அல்லது பேச்சால் ஒப்புக் கொள்ளுகை (வின்.); endorsing.

*[மேல் + ஒப்பம். ஒப்பு → ஒப்பம்]*

**மேலொப்பனை** *mēl-oppaṉai,* பெ.(n.) 1. மெய்ப்பித்ததை உறுதிப்படுத்தும் சான்று (வின்.); additional proof, confirmatory evidence. 2. வெளிக்கு இணக்கங் காட்டுகை; out-ward conformity.

*[மேல் + ஒப்பனை. ஒப்பு → ஒப்பனை.]*

**மேலொருக்கல்** *mēl-orukkal,* பெ.(n.) இசைக் குற்றவகை (திருவாலவா. 57, 26); (Mus.) a defect in singing.

*[மேல் + ஒருக்கல். உருக்கல் → ஒருக்கல் = ஓர் அமங்கலப் பெண்.]*

**மேலொற்றி** *mēl-oṟṟi,* பெ.(n.) மறு ஒற்றி; puisne mortgage, a second mortgage.

து. மேலு அடவு.

*[மேல் + ஒற்றி]*

**மேலோங்கி** *mēlōṅgi,* பெ.(n.) கரையாருள் ஒரு வகையார் (யாழ்.அக.); [redacted] sub-caste of *Karaiyār.*

*[மேல் + ஓங்கி]*

**மேலோங்கு-தல்** *mēl-ōṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) கூடுதலாதல்; to prevail over. *'பாவேந்தர் பாக்களில் தமிழுணர்வு மேலோங்கி நிற்பதை எளிதில் உணரலாம்' (உ.வ.).* 2. வலிமை பெறுதல்; to get the upper hand of. *'குடும்பத்தில் அறிவுள்ள மக்களின் [redacted] மேலோங்கி யிருப்பது இயல்பு தானே?' (உ.வ.).*

*[மேல் + ஓங்கு-.]*

**மேலோசனை** *mēl-ōšaṉai,* பெ.(n.) முன்கருத்து (தெய்வச். விறலிவிடு. 80); foresight.

*[மேல் + யோசனை]*

**Skt.** *yōjanā* > த. யோசனை.

**மேலோட்டம்** *mēlōṭṭam,* பெ.(n.) மேலெழுந்தவாரி காண்க; see *mēleḻunda-vāri.*

[மேல் + ஓட்டம். ஓடு → ஓட்டம்]

மேலோடு-தல் *mēl-ōḍu-,* 5 செ.கு.வி. (v.i.) எதிர்த்துத் தாக்குதல்; to attack, rush against. *"மெய் சொல்லா விராவணனை மேலோடி யீடழித்து" (தேவா. 158, 2).*

*[மேல் + ஓடு-,]*

மேலோர் *mēlōr,* பெ.(n.) 1. மேலிடத்தோர்; those who are seated high, as an horses. *"காழோர் கையற மேலோ ரின்று" (மணிமே. 4, 35).* 2. உயர்ந்தோர்; the great, those of superior rank or caste. *"மேலோர் மூவர்க்கும் புணர்த்த கரணம்" (தொல். பொ. 144).* 3. புலவர் (பிங்.); poets; men of learning. 4. முன்னோர்; ancestors, ancients. 5. வானோர் (சூடா.); celestials.

*[மேல் → மேலோர். 'அர்' பன்மை ஈறு.]*

மேலோலை *mēlōlai,* பெ.(n.) 1. அதிகார மளிக்குஞ் சீட்டு; letter of authority. 2. மேற் கடுதாசி; covering letter.

*[மேல்+ ஒலை]*

மேலோன் *mēlōṉ,* பெ.(n.) மேலானவன், உயர்ந்தவன்; man of superior stature in learning, culture etc.

*[மேல் → மேலோன் (மு.தா. 74)]*

மேவருமனுநெறி *mē-varu-maṉu-neṟi,* பெ.(n.) மேலானதாகத் தொடர்ந்து வருகின்ற மனு என்னும் மன்னன் வகுத்த அரசியல் வழி; political guidance narrated by king Manu. *"மேவரு மனுநெறி விளங்கிய கோவிராக கேசரி வர்மரான உடையார் ஸ்ரீ வீரராசேந்திர தேவர்க்கு" (மெய்கீர்த்தி)*

*[மேல் + வரும் + மனு + நெறி]*

மேவல் *mēval,* பெ.(n.) 1. (பிங்.) ஆசை; desire. 2. கலக்கை; joining, uniting.

*[மேவு → மேவல்]*

மேவலர் *mēvalar,* பெ.(n.) மேவார் பார்க்க; see *mēvār. 'துன்புறுக்கு மேவலரை நோவ தெவன்' (பழ. 238).*

*[மேவு + அல் + அர். 'அல்' எ.ம.இடைநிலை]*

மேவா-தல் (மேவருதல்) *mēvā-,* 18 செ.கு.வி. (v.i.) பொருத்தமாதல்; to be fitted for. *"மேவரக் கிளந்து" (குறிஞ்சிப். 138).*

*[மே + வா-,]*

மேவாப்பல் *mēvā-p-pal,* பெ.(n.) மேல்வாய்ப்பல் பார்க்க; see *mēlvāy-p-pal.*

*[மேல்வாய்ப்பல் → மேவாப்பல்]*

மேவார் *mēvār,* பெ.(n.) பகைவர்; foes, enemies. *"மேவார் மறத்தொடு மல்லர் மறங்கடந்த காளை" (பு.வெ. 9, 4).*

மறுவ. அமரார், அரிகள், இகலோர், இரிஞர், உதிர்த்தோர், ஒட்டலர், ஒட்டார், ஒல்லார், ஒன்னார், கருதலர், செறுநர், சேரலிர், தரியலர், தெவ்வர், நள்ளார். நிகரார், நேரலர், நேரார், போற்றார், மாற்றலர், முனைந்தோர், மேவலர், விட்டவர்.

ம. மேவலர்.

*[மேவு + ஆ + ர். ஆ எ.ம.இடைநிலை. 'ர்' பன்மையீறு]*

மேவி-த்தல் *mēvi-,* 11 செ.குன்றாவி. (v.t.) தங்கச் செய்தல்; to cause to stay. *"புதல்விதனை ........ திருக்கோயின் மேவித்தான்" (உபதேசகா. உருத்திராக். 171).*

ம. மேவல் (தங்குதல்).

*[மேவு → மேவி-,]*

**மேவினர்** *mēviṉar,* பெ.(n.) 1. நண்பர்கள் (பிங்.); friends, allies. 2. உறவினர் (திவா.); relations.

மறுவ. ஒட்டுநர், ஒல்லுநர், ஒன்றுநர், துன்னுநர், தொடர்ந்தார், நள்ளுநர்.

*[மேவு → மேவினர்]*

**மேவு[1]-தல்** *mēvu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. அடைதல்; to join, to reach. *"மேகநாதன் புகுந்திலங்கை மேயநாள்" (கம்பரா. திருவவ. 10).* 2. விரும்புதல்; to desire. *"அவருந்தா மேவன செய்தொழுகலான்" (குறள், 1073).* 3. நேசித்தல்; to love. *"மேவியன் றாநிரை காத்தவன்" (திவ். திருவாய். 3, 2, 9).* 4. ஒதுதல்; to learn, study. *"மேவரு முதுமொழி விழுத்தவ" (பரிபா. 8, 9).* 5. உண்ணுதல் (வின்.); to eat. 6. சம மாக்குதல்; to level, make even, as the ground. *'வயலை மேவினான்'.* 7. மேலிட்டுக் கொள்ளுதல்; to manifest, assume. *"மேவற்க மென்மை [redacted] வகரத்து" (குறள், 877).* 8.வேய்தல்; to thatch, cover over. *"தோலைமேவி" (ஈடு. 5, 1, 5).*

ம. மேவுக.

*[ஏ → மே → மேவு]*

**மேவு[2]-தல்** *mēvu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. அமர்தல்; to abide, dwell. *"திருத்துருத்தி மேயான்" (திருவாச. 31, 3).* 2. பொருந்துதல்; to be attached, to be united, to be fitted or joined. *"ஒருமை வினைமேவு முள்ளத் தினை" (பரிபா. 13, 49).*

*[மே → மேவு]*

**மேவு[3]-தல்** *mēvu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. படிதல், பரவுதல்; to spread. *"கண்ணுக் கெட்டிய வரை மணல் மேவிக் கிடந்தது".* 2. நிரப்புதல்; to spread. *'சரளைக் கற்களை மேவிய பிறகு தார் ஊற்றி சாலை அமைத்தனர்'.*

*[ஏ → மே → மேவு-.]*

**மேவு[4]** *mēvu,* பெ.(n.) விருப்பம், நசை; desire. *"நம்பு மேவு நசையாகும்மே" (தொல். சொல். 329).*

*[ஏ → மே → மேவு[1]-, → மேவு]*

**மேவு[5]** *mēvu,* பெ.(n.) மே[3] பார்க்க (இலக்.அக.); see *mē* [3].

*[மே → மேவு]*

**மேழகம்[1]** *mēḻagam,* பெ.(n.) காப்பு (பிங்.); coat of armour.

*[மேல் + அகம் – மேலகம் → மேளகம் → மேழகம்]*

**மேழகம்[2]** *mēḻagam,* பெ.(n.) செம்மறி யாட்டுக்கடா, ஆடு; ram. *"வெம்பரி மேழக மேற்றி" (சீவக. 521).*

மறுவ. உதள், கிடாய், கொச்சை, கொறி, செம்மறி, தகர், துருவை, பள்ளை, புருவை, மறி, மேடம், மோத்தை,மை, வற்காலி, வருடை, வெள்ளை.

*[முழு → முழுமை = பருமை. முழுவது → முழுது → முழுதோன் = கடவுள். முழா → மிழா = பருத்த ஆண்மான். மேழம் → மேடம் = செம்மறியாட்டுக் கடா. மேழம் → மேழகம் (வே.க.4,46,47)]*

**மேழம்[1]** *mēḻam,* பெ.(n.) மேழகம்[1] பார்க்க (அரு.நி.); see *mēḻagam*[1].

*[மேல் + அகம் – மேலகம் → மேழகம் → மேழம்]*

**மேழம்**[2] *mēḻam,* பெ.(n.) மேழகம்[2] பார்க்க (அரு.நி.); see *mēḻagam*[2].

*[முழு → முழுமை = பருமை. முழா → மிழா = பருத்த ஆண்மான். மிழா → மெழா → மேழம்]*

**மேழி** *mēḻi,* பெ.(n.) 1. கலப்பை; plough. *"வினைப்பக டேற்ற மேழி"* (புறநா. 388). 2. கலப்பையில் கைப்பிடி; plough-tail, handle of a plough. *"மேழி பிடிக்குங் கை" (திருக்கை வழக்கம், 22).*

ம. மேழி, மேஞ்ஞல்; க. மேடி, மேணி; தெ. மேடி; குவி. மேரி.

*[புள் → பிள் → பிள. பிளத்தல் = பிடுதல், துளைத்து அல்லது வெட்டி உடைத்தல், பிரித்தல். பிள் → விள் → விள → விளவு = நிலம் முதலியவற்றின் பிளப்பு. பிள் → விள். விள்ளுதல் = பிளத்தல். விள் → விழி → மிழி → மெழி → மேழி = நிலத்தைக் கீறுவதற்கு (உழுவதற்கு)ப் பயன்படும் கருவி]*




**மேழிச்செல்வம்** *mēḻi-c-celvam,* பெ.(n.) ஏரால் வருஞ் செல்வம்; wealth derived from husbandry. *"மேழிச்செல்வம் கோழை படாது" (கொன்றைவே.).*

*[மேழி + செல்வம்]*

**மேழித்தோரணம்** *mēḻi-t-tōraṇam,* பெ.(n.) தென்னங் குருத்தோலையில் ஏர்க்கலப்பை வடிவில் கீறி, பின்னலிட்டு வரிசையாகக் கட்டப்படும் தோரணம்; festoons made with tender palm-leaf, like plough-share and hung in a row. *"இத்திரு முற்றத்திலே பூமிபிராட்டியை எழுந்தருளுவித்து, மேழித் தோரணமும் சாத்தி" (இராசாதி ராசன், கி.பி. 1048) (தெ. கல். தொ. 8. கல். 291).*

*[மேழி + தோரணம்]*

**மேழியர்** *mēḻiyar,* பெ.(n.) 1. உழவர் (பிங்.); agriculturists. 2. மருதநிலமாக்கள் (பிங்.); people who belong to the agricultural tract. 3. வேளாளர் (பூவைசியர்) (பிங்.); *vēḷāḷas*, as cultivators.

*[மேழி → மேழியர்]*

**மேழிவாரம்** *mēḻi-vāram,* பெ.(n.) வேளாண் (விவசாயச்) செலவு; cultivation expenses. *"மேழிவாரங் கூடக் காணாது" (சரவண. பணவிடு. 133).*

*[மேழி + வாரம்]*

**மேழை**[1] *mēḻai,* பெ.(n.) 1. கஞ்சி (அக.நி.); gruel. 2. காடி (அக.நி.); vinegar.

*[முள் → (மொள்) → மொழு → மொழுமொழு. மொழுமொழுத்தல் = சதை தளர்தல். மொழு → மொழுகு → மெழுகு = நெகிழ்ந்த நெய்ப்பொருள் (மு.தா.281) மெழு(கு) → மேழு → மேழை]*

**மேழை**[2] *mēḻai,* பெ.(n.) கொம்பில்லா விலங்கு (மோழை) (நாமதீப. 235); hornless beast.

*[மொழுக்கு → மொழுக்கன் = வேலைப் பாடில்லாத அணி. மழுங்கு → மழுங்கன் = வேலைப் பாடில்லாத அணி. (மொழு) → மோழை = மொட்டை, கொம்பில்லா மாடு, மரஅடி முண்டம். (மு.தா.101) மோழை → மேழை]*

**மேளக்கச்சேரி** *mēḷa-k-kaccēri,* பெ.(n.) அரங்கில் மேளம் வாசிக்கை; entertainment by *mēḷa-kārar.*

*[மேளம் + கச்சேரி]*

U. *Kachahri* > த. கச்சேரி.

**மேளக்கட்டு** *mēḷa-k-kaṭṭu,* பெ.(n.) ஒலி நன்கு கேட்கும்படி இசையமைவு பெறுந் தன்மை; good acoustical property.

*[மேளம் + கட்டு]*

**மேளக்காரன்** *mēḷa-k-kāraṉ,* பெ.(n.) 1. மேளகாரன் பார்க்க; see *mēḷa-kāraṉ.* 2. பகட்டாளன் (ஆடம்பரக்காரன்) (இ.வ.); dandy, pompous or showy man.

*[மேளம் + காரன்]*

**மேளகம்** *mēḷagam,* பெ.(n.) கஞ்சி (சங்.அக.); gruel.

*[மெழு(கு) → மேழை → மேழகம் → மேளகம்]*

**மேளகாரர்** *mēḷa-kārar,* பெ.(n.) நாயனம், ஒத்து, தவில், தாளம் இவற்றை வாசிக்கும் முழக்கியர்; band of musicians playing pipe, drone-pipe, drum and cymbals.

*[மேளம் + காரர்]*

**மேளகாரன்** *mēḷa-kāraṉ,* பெ.(n.) 1. மேளம் வாசிப்போன்; piper, drummer. 2. இசை செய்விக்கும் குலத்தான் (சாதியான்); person belonging to a caste of musician.

*[மேளம் + காரன்]*

**மேளங்கட்டு-தல்** *mēḷaṅ-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. இசைக் கருவிகளுக்குக் குரல் அளவு சேர்த்தல்; to tune instruments and bring them into harmony with one another. 2. எதிரொலி முதலியவற்றாற் கேடுறாது இசையமைதி பெறுதல்; to be fit acoustically, as a music hall.

*[மேளம் + கட்டு-,]*

**மேளஞ்செய்-தல்** *mēḷañ-šey-,* 1 செ.கு.வி. (v.i.) மேளங்கட்டு-தல் 1 பார்க்க (இ.வ.); see *mēḷaṅ-kaṭṭu-, 1.*

*[மேளம் + செய்-,]*

**மேளஞ்சேவி-த்தல்** *mēḷañ-šēvi-,* 4 செ.கு.வி. (v.i.) மேளமடி-த்தல் 2 (வின்.) பார்க்க; see *mēḷamaḍi-, 2.*

*[மேளம் + சேவி-,]*

**மேளதாளம்** *mēḷa-tāḷam,* பெ.(n.) 1. மேளம், 2 பார்க்க; see *mēḷam 2.* 2. பகட்டு (ஆடம்பரம்) (கொ.வ.); ostentation; pomb.

*[மேளம் + தாளம். மேளதாளம் எதுகை நோக்கி வந்த மரபிணை மொழி]*

**மேளம்** *mēḷam,* பெ.(n.) 1. பண்; musical scale. 2. நாயனம், ஒத்து, தவில், தாளம் என்பவற்றின் தொகுதி; (Mus.) collection of four musical instruments, viz. *nayaṉam, ottu, tavil, tāḷam.* 3. தவில்; a drum having two heads. 4. நல்ல உணவு; sumptuous food. 5. கவலையற்ற இன்பவாழ்வு (இ.வ.); prosperous, carefree condition. 6. கலவை மருந்து; medicinal mixture.

*[முள் → முழு → முழா = திரட்சி, மத்தளம். முழா → முழவு → முழவம். முள் → (மள்) → மழு = திரண்ட ஆயுதம். முள் → முரு → முரள் → முரண் → முரடு = பெரியது, திரண்டது. முரடு → முரசு = திரண்ட கட்டையாற் செய்யப்பட்ட மத்தளம், பேரிகை. முள் → மொள் → மோள் → மோளம் → மேளம் (மு.தா. 209, 210)]*

**மேளமடி–த்தல்** *mēḷamaḍi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. தவில் அடித்தல்; to beat the drum. 2. பக்க இசைக் கருவிகளோடு நாயனம் இசைத்தல்; to play on the pipe with accompaniments. 3. விளம்பரப் படுத்துதல்; to give publicity. 4. ஒத்துப் பேசுதல்; to play second fiddle, to endorse slavishly. 5. வருந்தி முயலுதல்; to strive hard. *'சோற்றுக்கு மேள மடிக்கிறான்'.*

*[மேளம் + அடி–,]*

**மேளவாத்தியம்** *mēḷa-vāttiyam,* பெ.(n.) மேளம், 2 பார்க்க; see *mēḷam-2.*

*[மேளம் + வாத்தியம். வாச்சியம் → வாத்தியம்]*

**மேளனம்** *mēḷaṉam,* பெ.(n.) 1. கலக்கை; mixing. 2. இசைக்கருவிகளின் இயைபு; (Mus.) attunement, concord, harmony. 3. கூட்டம்; crowd, assembly.

*[மேளம் → மேளனம்]*

த. மேளனம் > **Skt.** *mēlana.*

**மேளி–த்தல்** *mēḷi-,* 11 செ.குன்றாவி. (v.t.) கூட்டுதல் (இலக்.அக.); to assemble, collect.

க. மேளிசு.

*[மேளம் → மேளி–,]*

**மேற்கட்டி** *mēṟ-kaṭṭi,* பெ.(n.) 1. மேலிருந்து தொங்கும் திரை; top of bedstead, tester, canopy, awning. 2. மேல் தளத்தின் கீழ் பரப்பக்கட்டியிருக்கும் விரிப்பு; cloth spread below the roof of a room to prevent dust falling from the roof.

*[மேல் + கட்டி]*

**மேற்கட்டு[1]** *mēṟ-kaṭṭu,* பெ.(n.) 1. மேல்வீடு (யாழ்.அக.); loft, upper storey. 2. மேல்துண்டு (வின்.); upper garment. 3. துணைச்சான்று; additional argument or support. 4. அழகு (அலங்காரம்) (இ.வ.); show.

*[மேல் + கட்டு]*

**மேற்கட்டு[2]** *mēṟ-kaṭṭu,* பெ.(n.) மேல்கட்டு பார்க்க; see *mēl-kaṭṭu.*

து. மேல்கட்டு.

*[மேல் + கட்டு]*

**மேற்கட்டுக்கூறை** *mēṟ-kaṭṭu-k-kūṟai,* பெ.(n.) கோயில்களின் இறையகம். கற்புறை, மடைப்பள்ளிக்கட்டு ஆகிய இடங்களில் உள்ளகத்தின் மேல் தளம் போன்று வெண்மை, நீலம் வண்ணத் துணியைக் கொண்டு அமைக்கப்படும் கட்டு; whiten blue cloth spread on the lower side make a canopy of temple canopy, kitchen etc. *"ஸ்ரீ கற்ப கிரகத்துக் கட்டு மேற்கட்டிக்கு வெண்கூறை இணை" (தெ. கல். தொ. 14. கல் 16. அ)*

*[மேல் + கட்டு + கூறை. கூறு → கூறை]*

**மேற்கடுதாசி** *mēṟ-kaḍudāśi,* பெ.(n.) 1. பணவோலை உறுதிப்படுத்தி எழுதும் மடல்; letter of advice in a hundi transaction. 2. உள்ளடக்கப் பொருளை விவரிக்குங் கடிதம் (இக்.வ.); covering letter.

*[மேல் + கடுதாசி]*

**மேற்கண்ட** *mēṟ-kaṇḍa,* பெ.அ. (adj.) மேலே குறிப்பிடப்பட்ட; cited above, given below. *'மேற்கண்ட குறிப்புகளை முறையாகப் பின்பற்றவேண்டும்'.*

*[மேல் + கண்ட. காண் → கண்ட]*

**மேற்கத்தி** *mēṟ-katti,* பெ.எ. (adj.) மேற்குத் திசைக்குரிய; western. *'மேற்கத்தி நாடுகள்' (உ.வ.).*

*[மேல் → மேற்கத்தி]*

**மேற்கத்திய** *mēṟkattiya,* பெ.அ. (adj.) மேற்கில் உள்ள, அமெரிக்காவையும் ஐரோப்பாவையும் சேர்ந்த; western. *'மேற்கத்திய இசை, மேற்கத்திய நாகரிகம்'.*

*[மேற்கு → மேற்கத்திய]*

**மேற்கத்தியான்**[1] *mēṟkattiyāṉ,* பெ.(n.) மேற்கு பக்கத்தான் (வின்.); western.

*[மேற்கத்திய + ஆன்]*

**மேற்கத்தியான்**[2] *mēṟ-kattiyāṉ,* பெ.(n.) மேற்றிசையினின்று வாங்கி வந்த மாடு; cattle bought from western side (country).

*[மேற்கத்திய + ஆன்]*

**மேற்கதி** *mēṟ-kadi,* பெ.(n.) 1. மேனோக்கி (ஊர்த்துவ முகமாக)ச் செல்லும் தன்மை; upward tendency, as in the growth of vegetables; higher tendency, [redacted] of spiritual minds. 2. வீடு (மோட்சம்); supreme bliss. *"மேற்கதிபெற" (பிரபுலிங். துதி. 13)*

*[மேல் + கதி]*

**மேற்கதுவாய்** *mēṟ-kaduvāy,* பெ.(n.) மேற்கதுவாய்த்தொடை பார்க்க; see *mēṟ-kaduvāy-t-toḍai.* *"முதலயற் சீரொழித் தல்லன மேல்வரத் தொடுப்பின் மேற்கது வாயும்" (இலக். வி. 723).*

*[மேல் + கதுவாய்]*

**மேற்கதுவாய்த்தொடை** *mēṟ-kaduvāi-t-toḍai,* பெ.(n.) அளவடியுள் முதலயற் சீர்க்கணின்றி ஒழிந்த மூன்று சீர்க்கண்ணும் மோனை முதலாயினவரத் தொடுப்பது (இலக். வி. 723, உரை); (pros.) a versification in which *mōṉai,* etc., occur in the first, third and fourth feet of an *aḷavaḍi.*

*[மேற்கதுவாய் + தொடை. தொடு → தொடை]*

**மேற்கருமம்** *mēṟ-karumam,* பெ.(n.) குறை; want, need. *"அவர்களுக்குண்டாகிய மேற்கருமம் அந்தக் காரியப் பேர்களாலே தீர்க்கப்பட்டாள் போல" (சங்கற்பந். 2, உரை. பக். 24).*

*[மேல் + கருமம்]*

**மேற்கவடி** *mēṟ-kavaḍi,* பெ.(n.) கவடி விளையாட்டுள் ஒருவகை (parav.); an outdoor game.

*[மேல் + கவடி. கவை → கவடு → கவடி. இரண்டு அணியாகப் பிரிந்து விளையாடும் ஆட்டம்.]*

**மேற்காட்டிய** *mēṟ-kāṭṭiya,* பெ.எ. (adj.) மேற்கண்ட பார்க்க; [redacted] *mēṟ-kaṇḍa.*

*[மேல் + காட்டிய. காட்டு → காட்டிய.]*

**மேற்காது** *mēṟ-kādu,* பெ.(n.) காதின் மேற்பகுதி (வின்.); upper part of the ear.

*[மேல் + காது]*

**மேற்காவல்** *mēṟ-kāval,* பெ.(n.) 1. மேல் உசாவல் (விசாரணை) (வின்.); superintendence. 2. மேல் உசாவல் (விசாரணை) செய்பவன்; superintendent.

க. மேல்காவலி.

*[மேல் + காவல்]*

**மேற்காறுபாறு** *mēṟ-kāṟupāṟu,* பெ.(n.) மேற்காவல் (வின்.) பார்க்க; see *mēṟ-kāval.*

*[மேல் + காறுபாறு]*

U. *Kārbār* > த. காறுபாறு.

**மேற்கி** *mēṟki,* பெ.(n.) நஞ்சு (பாஷாணம்) (அரு.அக.); poison.

**மேற்கு** *mēṟku,* பெ.(n.) திசைகளுள் ஒன்று; west. *'ஞாயிறு மறையும் திசை மேற்கு'.*

ம. மேற்கு.

மறுவ. மேலைத்திசை.

*[மேல் → மேற்கு = மலையாலுயர்ந்த திசை, அல்லது கதிரவன் செலவின் பிற்பகுதிக் குரிய திசை.]*

மேடான திசை மேற்கு இது பள்ளமான திசைக்கு (கிழக்கிற்கு) எதிரானது. சோழ, பாண்டி நாட்டின் நிலமட்டம் நோக்கியே பள்ளமான திசை (கிழக்கு) என்றும் மேடான திசை (மேற்கு) என்றும் அழைக்கப்பட்டன.

**மேற்குடி** *mēṟ-kuḍi,* பெ.(n.) காணியாளர்; land owners of a village. *"கீழ்க்குடியாகிய வரிசையாளரைப் புறந்தரும் மேற்குடிகளாகிய காணியாளரை" (பதிற்றுப். 13, 24, உரை).*

*[மேல் + குடி]*

**மேற்குடுமி** *mēṟ-kuḍumi,* பெ.(n.) 1. உச்சிக் குடுமி (இ.வ.); tuft of hair on the crown of the head, top knot. 2. கதவின் மேற்பக்கத் தாடுங் குடுமி (வின்.); upper pin of a door.

*[மேல் + குடுமி]*

**மேற்குத்திசை** *mēṟku-t-tišai,* பெ.(n.) மேற்கு பார்க்க; see *mēṟku. 'தமிழ்நாட்டின் மேற்குத் திசையில் கேரளம் அமைந்துள்ளது' (உ.வ.)*

*[மேற்கு + திசை]*

**மேற்குத்தொடர்ச்சிமலை** *mēṟku-t-toḍarcci-malai,* பெ.(n.) தென்னிந்தியாவின் மேல் புறத்தில் தெற்கு வடக்காகத் தொடர்ந்து செல்லும் மலை; the western ghats.

*[மேற்கு + தொடர்ச்சி + மலை]*

**மேற்குலத்தோர்** *mēṟ-kulattōr,* பெ.(n.) உயர்ந்த குலத்தவர் (சாதியார்) (வின்.); people of high caste, those of a superior class.

*[மேல் + குலத்தோர்]*

**மேற்குலம்** *mēṟ-kulam,* பெ.(n.) உயர்குலம்; high caste. *'தங்கள் குலத்தை மேற்குலம் என்று சொல்லுபவர்கள் இன்னும் இருக்கின்றனர்'.*

*[மேல் + குலம்]*

**மேற்குலர்** *mēṟ-kular,* பெ.(n.) மேற் குலத்தோர் பார்க்க (சூடா.); see *mēṟkulattōr.*

*[மேல் + குலர்]*

**மேற்கூரை** *mēṟ-kūrai,* பெ.(n.) 1. வீட்டின் மேல் வேய்ந்த கூரை (வின்.); roof of a house. *'சேவல் வேய்ந்த கூரை'.* 2. அடிநிலம் நீங்கலான கட்டடம்; super structure. 3. மேற்கோப்பு பார்க்க; see *mēṟkōppu.* 4. மேல்தளம்; ceiling. *'சேவல் மேற்கூரையில் நின்று கூவியது'.*

*[மேல் + கூரை. கூர் → கூரை]*

மேற்கூறிய *mēṟ-kūṟiya,* பெ.எ. (adj.) மேற்சொன்ன பார்க்க; see *mēṟ-coṉṉa.* *'அவனால் மேற்கூறியவற்றை மறுக்க இயலவில்லை'.*

*[மேல் + கூறிய. கூறு → கூறிய]*

மேற்கை *mēṟkai,* பெ.(n.) தோள்பட்டைப் பகுதி, கையின் மேற்பகுதி; the upper portion of the arm.

க. மேல்தோளு.

*[மேல் + கை]*

மேற்கொண்டு *mēṟ-koṇḍu,* வி.எ. (adv.) 1. குறிப்பிட்ட நிகழ்ச்சிக்கு அல்லது நேரத்துக்குப் பிறகு தொடர்ந்து; further. *'அவரால் மேற்கொண்டு பேச முடியவில்லை'.* 2. இனிமேல்; hereafter. *'நடந்தது நடந்து விட்டது, இனி மேற்கொண்டு என்ன செய்வது என்று சிந்தித்துச் செயல்படுங்கள்'.*

*[மேல் + கொண்டு]*

மேற்கொதி *mēṟ-kodi,* பெ.(n.) 1. உடம்பின் சூடு (வின்.); feverishness. 2. முத்துக் கொதி, முதற் கொப்புளம் கிளம்பும் அரிசிக் கொதி; a stage in the boiling of rice. *'சோறு சமைக்கையில் மேற்கொதி முந்தி வருகிறது'.*

*[மேல் + கொதி]*

மேற்கொள்(ளு)-தல் *mēṟ-koḷ(ḷu)-,* 10 செ. குன்றாவி.(v.t.) 1. மேலேறுதல்; to mount, as a horse. *"பரிமேற் கொண்ட பாண்டியனார்" (திருவாச. 36, 3).* 2. மேம்படுதல் (வின்.); to gain prominence, to overcome, surpass, to rise above. *'அவனை நான் மேற்கொண்டு விட்டேன்'.* 3. உறுதி செய்தல்; to assert, [redacted] a proposition. *'பிரபஞ்சம் உற்பத்தி திதிநாச முடைத்தென மேற்கொண்டது'. (சி.போ.பா. 1, பக். 43).* 4. ஏற்றுக் கொள்ளுதல்; to embrace, [redacted] a doctrine, to accept. *'அந்தக் கொள்கையை அவன் மேற்கொண்டவன்'.* 5. முயலுதல்; to undertake, attempt. *"அவமதனை யஃதிலார் மேற்கொள்வது" (குறள், 262).* 6. பொறுப்பு கொள்ளுதல் (வகித்தல்); to assume the responsibility of. *'அரசியலை மேற் கொண்டான்'.* 7. வஞ்சினமுரைத்தல்; to make a vow, to asseverate. 8. நடத்துதல்; to conduct. *'அனுமதியின்றி கட்டப்பெற்ற வீடுகளைக் குறித்து ஆய்வு மேற்கொள்ளப் படும்'.* 9. கைக்கொள்ளுதல்; to take measure, to adopt methods. *'நோய் தடுப்பு வழிமுறைகள் விரைவில் மேற்கொள்ள வேண்டும்'.* 10. செயல்படுதல்; to function. *'தொழிலாளிகள் தங்கள் தேவைகளை நிறைவு செய்தற்பொருட்டு உண்ணா நோன்பு மேற்கொண்டனர்'.*

*[மேல் + கொள்-,]*

மேற்கோண்மலைவு¹ *mēṟkōṇ-malaivu,* பெ.(n.) ஏரணத்தில் முற்கூறியதற்கு மாறுபடக் கூறுகையாகிய குற்றம் (தொல். சொல். 1, சேனா); (Log.) subsequent contradiction of a proposition previously stated, a flaw in logic.

*[மேற்கோண் + மலைவு]*

மேற்கோண்மலைவு² *mēṟ-kōṇ-malaivu,* பெ.(n.) செய்யுட் குற்றங்களுளொன்று (யாப். வி. ப. 325); a defect in poetic composition.

*[மேற்கோண் + மலை]*

**மேற்கோப்பு** *mēṟ-kōppu,* பெ.(n.) வீட்டின் கூரைப்பகுதி; roof, roofing.

*[மேல் + கோப்பு. கோ → கோப்பு]*

**மேற்கோள்**[1] *mēṟ-kōḷ,* பெ.(n.) 1. ஏற்றுக் கொள்கை; acceptance. 2. போர்வை (வின்.); cover, mantle. 3. பொறுப்பில் இருக்கை; assumption of responsibility. *"இடஞ் சிறிதென்னும் மேற்கோள் செலுத்த" (புறநா. 8, உரை).* 4. ஊக்கம்; enterprising spirit, enthusiasm. 5. வஞ்சினம் (சிலப். பதி. 80, உரை); solemn asseveration. 6. அறுதியுரை (தருக்கசங். பக். 34); (Log.) proposition stated. 7. மேன்மை (சது.); excellence.

தெ. மேகோலு.

*[மேல் + கோள்]*

**மேற்கோள்**[2] *mēṟ-kōḷ,* பெ.(n.) ஞாயிற்றி லிருந்து உருவத்தில் இரண்டாம் நிலையிலும் தொலையில் ஆறாம் இடத்தில் உள்ளதும் குளிர்ச்சியைத் தருவதாக நம்பப்படுவதுமான காரி (சனி) கோள் (பிங்.); the planet saturn.

மறுவ. அந்தன், கதிர்மகன், கரியோன், காரி, கீழ்மகன், சவுரி, சாவகன், நீலன், பங்கு, மந்தன், முடவன், முதுமகன்.

*[மேல் + கோள்]*

**மேற்கோள்**[3] *mēṟ-kōḷ,* பெ.(n.) உறுதிப் பாடான நோக்கம்; set purpose. *"ஒழியாமலுல குய்யக் கொள்வனென்று மேற் கோளுடையாள்" (நீலகேசி. 188, உரை).*

*[மேல் + கோள்]*

**மேற்கோள்**[4] *mēṟ-kōḷ,* பெ.(n.) கூறிய வடிவத்திலேயே சொல்லும் புலப்பாட்டு நெறி; quotation, citation. *'மறைமலையடிகளார் திருக்குறளை அடிக்கடி மேற்கோள் காட்டிப் பேசுவார்'.*

*[மேற் + கொள்-, மேற்கொள் → மேற்கோள்]*

**மேற்சட்டை** *mēṟ-caṭṭai,* பெ.(n.) உடம்பின் மேல்பாகத்தில் போடும் சட்டை; an upper garment.

க. மேல்வொதகெ.

*[மேல் + சட்டை. மேற்சட்டை உள்ளாடைக்கு மேல் போடும் சட்டையெனவும் உடம்பின் மேல்பாகத்தில் (தோளிலிருந்து இடுப்பு வரை) போடும் சட்டை எனவும் இருவகையாகப் பொருள் கொள்ள இடமுண்டு]*

**மேற்சாட்சி** *mēṟ-cāṭci,* பெ.(n.) முன் சாட்சியை யுறுதிப்படுத்தும் சாட்சி; additional evidence, confirmatory evidence.

*[மேல் + சாட்சி]*

**Skt.** *šāksin* > த. சாட்சி.

**மேற்சாத்து** *mēṟ-cāttu,* பெ.(n.) 1. மேல் துண்டு; upper garment. *"வேழங் கொடுத்ததொரு மேற்சாத்தும்" (ஏகாம். உலா. 203).* 2. திருமேனி முதலியவற்றிற்குக் காப்பின் மேற்புறஞ்சாத்தும் அணி (இ.வ.); ornaments worn over the kavasam of an idol etc. 3. சாத்துப்படி (இ.வ.); sandal paste. 4. மேலொப்பம் பார்க்க; see *mēl-oppam.*

*[மேல் + சாத்து]*

**மேற்சாதி** *mēṟ-cādi,* பெ.(n.) மேற்குலம் பார்க்க; see *mēṟ-kulam.*

மறுவ. உயர்குலம்.

க. மேலுசாதி.

*[மேல் + சாதி]*

Skt. *jāti* > த. சாதி.

மேற்சீட்டு *mēr̠-cīṭṭu,* பெ.(n.) எழுதியுள்ளதை யுறுதிப்படுத்துஞ் சீட்டு (வின்.); note annexed to [redacted] writing to authenticate it.

*[மேல் + சீட்டு]*

மேற்சீமை *mēr̠-cīmai,* பெ.(n.) 1. இங்கிலாந்து முதலிய மேனாடுகள்; the western countries, as England etc., 2. எருமை (மைசூர்) நாடு; Mysore, [redacted] lying to the west of the Tamil county.

*[மேல் + சீமை]*

மேற்சுவாசம் *mēr̠-cuvāšam,* பெ.(n.) மேல்மூச்சு, 2 பார்க்க; see *mēl-mūccu* 2.

*[மேல் + சுவாசம்]*

Skt. *švāsa* > த. சுவாசம்.

மேற்சூரி *mēr̠-šūri,* பெ.(n.) மேற்படி, 1 (சர்வா. சிற். 45) பார்க்க; see *mēr̠paḍi,1.*

*[மேல் + சூரி]*

மேற்செம்பாலை *mēr̠-cempālai,* பெ.(n.) பாலையாழ்த்திறவகை (பிங்.) (சிலப். 3, 88, உரை); (Mus.) a secondary melody-type of the *pālai* class.

*[மேல் + செம்பாலை]*

மேற்செல்(லு)-தல் *mēr̠-cel(lu)-,* 13 செ.கு.வி. (v.i.) 1. தாழ்வான பகுதியிலிருந்து உயர்வான பகுதிக்குச் செல்லுதல்; to go or climb upward as of tree, mountain, upstairs, etc. *'நீலமலை, ஆனைமலை, சேரவரையன் [redacted] முதலிய மலைகளிலுள்ள இற்றைப் பழங்குடி மாந்தரெல்லாம் கொள்ளைக்கும் போருக்குந் தப்பிக் கீழிருந்து மேற் சென்றவரே'.* 2. அப்பாற்போதல்; to go on, go further. 3. மேற்படுதல்; to excel, surpass. 4. படையெடுத்தல் (திவா.); to invade. 5. விரைதல்; to hasten. *"நல்வினை மேற்சென்று செய்யப்படும்" (குறள், 335).*

க. மேலுவோகு; பட. மேலெஹோகு.

*[மேல் + செல்(லு)-,]*

மேற்செலவு *mēr̠-celavu,* பெ.(n.) 1. படையெடுப்பு; invasion. *"நின்னைப்பாடும் புலவர் நினது மேற் செலவைப்பாட" (புறநா. 33, உரை).* 2. வீட்டு நாட்சரி (தினசரி) செலவு (கொ.வ.); sundry expenses of [redacted] household.

*[மேல் + செலவு]*

மேற்சொன்ன *mēr̠-conna,* பெ.எ. (adj.) மேலே குறிப்பிட்ட, மேலே உரைத்த; above mentioned.

ம. மேற்சொல்லிய.

*[மேல் + சொன்ன]*

மேற்பக்கம் *mēr̠pakkam,* பெ.(n.) உள் பக்கத்திற்கு எதிரானது, புறப்பகுதி, வெளிப்பக்கம்; upside.

*[மேல் + பக்கம்]*

மேற்பகுதி *mēr̠pagudi,* பெ.(n.) மேலாக இருக்கும் பாகம்; upside, top portion of [redacted] tree etc. *'மரத்தின் மேற்பகுதி இலைகளைக் கழிக்க வேண்டும்' (உ.வ.).*

*[மேல் + பகுதி]*

மேற்பட்டை *mēr̠-paṭṭai,* பெ.(n.) மரத்தின் மேலுள்ள தோல் (வின்.); outer bark of a tree.

மறுவ. மேற்புறணி.

*[மேல் + பட்டை]*

**மேற்படி** *mēr̤-paḍi*, பெ.(n.) 1. கதவு நிலையின் மேற்பாகத்திலிருக்கும் மரம் (இ.வ.); lintel, upper part of the frame of a door or window. 2. முற்குறித்தது; the aforesaid, above said, above mentioned. *"மேற்படி பெருமானடி களுக்கு நந்தாவிளக் கெரிப்பதாக" (S.I.I.iii.97).*

ம. மேல்படி.

*[மேல் + படி]*

**மேற்படிப்பு** *mēr̤-paḍippu*, பெ.(n.) மேல் நிலைப் படிப்பு; further studies, higher education. *'மேற்படிப்பிற்காக வெளிநாடு செல்கிறேன்'.*

*[மேல் + படிப்பு. படி → படிப்பு]*

**மேற்படியான்** *mēr̤-paḍiyān*, பெ.(n.) மேலே சொல்லப் பெற்றவன்; one who is mentioned above. *"திருக்கழுங்குன்றக் கண்ணப்பன் வைத்த திருநுந்தா விளக் கொன்று மேற்படியாக வைத்த விளக்கு ஆறு" (தெ. கல். தொ. 5. கல். 468).*

*[மேல் + படியான்]*

**மேற்படு-தல்** *mēr̤-paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) 1. சிறந்திருத்தல்; to predominate, preponderate. 2. குணத்தில் மேம்படுதல்; to excel in quality, to be superior. 3. அதிகமாதல்; to increase, to be excessive. *"நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன" (திருவாச. 3, 4).*

*[மேல் + படு-.]*

**மேற்பணி** *mēr̤-paṇi*, பெ.(n.) பரவமகளிர் காதணி வகை (இ.வ.); an ear ornament worn by Parava women.

*[மேல் + பணி]*

**மேற்பயிர்** *mēr̤-payir*, பெ.(n.) மரம், செடி முதலியன; corn. large vegetables and trees. (R.).

*[மேல் + பயிர்]*

**மேற்பரப்பு** *mēr̤-parappu*, பெ.(n.) பார்க்கும் வகையில் உள்ள பரப்பு, தரை முதலியவற்றின் வெளிப்பரப்பு (இ.வ.); surface. *'நீரின் மேற்பரப்பைக் கிழித்துக்கொண்டு படகு சென்றது'.*

*[மேல் + பரப்பு]*

**மேற்பல்** *mēr̤-pal*, பெ.(n.) மேல்வாய்ப்பல் பார்க்க; see *mēlvāy-p-pal*.

*[மேல் + பல்]*

**மேற்பலகை** *mēr̤-palagai*, பெ.(n.) 1. மேற்படி, 1 பார்க்க (வின்.); see *mēr-paḍi* 1. 2. உகில் (நகம்) (அரு-அக.); nail.

*[மேல் + பலகை]*

**மேற்பாடம்** *mēr̤-pāḍam*, பெ.(n.) படி (நகலு)க்கு மூலமாயுள்ளது (வின்.); the original of a copy.

*[மேல் + பாடம்]*

**மேற்பாதம்** *mēr̤-pādam*, பெ.(n.) இரண்டு கால்களையும் சம்மணமாக மடித்துப் பாதங்களைத் தொடைகளின் மேலாக வைக்கும் ஓக இருக்கை (யோகாசன) வகை; *(Yōga.)* a posture in which the legs are folded crosswise and the feet placed on the thighs.

*[மேல் + பாதம். பதி → (பாதி) → பாதம்]*




**மேற்பாதி** *mēṟ-pādi,* பெ.(n.) மேல்வாரம் பார்க்க; [redacted] *mēl-vāram.* *"இப்பூமி மேற் பாதியும் பணியுங் கொண்டு" (T.A.S.iii. 168).*

*[மேல் + பாதி. பகுதி → பாதி]*

**மேற்பாதிநிலம்** *mēṟ-pādi-nilam,* பெ.(n.) மேடாயிருக்கும் பக்க நிலம்; adjacent field on a higher level.

*[மேல் + பாதி + நிலம். பகுதி → பாதி]*

**மேற்பார்–த்தல்** *mēṟ-pār-,* 4 செ.குன்றாவி. (v.t.) கண்காணித்தல்; to supervise. *"மேற் பார்க்க மைந்தரு மூவாவெருதும்" (தனிப்பா.).*

*[மேல் + பார்-]*

**மேற்பார்வை** *mēṟ-pārvai,* பெ.(n.) 1. மேல் உசாவணை (வின்.); superintendence. 2. பணியாளர்களையும் பணியையும் கண்காணிக்கும் பொறுப்பு; supervision. *'மேற்பார்வை செய்ததனால்தான் பணிகள் உடனுக்குடன் நடக்கின்றன'.* 3. மேலெழுந்த பார்வை (வின்.); superficial observation. 4. செருக்கிய நோக்கம் (வின்.); proud look. 5. எட்டப் பார்வை (வின்.); long sight. 6. சாகும் சமயத்தில் (தருணத்து) மேனோக்கி நிற்கும் பார்வை (இ.வ.); up-turned position of the eyes, [redacted] at the time of death.

*[மேல் + பார்வை. பார் → பார்வை. 'வை' தொ.பெ.ஈறு.]*

**மேற்பார்வையாளர்** *mēṟ-pārvaiyāḷar,* பெ.(n.) மேற்காணி பணியைக் கண் காணிக்கும் பணியினர்; supervisor in an examination hall, a polling booth, etc. *'தேர்தல் மேற்பார்வையாளராகப் பணிபுரிவது கடினமான ஒன்றாகும். தேர்வு நடைபெறும் அறையில் இரு மேற்பார்வையாளர்கள் மேற்பார்வை செய்வதால் தவறுகள் நடைபெற வாய்ப்பில்லை'.*

*[மேல் + பார்வை + ஆளர். ஆள் → ஆளர்]*

**மேற்பாரம்** *mēṟ-pāram,* பெ.(n.) 1. அமுங்கும் படி ஒன்றன் மேலே வைக்கும் எடை (வின்.); weight for compression. 2. அதிகமாகச் சேர்க்கும் எடை; additional burden or load.

*[மேல் + பாரம்]*

**Skt.** *bhāra* > த. பாரம்.

**மேற்பால்** *mēṟ-pāl,* பெ.(n.) மேற்குலம் பார்க்க; see *mēṟ-kulam.* *"மேற்பா லொரு வனு மவன்கட்படுமே" (புறநா. 183).*

*[மேல் + பால்]*

**மேற்பாலம்** *mēṟ-pālam,* பெ.(n.) இருப்புப் பாதை முதலியவற்றின் மேலே கட்டப்பட்ட பாலம் (இக்.வ.); over bridge.

*[மேல் + பாலம்]*

**மேற்பாவல்** *mēṟ-pāval,* பெ.(n.) மரக் கலத்தின் உறுப்புவகை (வின்.); the upper spar of a sailing ship, dist. fr. *kīḻ-p-pāval.*

*[மேல் + பாவல்]*

**மேற்புத்தி** *mēṟ-putti,* பெ.(n.) மேலானவர் களிடம் பெறும் அறிவுரை; counsel, advice from elders or superiors. *"நல்லோர் கண்டு மேற்புத்தி சொல்லல் வேண்டும்" (திருவேங். சத. 49).*

*[மேல் + புத்தி]*

**மேற்புரம்** *mēṟ-puram,* பெ.(n.) வானுலகு; heaven (svarga). *"புகழுறச் சேர்வார் மேற்புரம்" (சைவச. பொது. 568).*

*[மேல் + புரம்]*

**மேற்புலவர்** *mēṟ-pulavar,* பெ.(n.) தேவர் (தைலவ. தைல.); the celestials.

*[மேல் + புலவர்]*

**மேற்புறணி** *mēṟ-puraṇi,* பெ.(n.) மேற்பட்டை பார்க்க (வின்.); see *mēṟ-paṭṭai.*

*[மேல் + புரணி]*

**மேற்புறம்** *mēṟ-puṟam,* பெ.(n.) 1. வெளிப் புறம் (வின்.); outside, upper surface. 2. கப்பலிற் காற்றுத் தாக்கும் பக்கம் (வின்.); windward side of a vessel. 3. மேலண்டைப் பக்கம்; western side.

*[மேல் + புறம். மடிக்கப்படும் அல்லது சுருட்டப்படும் பொருள்கட்கு முன்பக்கம் உட்புறமும் பின்பக்கம் வெளிப்புறமும் போன்றிருத்தலாலும் உயிரற்ற கனப்பொருள்கட்கு மேற்புறம் முழுதும் வெளிப்புறமாயிருத்ததாலும் மேற்புறம் வெளிப் புறத்தைக் குறித்தது]*

**மேற்பூச்சு** *mēṟ-pūccu,* பெ.(n.) வெளிப்பக்கம் பூச்சு, மெருகேற்றப்பட்டது; outer plastering, coating, gilding, painting. *'மேற்பூச்சு முடிந்ததும் புதுமனை புகுவிழா நடத்தப் படவேண்டும்'.* 2. புறத்தே கவர்ச்சியாகத் தோன்றும் பொய்த் தோற்றம்; outward appearance. *'வாழ்க்கையின் மேற்பூச்சுக் களையே வாழ்க்கையின் சாரம் என்று தடுமாறக் கூடாது' (உ.வ.).* 3. குற்ற மறைக்கை (இ.வ.); covering of defects, white-washing. 4. மனவீடுபாடு இல்லாத நடத்தை முதலியன (இ.வ.); formality, convention.

*[மேல் + பூச்சு]*

**மேற்பேச்சு** *mēṟ-pēccu,* பெ.(n.) 1. மேல் கொண்டு விரித்துக் கூறுதல்; further talk or discussion. 2. வெளி முகமன் (உபசாரச்) சொல்; lip-deep courtesy.

*[மேல் + பேச்சு]*

**மேற்போக்கி** *mēṟ-pōkki,* பெ.(n.) கீழுள்ள ஆறு அல்லது வாய்க்காலுக்கு மேலே குறுக்காக நீரோடும்படி கட்டிய கால் (இ.வ.); aqueduct.

*[மேல் + போக்கி. போக்கு → போக்கி. 'இ' வி.முத.ஈறு.]*

**மேற்போட்டுக்கொள்(ளு)[1]-தல்** *mēṟ-pōṭṭu-k-koḷ(ḷu)-,* 10 செ.குன்றாவி. (v.t.) வலிய ஏற்றுக் கொள்ளுதல்; to undertake voluntarily, to take upon oneself.

*[மேல் + போட்டு + கொள்(ளு)-, 'கொள்' து.வி.]*

**மேற்போட்டுக்கொள்(ளு)[2]-தல்** *mēṟ-pōṭṭu-k-koḷ(ḷu)-,* 16 செ.கு.வி. (v.i.) பிறனுக்காகப் பிணையேற்றல்; to stand surety, stand guarantee.

*[மேல் + போட்டு + கொள்(ளு)-,]*

**மேற்போர்வை** *mēṟ-pōrvai,* பெ.(n.) மேலாகப் போர்த்திக் கொள்ளும் போர்வை; upper garment.

*[மேல் + போர்வை. போர் → போர்வை. '[redacted]' தொ.பெ.ஈறு.]*

**மேற்றட்டு¹** *mēṟṟaṭṭu,* பெ.(n.) 1. உயர்தரம்; high rank. 2. அடுக்குப் பேழை முதலியவற்றின் மேல் அறை; upper shelf, as of an almirah. 3. மேற்றளம்¹, 2 பார்க்க; see *mēṟṟaḷam¹,2.* 4. பரண் போன்ற மேலிடம்; upper berth. 5. அடுக்கு ஏன(பாத்திர)த்தில் மேலுள்ள தட்டு; upper compartment as of a tiffin carrier. 6. உடுத்தியிருக்குஞ் சேலையின் வெளிச்சுற்று (இ.வ.); outer fold of a woman's garment.

*[மேல் + தட்டு]*

**மேற்றட்டு²** *mēṟṟaṭṭu,* பெ.(n.) உயர்ந்த [redacted] (சாதி) மட்டக் குதிரை; superior pony.

*[மேல் + தட்டு]*

**மேற்றண்ணீர்** *mēṟṟaṇṇīr,* பெ.(n.) 1. மேலிடத்தினின்று வரும் நீர்; water from a higher level. 2. தலைமடையிலிருந்து பாயும் நீர்; water from the head-sluice of [redacted] channel. 3. நிலத்தின் மேலே தேங்கி யோடும் நீர்; surface-water. 4. நில மட்டத்தை யடுத்துக்காணும் ஊற்று நீர்; surface-spring. 5. மழை நீர்; rain-water, [redacted] from above.

*[மேல் + தண்ணீர். தண் + நீர் – தண்ணீர். வெப்பநாட்டில் விரும்பிக் கொள்ளும் தண்மை அடை நீருடன் சேர்ந்து பெருவழக்கூறிய பின் (தண்ணீர்) ஒரு சொல் நீர்மைப்பட்டு நீரைக் குறிப்பதாயிற்று.]*

**மேற்றலை** *mēṟṟalai,* பெ.(n.) 1. தலையின் மேற்பகுதி; crown, top of the head. 2. மேற்புறம், 2, 3 பார்க்க (வின்.); see *mēṟ-puṟam* 2,3. 3. மேற்புறம்; upper surface. *'மேசையின் மேற்றலை'.* 4. நதி முதலியன தொடங்குமிடம்; beginning, head; source, [redacted] of a river. *'இது மேற்றலை வெள்ளம்'.*

*[மேல் + தலை]*

**மேற்றளம்¹** *mēṟṟaḷam,* பெ.(n.) 1. மேல்மாடி; upper floor. *"மேற்றளத் தொருவன் பசிக்க வைத்து" (பிரபோத. 13, 17).* 2. கப்பலின் மேற்புறத்துள்ள தட்டு (வின்.); upper deck of a ship.

*[மேல் + தளம்]*

**மேற்றளம்²** *mēṟṟaḷam,* பெ.(n.) 1. புறவிதழ்; calyx of a flower. 2. மெய்க்காவற் படை (யாழ்.அக.); troop of body-guards.

*[மேல் + தளம்]*

**மேற்றிசை** *mēṟṟiśai,* பெ.(n.) மேற்கு; west. *"மேற்றிசைக்க ணுள்ள நிலத்தை" (சிறுபாண். 47, உரை).*

*[மேல் + திசை]*

**மேற்றிசைப்பாலன்** *mēṟṟiśai-p-pālaṉ,* பெ.(n.) மழைக்கடவுள் (சூடா.); *Varuṇa,* as the regent of the west.

*[மேற்றிசை + பாலன்]*

**Skt.** *pāla* > த. பாலன்.

**மேற்றிணை** *mēṟṟiṇai,* பெ.(n.) உயர்குலம்; high caste. *"தன் மேற்றிணைக் கேற்பத் தகுவன கூறும்" (பெருங். உஞ்சைக். 36, 121).*

*[மேல் + திணை]*

**மேற்றொழில்** *mēṟṟoḻil,* பெ.(n.) உயர்ந்த செயல்; great deed or achievement. *"மேற்றொழிலு மாங்கே மிகும்" (நாலடி, 193).*

*[மேல் + தொழில்]*

**மேற்றோல்** *mēṟṟōl,* பெ.(n.) மீந்தோல்; epidermis.

*[மேல் + தோல்]*

**மேற்றோள்** *mēṟṟōḷ,* பெ.(n.) தோளின் மேற்பாகம்; the upper portion of the arm.

க. மேலுதோளு.

*[மேல் + தோள்]*

**மேற்றோன்றி** *mēṟṟōṉṟi,* பெ.(n.) செம்மை நிறக் கொடிவகை; red species of Malabar glory - lily. *"மேற்றோன்றிப் பூக்காள்" (திவ். நாய்ச். 10, 2).*

*[மேல் + தோன்றி]*

**மேன்** *mēṉ,* பெ.(n.) மேல், 1 பார்க்க (நாமதீப. 773); see *mēl, 1.*

*[மேல் → மேன்]*

**மேன்கூரை** *mēṉ-kūrai,* பெ.(n.) மேற்கூரை பார்க்க (யாழ்.அக.); see *mēr-kūrai.*

*[மேல் + கூரை]*

**மேன்சாதி** *mēṉ-cādi,* பெ.(n.) மேற்குலம் பார்க்க (இ.வ.); see *mēṟ-kulam.*

*[மேல் + சாதி]*

**Skt.** *jāti* > த. சாதி.

**மேன்செலவு** *mēṉ-šelavu,* பெ.(n.) மேற் செலவு, 2 பார்க்க (இவ.); see *mēṟ-celavu* 2.

*[மேல் + செலவு]*

**மேன்பாடு** *mēṉ-pāḍu,* பெ.(n.) மேம்பாடு பார்க்க (யாழ்.அக.); [redacted] *mēm-pāḍu.*

*[மேல் + பாடு. படு → பாடு]*

**மேன்பார்க்கெல்லை** *mēṉpāṟ-k-kellai,* பெ.(n.) மேற்பால்எல்லை, மேற்கு பக்கத் தெல்லை; western boundary.

*[மேல் + பால் + எல்லை. இறையிலி செய்யப்பெற்ற, அல்லது விலைக்குப் பெறப்பட்ட நிலத்திற்கோ, கிராமத்திற்கோ அமைந்த நான்கு பக்க எல்லைகளையும் முறையாகக் கண்டு உள்ளவாறு சாசனத்தில் குறிப்பது வழக்காகும்'.]*

**மேன்பாலம்** *mēṉ-pālam,* பெ.(n.) 1. மேற் பாலம் பார்க்க; see *mēṟ-pālam.* 2. மேற் போக்கி பார்க்க; see *mēṟ-pōkki.*

*[மேல் + பாலம்]*

**மேன்மக்கள்** *mēṉ-makkaḷ,* பெ.(n.) உயர்ந்தோர்; noble man, high-minded man. *"கீழாய...... சொல்பவோ மேன்மக்கள்" (நாலடி, 70). 'மேன் மக்கள் சொற்கேள்' (பழ.).*

*[மேல் + மக்கள். மக + கள் – மக்கள்.]*

**மேன்மலை** *mēṉ-malai,* பெ.(n.) 1. ஞாயிறு மறையும் இடம், மேற்கு மலை; the hill where the sun sets. *"கனலி.... மேன்மலை குளிப்ப" (பெருங். மகத. 7, 99).* 2. காவிரி நதி தோன்றும் (உற்பத்தியாகும்) மலை; the mountain in Coorg where the *Kāvēri* has it source. *"கிளையொடு மேன்மலை முற்றி" (பரிபா. 12, 2).*

*[மேல் + மலை]*

**மேன்மாடம்** *mēṉ-māḍam,* பெ.(n.) வீட்டின் மேல் பகுதி; upper storey, balcony, terrace.

*[மேல் + மாடம்]*

**மேன்முறையாளர்** *mēṉ-muṟaiyāḷar,* பெ.(n.) மேன்மக்கள் பார்க்க; see *mēṉ-makkaḷ.* *"மேன்முறையாளர் தொழில்" (திரிகடு. 2).*

*[மேல் + முறையாளர்]*

**மேன்மூச்சு** *mēṉ-mūccu,* பெ.(n.) மேல்மூச்சு பார்க்க; see *mēl-mūccu.* *'மேன்மூச்சுக் கீழ்மூச்சு வாங்குகிறது'.*

*[மேல் + மூச்சு]*

**மேன்மூடி** *mēṉ-mūḍi,* பெ.(n.) மேலே மூடுதற்குதவுவது; cover, lid.

*[மேல் + மூடி. மூடு → மூடி]*

**மேன்மேல்** *mēṉ-mēl,* வி.எ. (adv.) மேன் மேலும் பார்க்க; see *mēṉ-mēlum.* *"தவாஅது மேன் மேல் வரும்" (குறள், 368).*

ம. மேன்மேல்.

*[மேல் + மேல்]*

**மேன்மேலும்** *mēṉ-mēlum,* வி.எ. (adv.) பின்னும் பெருக, தொடர்ந்து அதிகமாக; more and more, further and further. *"மேன்மேலுங் குடைந்தாடி யாடுவோமே" (திருவாச. 5, 30). 'உன்னுடைய பணியில் மேன் மேலும் உயர்ச்சி பெற வாழ்த்துகள்' (உ.வ.).*

க. மேலிந்தமேலெ.

*[மேல் + மேலும்]*

**மேன்மை** *mēṉmai,* பெ.(n.) 1. சிறப்பு, உயர்வு; greatness, eminence, excellence, dignity, superiority. *"ஒழுக்கத்தி னெய்துவர் மேன்மை" (குறள், 137). 'மேன்மையான செயல்கள் செய்து வாழ்வைப் பயனுடையதாகக் கொள்தல் வேண்டும்'. (உ.வ.).* 2. பெருமை; grandeur, sublimity. 3. கண்ணியம்; respect, honour, nobility.

ம. மேன்ம; தெ. மேலிமி.

*[மேல் → மேன்மை (மு.தா.74)]*

**மேன்றலை** *mēṉṟalai,* பெ.(n.) மரக்கலத்தின் முன்புறம் (யாழ்.அக.); the helm of a ship.

*[மேல் + அலை]*

**மேன** *mēṉa,* இடை. (part.) ஏழாம் வேற்றுமை யுருபு (தொல். சொல். 57, சேனா.); ending of the locative.

*[மேல் → மேன் → மேன]*

**மேனசம்** *mēṉaśam,* பெ.(n.) வெங்காரம் (சங்.அக.); borax.

**மேனடைநீர்** *mēṉaḍai-nīr,* பெ.(n.) அதிகப் படியாகவுள்ள நீர்; surplus water. *"மேனடைநீர் பாயவும்" (S.I.I.iii. 411).*

*[மேல் → (மேன்) → மேனடை + நீர்]*

**மேனரிக்கம்** *mēṉarikkam,* பெ.(n.) அத்தை அல்லது அம்மான் குடும்பத்தாரோடு ஒருவனுக்குள்ள உறவு முறைமை. (சென்னை.); the relationship that exists between a man as his father's sister's family or his mother's brother's family.

தெ. மேனரிக்கமு.

**மேனா¹** *mēṉā,* பெ.(n.) மேனாப்பல்லக்கு பார்க்க; see *mēṉā-p-pallakku.*

க. மேன, மேணி.

*[மேல் → மேன் → மேனா]*

**மேனா²** *mēṉā,* பெ.(n.) 1. மரப்பால் [illegible] மருந்துப் பொருள் (பைஷஜ.); a kind of saccharine exudation obtained from [illegible] 2. மர வகை; flowering ash tree (M.M. 47[illegible])

*[மன்னா → மானா → மேனா]*

**மேனாக்காய்ச்சொல்(லு)-தல்** *mēṉā-k-kāy-c-col(lu)-*, 8 செ.குன்றாவி. (v.t.) உளமாறப் பேசாமல் மேற்போக்காகப் பேசுதல்; to speak merely for form's sake, to express sentiments which are merely lip-deep. *(Nāñ.)*.

*[மேல் + நாக்கு + ஆய் + சொல்-.]*

**மேனாட்டார்** *mēṉāṭṭār*, பெ.(n.) 1. தேவர்; the celestials. 2. எருமை நாடு (மைசூர்) மாநிலத்தவர்; the people of Mysore. 3. ஐரோப்பியர் முதலிய மேலைத் தேசத்தவர்கள்; the Occidentals, Europeans. 4. திருநெல்வேலியின் மேற்குப் பகுதியிலும், திருவிதாங்கூரிலுமுள்ள சாணார் வகையார்; a sub-division of the *šāṉār* caste in the western part of *Tirunelvēli* and in Travancore.

*[மேல் + நாட்டார். நாடு → நாட்டார் = நாட்டைச் சேர்ந்தவர். மேற்குப் பகுதியில் உள்ள நாடு மேனாடு. மேனாட்டில் வாழ்வோர் மேனாட்டார்]*

**மேனாடு**[1] *mēṉāḍu*, பெ.(n.) 1. துறக்கம் (சுவர்க்கம்); heaven (svarga), as the upper world. 2. மேட்டு நிலம் (பீடபூமி); highland. 3. தமிழ்நாட்டுக்கு மேற்பாலுள்ள எருமையூர் (மைசூர்) (குருபரம்.); Mysore, as being to the west of the Tamil country. 4. மேற்சீமை, 1 பார்க்க; see *mēṟ-cīmai* 1.

*[மேல் + நாடு. உயரே இருப்பது என்னும் பொருளில் வருவது நேரடிப்பொருள். அவ்வாறில்லாமல் உயரமான பகுதி, அப்பகுதி அமைந்த திசை, அத்திசையில் அமைந்த நிலம் என்னும் பொருளில் வருவது பொருள் விரிவடிப்படையில் அமைந்தது]*

**மேனாடு**[2] *mēṉāḍu*, பெ.(n.) பொன்னாங்காணி (தைலவ. தைல); a plant found in damp places.

**மேனாணி-த்தல்** *mēṉāṇi-*, 11 செ.கு.வி. (v.i.) பெருமிதங் கொள்ளுதல்; to be proud. *"அவர்கள் நடுவே.............. மேனாணித் திருக்கு மிருப்பை" (ஈடு, 7, 6, 9).*

*[மேல் + நாணி. நாண் → நாணி. இயல்பான கீழ் நோக்கி வளைதல் போலில்லாமல் மேல்நோக்கி வளைதல் அதாவது நிமிர்தல் பெருமிதத்தைக் குறிப்பதாயிற்று. 'இ' வினையாக்க ஈறு]*

**மேனாணிப்பு** *mēṉāṇippu*, பெ.(n.) பெருமிதம்; pride, lordliness. *"அத்தால் வந்த மேனாணிப் பாலே செருக்கி யிருக்கிறவனை" (திவ். திருக்குறுந். 2, வ்யா).*

*[மேல் + நாணிப்பு, நாணி → நாணிப்பு. 'பு' தெ.பெ.ஈறு]*

**மேனாதம்** *mēṉādam*, பெ.(n.) 1. பூனை (யாழ்.அக.); cat. 2. மயில்; peacock. 3. வெள்ளாடு; goat.



மேனாதம்

**மேனாப்பல்லக்கு** *mēṉā-p-pallakku,* பெ.(n.) மூடு பல்லக்கு; ■ covered palanquin.

*[மேல் → மேனா + பல்லக்கு]*



மேனாப்பல்லக்கு

**மேனாம்பு** *mēṉāmbu,* பெ.(n.) அவமதிச் சொல்; harsh word, offensive language. *"கண்டாற் புலவரை மேனாம்பு பேசுங் கசடர்" (பெருந்தொ. 1336).*

*[மேல் + ஆம்பு]*

**மேனாமினுக்கி** *mēṉā-miṉukki,* பெ.(n.) மேனிமினுக்கி பார்க்க; see *mēṉi-miṉukki.*

*[மேனி = உடல், உடம்பு; மேனிமினுக்கி = உடம்பைப் பகட்டாக அழகுபடுத்திக் காட்டுபவ–ன்–ள். மேனி மினுக்கி → மேனாமினுக்கி]*

**மேனாரிக்கம்** *mēṉārikkam,* பெ.(n.) மேனரிக்கம் (சென்னை.) பார்க்க; see *mēṉarikkam.*

தெ. மேனரிக்கமு.

*[மேனரிக்கம் → மேனாரிக்கம்]*

**மேனாவண்டி** *mēṉā-vaṇḍi,* பெ.(n.) பெட்டி வண்டி (இ.வ.); bullock-coach.

*[மேனா + வண்டி]*



மேனாவண்டி

**மேனாள்** *mēṉāḷ,* பெ.(n.) 1. முன்னாள்; former day. *"மேனாணீ பூப்பலிவிட்ட கடவுளைக் கண்டாயோ" (கலித். 93).* 2. பின்னாள் (கலித். 72, உரை); subsequent day.

ம. மேநாள்; க. மேலின்தின (அடுத்த நாள், மறுநாள்).

*[மேல் + நாள்]*

**மேனி¹** *mēṉi,* பெ.(n.) 1. உடம்பு, உடல் (பிங்.); body. *"பசந்த மேனியள்" (சிலப். 8, 68) 'பொன்போல் சிவந்தமேனி' (உ.வ.).* 2. வடிவம் (பிங்.); form, shape. 3. நிறம்; colour. *"தளிரேர் மேனித்தாய சுணங்கின்" (நெடுநல். 148).* 4. அழகு; beauty. 5. நன்னிலைமை; good condition, healthy state.

ம. மேனி; தெ. மேனு, மேனி (ஒளி, உடம்பிற்குரியன); குட. மெளி; கொலா. மென்; நா., பர். மேன்; கட. மேனு; கோண். மேண்டுர்; குரு. மேத்; மா. மேத்.

*[மேல் → மேன் → மேனி = உடம்பின் மேற்புறம், உடம்பு, திருமேனி = இறையுடம்பு, தூயோருடம்பு (மு.தா.74).]*

**மேனி²** *mēṉi,* பெ.(n.) 1. ஒருவகைப் பூடு (குப்பை மேனி) (தைலவ. தைல.); Indian acalypha.

ம. குப்பமேனி.

*[குப்பைமேனி → மேனி]*




**மேனி³** *mēṉi,* பெ.(n.) 1. நிலத்தின் சராசரி விளைவு; average crop or yield of a harvest. *'இந்த முறை நெல்மேனிக் குறைவு'.* 2. விழுக்காட்டுமானம் (வீதம்); percent. *'ஆளுக்குப் பத்து உருவா மேனி கூலி பேசினார்' (உ.வ.).*

*[மேல் → மேனி = உடம்பு, உடம்பு போலத் தனியாகத் தெரியும் உருப்படி]*

**மேனிக்கு** *mēṉikku,* இடை. (part.) படி, வண்ணம்; as, keep on. *'இழவு வீட்டிற்குச் சொந்தக்காரர்கள் வந்த மேனிக்கு இருக்கிறார்கள்'.*

*[மேனி + கு. 'கு' நா.வே.உ.]*

**மேனிகரப்போர்** *mēṉi-karappōr,* பெ.(n.) தம் உருவத்தை மறைக்க வல்லாரான அசுரர் (பிங்.); Asuras, as becoming invisible at will.

*[மேனி + கரப்போர்]*

**மேனிகுலை-தல்** *mēṉi-kulai-,* 2 செ.கு.வி. (v.i.) (வின்.) 1. அழகு குறைதல்; to lose freshness or beauty, to fade, to wither as the body. 2. சீர் குலைதல்; to be disarranged, dishevelled, [redacted] the hair. 3. உருவங்கெடுதல்; to be deformed. 4. கலக்க முறுதல்; to be perturbed, agitated.

*[மேனி + குலை-,]*

**மேனிச்சம்பா** *mēṉi-c-cambā,* பெ.(n.) சம்பா நெல்வகை (தமிழன்); a kind of *sambā* paddy.

*[மேனி + சம்பா]*

**மேனிப்பொன்** *mēṉi-p-poṉ,* பெ.(n.) பழைய வரிவகை; an ancient tax. (I.m.p Tr. 89).

*[மேனி + பொன்]*

**மேனிமினுக்கி** *mēṉi-miṉukki,* பெ.(n.) எப்போதும் அழகுபடுத்திக் கொண்டு திரிபவ-ன்-ள்; person gaudily dressed, fop.

*[மேனி + மினுக்கி. மினுக்கு → மினுக்கி 'இ' பண்பு குறித்த ஈறு]*

**மேனிலம்** *mēṉilam,* பெ.(n.) மேனாடு, 1 பார்க்க; see *mēṉāḍu1.*

*[மேல் + நிலம்]*

**மேனிலர்** *mēṉilar,* பெ.(n.) இறைவர் (நாமதீப. 63); gods.

மறுவ. கடவுளர், தேவர்.

*[மேல் + நிலர். நிலம் → நிலர். மேலோன (உயரமான) நிலத்திற்குரியவர்]*

**மேனிலை** *mēṉilai,* பெ.(n.) 1. முன்னர் உள்ளது; that which precedes. *"மேனிலை யொத்தலும்" (தொல். எழுத். 340).* 2. மேல் மாடி (பிங்.); upper storey. *"மேனிலைச் சாளரக் கதவு" (காஞ்சிப்பு. நகர. 75).*

*[மேல் + நிலை]*

**மேனிலைக்கட்டு** *mēṉilai-k-kaṭṭu,* பெ.(n.) கோபுர முதலியவற்றின் மேல்மாடி (சுக்கிரநீதி, 229); storey, as of a tower.

*[மேனிலை + கட்டு]*

**மேனிலைப்பள்ளி** *mēṉilai-p-paḷḷi,* பெ.(n.) பத்தாம் வகுப்பிற்கு மேல் இரண்டு ஆண்டுகள் படிக்கவேண்டிய படிப்புத் திட்டம் கொண்ட உயர்நிலைப் பள்ளி; higher secondary school which has a two year course after the tenth standard.

*[மேல் + நிலை + பள்ளி]*

**மேனீர்** *mēṉīr,* பெ.(n.) 1. மேற்றண்ணீர் 1,2,3,4 பார்க்க; see *mēṟṟaṇṇīr 1,2,3,4.* 2. மழைநீர்; rain-water. *"இந்நிலத்துக்கு முன்னுடைய மேனீருங் கிணறும்" (S.I.I.iii,110).*

*[மேல் + நீர்]*

**மேனோக்கம்** *mēṉōkkam,* பெ.(n.) 1. மேனோக்கிக் கிளம்புகை; elevation, rise, steepness. 2. தாராள சிந்தை; liberality of mind. 3. மேலெழுந்த பார்வை; superficial view. 4. பேரவா; aspiration, ardent desire. 5. செருக்கு; haughtiness.

*[மேல் + நோக்கம்]*

**மேனோக்கு-தல்** *mēṉōkku-,* 5 செ.கு.வி. (v.i.) 1. மேல் எழுதல் (வின்.); to rise. 2. பெருகுதல்; to increase. 3. கக்குதல் (வாந்தியாதல்) (கொ.வ.); to vomit. 4. பேரவாக் கொள்ளுதல்; to aspire, ardently, desire. 5. செருக்குறுதல்; to be haughty.

*[மேல் + நோக்கு-,]*

**மேனோன்** *mēṉōṉ,* பெ.(n.) மேலோன், உயர்ந்தவன்; man of superior, in knowledge, culture etc.,

*[மேல் → மேலோன் → மேனோன்]*

# மை

**மை[1]** *mai,* பெ.(n.) தமிழ் நெடுங்கணக்கில் 'ம்' என்ற மெய்யெழுத்தும் 'ஐ' என்ற உயிர்க்கூட்டெழுத்தும் சேர்ந்து உருவான உயிர் மெய் (அசை) எழுத்து; the syllable formed by adding the diphthong 'ai' to the consonant 'm'.

*[ம் + ஐ]*

**மை[2]** *mai,* பெ.(n.) 1. பெரும்பாலும் பெண்கள் கண்ணில் தீட்டிக் கொள்ளப் பயன்படுத்தும் ஒட்டும் தன்மையுடைய கருப்பு நிற அழகுப் பொருள்; black pigment (applied on the edge of the eyelashes mostly by women). *'அவளுடைய மை தீட்டிய கண்கள், குழந்தைக்கு மையைக் குழைத்துப் பொட்டு வைத்தாள்' (உ.வ.).* 2. கருப்பு, நீலம், சிவப்பு முதலிய நிறங்களில் இருக்கும் எழுது பொருளாகப் பயன்படும் நீர்மம் (திரவம்); ink. *'ஆசிரியர் தூவல் சிவப்பு மையிட்டது' (உ.வ.).* 3. வண்டிச் சக்கரத்திற் கிடும் மசகெண்ணெய்; oil mixed with burnt straw; wheel (grease). 4. மந்திர வாதத்தில் பயன் படுத்தும் மை; black pigment used in witchcraft. 5. கருநிறம்; black, blackness. *"மறவர் மைபடு திண்டோள்" (அகநா. 89).* 6. இருள்; darkness. *"மைபடு மருங்குல்" (புறநா. 50).* 7. கறை, களங்கம்; spot, as of the moon; blemish. *"மைதீர்ந்தன்று மதியுமன்று" (கலித். 55).* 8. கருமேகம்; dark cloud. *"மைபடு சென்னி.... மலை" (கலித். 43).* 9. விண் (அரு.நி.); sky, [redacted] blue. 10. குற்றம்; fault, defect. *"மையிலறிவினர்" (புறநா. 22, 8).* 11. அறங்கடை (பாவம்); sin. *"மைதீர்த்தல்" (சினேந். 457).* 12. அழுக்கு;

dirt. "மையில் செந்துகிர்" (கலித். 85). 13. பிறவி; birth, [redacted] due to karma. "மையறு சிறப்பிற் றெய்வம்" (பட்டினப். 159). 14. எருமை; buffalo. "வைகுபுலர் விடியன் மைபுலம் பரப்ப" (அகநா. 41). 15. ஆடு (திவா.); sheep, goat. "மையூன் மொசித்த வொக்கலொடு" (புறநா. 96). 16. மேடவோரை (மேடராசி) (சூடா.); aries of the zodiac. 17. நீர் (யாழ்.அக.); water.

ம. மை, மழி, மயி; க., பட. மசி (அழுக்கு); தெ. மசி (கருப்பு. ஒட்டடை, கரி); து. மயி, மை, மசி (கரி); துட. மொய் (இருட்டாதல்); குட. மசி (கரி); குரு. மைச் (மை).

[முல் → மல் → மால் = கருமை, திருமால் (கரியோன்), முகில். முள் → மள் → மாள் → மாய் → மாயோன் (திருமால்), மாயோள் (காளி). மாய் → மாயம் = கருமை. மள் → (மய்) → [redacted] = கருமை, முகில், காராடு, கரியகுழம்பு (மு.தா.181)]

**மை[3]** *mai*, பெ.(n.) 1. மலடு (பிங்.); barrenness, sterility. 2. மலடி; barren woman. 3. மலட்டெருமை; barren buffalo.

ம. மை(மலடு), மச்சி(மலடி); கோத. மய் (மலட்டெருமை); துட. மொய்.

[முள் → மள் → மை = கருமை (மு.தா.181) = மகப்பேறின்மையாகிய கருமை, அத்தன்மையுடைய பெண், அத்தன்மையுடைய எருமை.]

**மை[4]** *mai*, பெ.(n.) 1. பசுமை; greenness. "மையிருங்கானம்" (அகநா. 43). 2. இளமை (அக.நி.); youth.

[முள் → மள் → மள்ளன் = இளைஞன், வீரன் (மு.தா.41) முள் → மள் → மை.]

**மை[5]** *mai*, இடை. (part.) 1. பண்புப் பெயர் விகுதியு ளொன்று; suffix expressing an abstract quality or condition, as *karumai*, *porumai*. 2. தொழிற் பெயர் விகுதியு ளொன்று; ending verbal nouns, as *šeykinramai*, *šeyyāmai*. 3. வினை யெச்ச விகுதியுளொன்று; ending verbal participles. "ஒற்றொற்றுணராமை யாள்க" (குறள், 589).

க. மெ (சொல்லாக்க ஈறு).

**மை[6]-த்தல்** *mai-*, 11 செ.கு.வி. (v.i.) 1. கறுத்தல்; to become black. "மைத்திருள் கூர்ந்த" (மணிமே. 12, 85). 2. ஒளி மழுங்குதல்; to be dim. "மைத்துன நீண்ட வாட்டடங் கண்ணார்" (சீவக. 2333).

துட. மொய் (இருட்டாதல்).

[மள் → (மய்) → மை-,]

**மை[7]** *mai*, பெ.(n.) அறியாமை (அஞ்ஞானம்); ignorance. "மைதபு ஞான மனத்திடை யொன்றும்" (பாகவத. 8, வாமனாவ. 32).

[முல் → மல் → மால் = கருமை, முகில். மால் → மாலம் = கருப்பு. மால் → மா = கருமை. முள் → மள் → மாள் → மாய் → மாயோன் = திருமால் (கரியோன்). முள் → மள் → [redacted] = கருமை, (மு.தா. 181) இருள் படர்ந்த அல்லது ஒளிகுன்றிய அறிவு (அறியாமை)]

**மைக்கண்** *mai-k-kaṇ*, பெ.(n.) நெல்வகை (நெல்லை.); a kind of paddy.

[மை + கண்]

**மைக்கண்மாடு** *mai-k-kaṇ-māḍu*, பெ.(n.) கண்ணைச் சுற்றி கறுப்பு முடியுள்ள மாடு; cow which has black hair around its eye.

[மை + கண் + மாடு. இவ்வகை மாடு தீமையின் அடையாளமாக (சகுனமாக)க் கருதப்படுகிறது]

**மைக்கரப்பான்** *mai-k-karappāṉ,* பெ.(n.) கருங்கரப்பன் வகை (பதார்த்த. 234); a dark-coloured eruption.

*[மை + கரப்பான்]*

**மைக்கரிப்பான்** *mai-k-karippāṉ,* பெ.(n.) கருப்புக்கரிசல்; black variety of eclipta alfa.

*[மை + கரிப்பான்]*

**மைக்காட்டுமண்** *mai-k-kāṭṭu-maṇ,* பெ.(n.) மைக்காடு பார்க்க; see *maikkāḍu.*

*[மைக்காடு + மண்]*

**மைக்காட்டுவெட்டு** *mai-k-kāṭṭu-veṭṭu,* பெ.(n.) பழைய காசு (நாணய)வகை; a coin used in former days.

*[மைக்காடு + வெட்டு]*



மைக்காட்டுவெட்டு

**மைக்காடு** *mai-k-kāḍu,* பெ.(n.) பொன் முதலியன சிதறிக் கலந்துள்ள அக்கசாலை மண் (வின்.); ashes and dust in a goldsmith's workshop containing particles of precious metals.

தெ. மசிட்டு.

**மைக்காநாள்** *maikkā-nāḷ,* பெ.(n.) மறுநாள் (இ.வ.); next day, tomorrow.

*[மறுநாள் → மறுக்காநாள் → மைக்காநாள்]*

**மைக்காப்பு** *mai-k-kāppu,* பெ.(n.) எழுத்து நன்கு தெரியுமாறு ஏட்டுச்சுவடிக்கு மை தடவுகை; smearing black paste over the leaves of an *ōla* book to render the script clear. *"கோவை முடிவிடத்தெழுதிப் பின்னர்.......... மைக்காப்புஞ் செய்தார்" (திருவாத. பு. திருவடி. 15).*

*[மை + காப்பு. கா → காப்பு]*

**மைக்காரி** *mai-k-kāri,* பெ.(n.) ஒருவகை கொன்றை மரம்; ■ kind of tree.

*[மை + காரி]*




**மைக்காலிருட்டு** *mai-k-kāl-iruṭṭu,* பெ.(n.) காரிருள்; pitch darkness. *"மைக்காலிருட்டனைய விருளில்லை" (தாயு. ஆனந்த. 10).*

*[மை + கால் + இருட்டு. இருள் → இருட்டு. மையிருட்டு' பார்க்க.]*

**மைக்குண்டுமிளகாய்** *mai-k-kuṇḍu-miḷagāy,* பெ.(n.) கருப்புக் குண்டு மிளகாய்; black round chilly.

*[மை + குண்டு + மிளகாய். மிளகு + காய் – மிளகாய்]*

**மைக்குருந்து** *mai-k-kurundu,* பெ.(n.) கருங்குருந்து பார்க்க; see *karuṅ-kurundu.*

*[மை + குருந்து]*

**மைக்குரோதிகம்** *mai-k-kurōdigam,* பெ.(n.) மிளகு; black pepper - piper nigrum.

**மைக்குறுவை** *mai-k-kuṟuvai,* பெ.(n.) நெல்வகை (G.Tn.D.I. 153); a kind of paddy.

*[மை + குறுவை]*

**மைக்குன்றி** *mai-k-kuṉṟi,* பெ.(n.) கருப்புக் குண்டுமணி; black jeweller's bead.

*[மை + குன்றி]*

**மைக்கூடு** *mai-k-kūḍu,* பெ.(n.) 1. எழுதும் மை வைக்குங் கூடு; ink-bottle, ink-pot. *'முன்னர் மைக்கூட்டில் மையையூற்றித் தொட்டு எழுதும் பழக்கம் பரவலாக இருந்தது' (உ.வ.).* 2. கண்மைச் சிமிழ்; small casket for keeping black pigment.

*[மை + கூடு. கூண்டு → கூடு]*




**மைக்கூண்டு** *mai-k-kūṇḍu,* பெ.(n.) 1. மைக்கூடு பார்க்க; see *mai-k-kūḍu.* 2. கண்மை வைக்குஞ் சிமிழ்; little metallic receptacle for collyrium for the eyes.

*[மை + கூண்டு. குள் → கொள் → கொள்ளுதல் = கூடுதல். குள் → கூள் → கூண்டு]*

**மைக்கூர்** *mai-k-kūr,* பெ.(n.) ஒருவகைப் புண்; a kind of boil (M.L.).

*[மை + கூர்]*

**மைக்கொடுவேலி** *mai-k-koḍuvēli,* பெ.(n.) கருங் கொடிவேலி; black peunbago.

*[மை + கொடுவேலி]*

**மைக்கொன்றை** *mai-k-koṉṟai,* பெ.(n.) மயிற் கொன்றை (பதார்த்த. 207); peacock's crest.

ம. மயில்குன்ன.

*[மள் → (மய்) → மை = கருமை, கரு(நீல) நிறத்தோகையுள்ள பறவை. இதே அடியிலிருந்து மை → மயில் (மு.தா.181) என்று இப்பறவைக்கான மற்றொரு பெயரும் உருவாக்கப் பெற்றுள்ளது. மை + கொன்றை]*

**மைக்கொன்னை** *mai-k-koṉṉai,* பெ.(n.) சரக்கொன்னை; a kind of tree.

*[மை + கொன்னை]*

**மைகம்** *maigam,* பெ.(n.) ஒருவகைச் செய்நஞ்சு (வக்கிராந்த பாஷாணம்) (யாழ்.அக.); a mineral poison.

**மைகரம்** *mai-garam,* பெ.(n.) மயக்கம் (யாழ்.அக.); bewilderment, confusion.

*[மை + கரம்]*

**மைகூட்டு—தல்** *mai-kūṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) மை உருவாக்கல்; to make ink, collyrium or paint.

*[மை + கூட்டு-,]*

**மைகோதி** *mai-kōdi,* பெ.(n.) சீப்பு; comb. *"சுவரின்மேல் மைகோதியும் ஈர்கோலியுமே கிடக்கின்றன" (எங்களுஞ. 127).*

*[மை + கோதி. கோது → கோதி. 'இ' வி. முத. ஈறு.]*




**மைச்சந்தன்** *mai-c-candan,* பெ.(n.) ஒரு வகைச் செய்நஞ்சு (பாஷாணவகை) (யாழ். அக.); a mineral poison.

**மைச்சம்பா** *mai-c-cambā,* பெ.(n.) கருங் குறுவை (பதார்த்த. 816); a dark variety of paddy maturing in three months.

*[மை + சம்பா]*

**மைச்சம்பி** *mai-c-cambi,* பெ.(n.) மைத்துனன் (இ.வ.) பார்க்க; see *maittuṉaṉ.*

*[மைத்துனன் → மச்சான் → மைச்சான் → மைச்சம்பி]*

**மைச்சமனந்தன்** *maicca-maṉandaṉ,* பெ.(n.) 1. காய்ச்சும் மருந்துவகை; a kind of arsenic. 2. ஒரு [redacted] மருந்து; a chemical.

**மைச்சாடிதம்** *mai-c-cāḍidam,* பெ.(n.) சீரகம்; cumin seeds.

**மைச்சாரி** *mai-c-cāri,* பெ.(n.) கருங்குறுவை நெல்; a kind of black paddy used in diet by Yogis.

*[மை + சாரி. சாலி → சாரி]*

**மைச்சாலி** *mai-c-cāli,* பெ.(n.) மைச்சம்பா பார்க்க (தைலவ. தைல.); see *mai-c-cambā.*

*[மை + சாலி]*

**மைச்சாள்** *mai-c-cāḷ,* பெ.(n.) மைத்துனி (யாழ்.அக.) பார்க்க; see *maittuṉi.*

*[மைத்துனன் → மைத்தான் (ஆ.பா.) – மைச்சாள் (பெ.பா.)]*

**மைச்சான்** *mai-c-cāṉ,* பெ.(n.) மைத்துனன் பார்க்க; see *maittuṉaṉ.*

*[மைத்துனன் → மைச்சான்]*

**மைச்சுனி** *mai-c-cuṉi,* பெ.(n.) மைத்துனி (யாழ்.அக.) பார்க்க; see *maittuṉi.*

*[மைத்துனி → மைச்சுனி]*

**மைச்சீரகம்** *mai-c-cīragam,* பெ.(n.) கருஞ் சீரகம்; black cumin-nigella sativa.

*[மை + சீரகம்]*

**மைச்சீரிடம்** *mai-c-cīriḍam,* பெ.(n.) பயிரைக் கெடுக்கும் ஒருவகைப் பாசி; a kind of moss affecting crops.

மறுவ. வேப்பம்பாசி.

*[மை + சீரிடம்]*

**Skt.** sirlsa > த. சீரிடம்.

**மைச்சூகி** *mai-c-cūki,* பெ.(n.) கருப்புக் கொன்னை; black cassia.

மைச்சூரை *mai-c-cūrai,* பெ.(n.) கருஞ் சூரை; hedge caper shrub.

*[மை + சூரை]*

மைச்சை *mai-c-cai,* பெ.(n.) 1. விந்து; semen. 2. அரத்தம்; blood.

*[மச்சை → மைச்சை]*

மைசாட்சி *mai-šāṭci,* பெ.(n.) 1. சீரகம்; cumin seeds. 2. பொன்னாங் கண்ணி; a medicinal prostate plant.

*[மை + சாட்சி]*

**Skt.** *sāksin* > த. சாட்சி.



மைசாட்சி

மைசேர்–த்தல் *mai-sēr-,* 4 செ.கு.வி. (v.i.) மைகூட்டு–தல் பார்க்க; see *mai-kūṭṭu-,*

*[மை + சேர்-,]*

மைஞ்சு *maiñju,* பெ.(n.) மேகம் (நன். 122, மயிலை.); cloud.

■ மஞ்சு.

*[மள் → (மய்) → மை = கருமை, முகில், காராடு, கரியகுழம்பு. மை → மஞ்சு = முகில் (மு.தா. 181). மஞ்சு → மைஞ்சு]*

மைஞை *maiñai,* பெ.(n.) மயில், வஞ்சி; a kind of tree.



மைஞை

மைத்தான் *maittāṉ,* பெ.(n.) சோளப் பயிருக்கு வரும் நோய் வகை (இ.வ.); smut, a disease affecting *cōlam.*

*[மை → மைத்தான்]*

மைத்துனத்தோழன் *maittuṉa-t-tōḻaṉ,* பெ.(n.) கிண்டல் செய்து விளையாடும் முறைமையுடைய தோழன்; intimate friend, chum, boon companion. *"மைந்தனை மகிழ்வ கூறி மைத்துனத் தோழனென்றான்" (சீவக. 1264).*

*[மைத்துனன் + தோழன்]*

மைத்துனமை *maittuṉamai,* பெ.(n.) மைத்துன முறைமை; relationship of a brother-in-law or of a cognate-cousin. *"மாதவன் மைத்துனமையினான் மகிழ்ச்சி கூர்ந்தே" (பாரத. அருச்சுனன்றீர். 56).*

*[மைத்துனன் → மைத்துனமை. 'மை' ப.பெ.ஈறு]*

மைத்துனன் *maittuṉaṉ,* பெ.(n.) 1. மனைவி அல்லது கணவனுடன் பிறந்தவன்; brother of one's wife or husband. 2. மாமன் அல்லது அத்தையின் மகன்; son of one's maternal uncle or paternal aunt. *"தன்மைத்துனைக் கொலை சூழ்ந்த" (உத்தரரா. திக்குவி. 107).* 3. உடன் பிறந்தாளின் கணவன்; sister's husband.

ம. மச்சனன், மச்சினன்; க. மய்துன, மய்த, மய்தன; தெ. மேன; கோத. மசிண்; துட. மசிண்ப்; குட. மச்சினே; து. மைதினெ, மைதுனெ; கொலா. மச் (மாந்தன்); நா. மாச் (மாந்தன்); குரு. மேத் (ஆண்); பட. மைத.

*[மைத்துனன் என்பதற்கு ஒருகா. maithuna என்னும் வடசொல் மூலமாய் இருக்கலாம் என்று செ. ப. அகரமுதலி காட்டுகிறது. ஆயின் அச்சொற்கு வடமொழியில் இணை என்னும் பொருள் உள்ளதேயன்றி உறவு நிலையைக் குறிக்கும் பொருள் இல்லை. திருந்தா திரவிட மொழிகள் உட்பட திரவிடக் குடும்ப மொழிகள் பலவற்றில் இச்சொல்வழக்குள்ளமை இது தென் சொல்லென்பதைத் தெளிவுபடுத்துகிறது. மேலும் இதற்கொத்த இனச்சொல் ஆரியக் குடும்ப மொழிகளில் இல்லை. முல் → முன் → முன்பு = வலிமை. முல் → மல் = வலிமை. முள் → மொள் → மொய் = வலிமை. மொய் → மொய்ம்பு = வலிமை (மு.தா.223). மொய் → மொய்ந்து → மய்ந்து → மைந்து = வலிமை. மைந்து → மைத்தன் = இளைஞன், திண்ணியன், மறவன், கணவன். மைந்து → (மைத்து) → மைத்துனன் = கணவன் முறையுள்ள மாமன் அல்லது அத்தையின் மகன், உடன் பிறந்தாரின் கணவன், மனைவி அல்லது கணவனுடன் பிறந்தவன்]*

**மைத்துனி** *maittuṉi,* பெ.(n.) 1. மனைவியின் உடன்பிறந்தாள்; wife's sister. 2. மாமன் அல்லது அத்தையின் மகள்; daughter of one's maternal uncle or paternal aunt. *"மைத்துனி நடக்கமாட்டே னிளைத்தன னென்ன" (திருவாலவா. 62, 7).* 3. உடன் பிறந்தவன் மனைவி; brother's wife.

ம. மச்சூரிச்சி; தெ. மேன; து. மைதிதி, மைதெதி; குட. மச்சினி, மச்சிணிசி; கொலா. மாச (மனைவி); நா. மாசல் (பெண்); கோண். [redacted] (பெண், மனைவி), மச்சு (மனைவி); குரு. மல் (மகள்).

*[மைத்துனன் (ஆ.பா.) – மைத்துனி (பெ.பா.). 'இ' பெ.பா.ஈறு.]*

**மைதா** *maitā,* பெ.(n.) கள்மயக்கம் (இ.வ.); intoxication.

தெ. மைத.

*[மய → மயல் = மயக்கம். மய → மையல் = காதல் மயக்கம். மய் → மயந்து → மைந்து = காதல் மயக்கம். மைந்து → மைது → மைதா = கள்மயக்கம்]*

**மைதீட்டு-தல்** *mai-tīṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) மையிடு-தல், 1 பார்க்க; see *mai-yiḍu-, 1.*

*[மை + தீட்டு-,]*

**மைந்தன்**[1] *maindaṉ,* பெ.(n.) மகன் (பிங்.); son. *"குலக்கோ மைந்தர் தமக்கும்" (கம்பரா. மந்தரை. 76).*

மறுவ. எச்சம், கான்முளை, சந்ததி, சிறுவன், செம்மல், சேய், தனயன், தோன்றல், பிறங்கடை, புத்திரன், புதல்வன், மதலை, மருமான், வழி.

*[மைந்து → மைந்தன்]*

**மைந்தன்**[2] *maindaṉ,* பெ.(n.) 1. இளைஞன் (பிங்.); young man. *"மைந்த...... நீ யிதற் கென்னை வெகுண்டது" (கம்பரா. நகர்நீங். 134).* 2. விலங்கு, ஊர்வனவற்றின் குட்டி; young of an animal or reptile. *"அரவழுத்த மைந்தன்" (பரிபா. 19, 73).* 3. மாணாக்கன்; disciple, pupil. *"அளவிலா மைந்தர்க் கூட்டி" (திருவாலவா. 35, 4).* 4. ஆண் மகன் (பிங்.); man. 5. திண்ணியன் (சூடா.); strong man, powerful man. 6. வீரன்; warrior, hero. *"தொடு கழன் மைந்தர் தொழில்" (பு.வெ. 3, 6).* 7. கணவன்; husband. *"மைந்த ரகலத்தகலா......... நன்னீர்ப் புணர்ச்சியும்" (பரிபா. 8, 43).*

ம. மைந்தன்.

*[மைந்து → மைந்தன். பதினைந் தாண்டுள்ளவன். "திறலோன் யாண்டே பதினைந்தாகும்" (பன்.பாட்.230)]*

மைந்து[1] *maindu,* பெ.(n.) 1. வலிமை; might, strength. *"மைந்து பொருளாக வந்த வேந்தனை" (தொல். பொ. 70).* 2. அழகு; beauty. *"மைந்த ரசோக மடலவிழ" (சிலப். 8, வெண்பா, 1).* 3. விருப்பம்; desire. *"துறை வேண்டு மைந்தின்" (பரிபா. 6, 30).* 4. யானையின் மதம்; must of an elephant. *"களிறே..... மைந்து பட்டன்றே (புறநா. 13)".*

*[முல் → முன் → முன்பு = வலிமை. முல் → மல் = வலிமை. முள் → மொள் → மொய் = வலிமை. மொய் → மொய்ம்பு = வலிமை (மு.தா. 223). மொய் → மொய்ந்து → மய்ந்து → மைந்து]*

மைந்து[2] *maindu,* பெ.(n.) 1. காமமயக்கம்; infatuation of love. *"மகளிரை மைந்துற் றமர்புற்ற மைந்தர்" (பரிபா. 20, 91).* 2. பித்து (திவா.); madness.

*[முயங்கு → மயங்கு → மசங்கு. மயங்கும் பொழுது = அந்திவேளை. முய → மய → மச → மசகு = திகைப்பு, மயக்கம். மய → மயல் = மயக்கம். மயல் → மையல் = காதன் மயக்கம் (மு.தா. 178). மய் → மயந்து → மைந்து = காதன் மயக்கம்]*

மைந்து[3] *maindu,* பெ.(n.) அறியாமை; ignorance, stupidity. *"மைந்துற்றாய்" (பரிபா. 20, 69).*

*[மள் → (மய்) → மை = கருமை. [redacted] → மஞ்சு = முகில். (மு.தா.181). [redacted] → மைந்து = இருள் படர்ந்த அறிவு, அறியாமை]*

மைந்து[4] *maindu,* பெ.(n.) பிள்ளை (திவ். பெரியாழ். 1, 1, 8, வியா. பக். 16); son.

*[முள் → மொள் → மொய் = வலிமை. மொய் → மொய்ந்து → மய்ந்து → மைந்து]*

மைந்துவிரட்டு *maindu-viraṭṭu,* பெ.(n.) முருட்டெருதுகளைக் கொட்டு முழக்குடன் வெளியில் விடுத்து அவற்றைத் தழுவிப் பிடிக்கச் செய்தல்; bull taming, in which the competitors capture fierce bulls let loose on the occasion.

மறுவ. ஏறுதழுவல், கொல்வேறு கோடல், சல்லிக்கட்டு.

*[மைந்து + விரட்டு = வலிமை கொண்டு அடக்குவது. இன்று மஞ்சுவிரட்டு என்று மருவி வழக்கம் பெற்றுள்ளது.]*


மைந்துவிரட்டு

மைந்நூறு *mai-n-nūṟu,* பெ.(n.) மைப்பொடி; black powder for the eye. *"மைந் நூறு வேற்கண் மடவார்" (சீவக, 453).*

*[மை + நூறு. நுள் → நுறு → நூறு = பொடி.]*

மைநகர்ப்பூமி *mainakar-p-pūmi,* பெ.(n.) பிறவி நஞ்சு [redacted] (வக்கராந்த பாடாணம்) (யாழ்.அக.); a mineral poison.

மைநாகம் *mai-nāgam,* பெ.(n.) இந்தியாவுக்கும் இலங்கைக்குமிடையிலுள்ளதாகச் சொல்லப்படும் ஒரு [redacted] (கம்பரா. கடறாவு. 40); mount *maināga,* said to be between the Indian peninsula and Ceylon.

*[மை + நாகம்]*

மைநாகன் *mai-nāgan,* பெ.(n.) மைநாகம் பார்க்க (வின்.); [redacted] *mai-nāgam.*

*[மை + நாகன். நாகம் → நாகன்]*

**மைப்பரணி** *mai-p-parani,* பெ.(n.) மை வைக்குஞ் சிமிழ்; casket for collyrium.

*[மை + பரணி]*

**மைப்பு**[1] *maippu,* பெ.(n.) கருப்பு; black, blackness. *"மைப்புறுத்தகண் ணரம்பை மார்" (காஞ்சிப்பு. அரிசாப.2).*

*[மசி → மயி → மை. மை → மைஞ்சு = கருமுகில். [redacted] → மைப்பு (வே.க.4,51)]*

**மைப்பு**[2] *maippu,* பெ.(n.) மரம் முதலியன உரைத்திருக்கை; rottenness, as of wood.

*[மை → மைப்பு]*

**மைப்புயல்** *mai-p-puyal,* பெ.(n.) இருண்ட மேகம் (அக.நி.); dark cloud.

*[மை + புயல். பெய் → பெயல் → புயல் = மழை பெய்யும் முகில்]*

**மைப்பூச்சு** *mai-p-pūccu,* பெ.(n.) மைத்தீட்டுதல்; applying collyrium.

*[மை + பூச்சு]*

**மைப்பேறு–தல்** *maippēṟu-,* [redacted] செ.கு.வி. (v.i.) மரம் முதலியன உளுத்துப்போதல்; to become rotten, [redacted] wood.

*[மை + பேறு–,]*

**மைப்போது** *mai-p-pōdu,* பெ.(n.) மைம்மலர் பார்க்க; see *mai-m-malar.* *"மைப்போ தணி தொங்கல் வாணன்" (தஞ்சைவா. 116).*

*[மை + போது]*

**மைப்போளம்** *mai-p-pōḷam,* பெ.(n.) கரியபோளம்; black bole.

*[மை + போளம்]*

**மைபற்றவை–த்தல்** *mai-paṟṟa-vai-,* 5 செ.கு.வி. (v.i.) 1. மை செய்வதற்கு வேண்டிய மருந்தின் புகை மேல் ஏனத்தின் (பாத்திரத்தின்) உட்பக்கம் பற்றும்படி செய்தல்; to set the copper dish in such [redacted] way as to catch the smoke that comes from burning wick in the preparation of collyrium.

*[மை + பற்ற + வை–,]*

**மைபூசு–தல்** *mai-pūšu-,* 5 செ.கு.வி. (v.i.) மையிடு–தல் 1 பார்க்க; see *maiyiḍu-, 1.*

து. மயிபாடுனி.

*[மை + பூசு–,]*

**மைபோட்டுப்பார்–த்தல்** *mai-pōṭṭu-p-pār-,* 4 செ.குன்றாவி. (v.t.) புதையல் முதலியன கண்டுபிடித்தற் பொருட்டு மையிட்டுப் பார்த்தல்; to discover hidden treasure, etc., by using magic pigment.

*[மை + போட்டு + பார்–, போடு → போட்டு.]*

**மைபோடு–தல்** *mai-pōḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. வண்டிக்கு மசகு இடுதல் (கொ.வ.); to grease, [redacted] a country cart. 2. மையூட்டு–தல் 2 பார்க்க; see *mai-yūṭṭu-, 2.* 3. மயக்கிக் கவர்தல்; to bewitch.

*[மை + போடு–,]*

**மைபோலரை–த்தல்** *maipōlarai-,* 4 செ. குன்றாவி. (v.t.) நெகிழ வைத்தல்; to pulverise, to grind till it becomes wax like.

*[மை + போல் + அரை–, அர் → அரை. அரைத்தல் = அராவித் தூளாக்குதல் அல்லது பசையாக்குதல்.]*

**மைம்மலர்** *mai-m-malar,* பெ.(n.) கருங் குவளை; blue nelumbo. *"மைம்மலர்க் கோதை" (சீவக. 208).*

*[மை + மலர்]*

**மைம்மா** *mai-m-mā,* பெ.(n.) பன்றி (பிங்.); pig, [redacted] black.

*[மை + மா. கருநிறவிலங்கு.]*


மைம்மா

**மைம்மீன்** *mai-m-mīṉ,* பெ.(n.) காரிக்கோள் (சனி); the planet saturn, as black in colour. *"மைம்மீன் புகையினும்" (புறநா. 117).*

*[மை + மீன்]*

**மைம்முகன்** *mai-m-mugaṉ,* பெ.(n.) முசு, கருப்பு முகத்தையுடைய ஒருவகை குரங்கு (பிங்.); langur, as black-faced.

*[மை + முகன். முகம் → முகன். 'ன்' உடைமை குறித்த ஈறு.]*


மைம்முகன்

**மைம்மை**[1] *maimmai,* பெ.(n.) 1. கருமை; black. 2. இருண்மை; darkness.

*[முள் → முய் → மய் → [redacted] = கருப்பு, இருள். மை → மைம்மை = கருமை, இருண்மை (வே.க.4, 59)]*

**மைம்மை**[2] *mai-m-mai,* பெ.(n.) 1. குழந்தை பெறவியலாத பெண், மலடி (பிங்.); barren woman. 2. மலட்டெருமை (திவா.); barren buffalo.

ம. மைம; க. மைமெ.

*[மை + மை. 'மை'. ப.பெ.ஈறு]*

**மைம்மைப்பு** *mai-m-maippu,* பெ.(n.) பார்வைக்குறை; defective sight, dimness of vision. *'மைம்மைப்பி னன்று குருடு' (பழமொ. 298).*

*[மைம்மை → மைம்மைப்பு = கண்ணிருளல், கண்மங்கல், பார்வைக் குறை (வே.க.4, 60)]*

**மைமல்** *mai-mal,* பெ.(n.) மாலைநேரம் (யாழ்.அக.); evening.

*[மைம்மை → [redacted] → மைமல் (வே.க.4,60)]*

**மைமுகன்** *mai-mugaṉ,* பெ.(n.) மைம்முகன் பார்க்க; see *maimmugaṉ.*

*[மை + முகன். முகம் → முகன். 'ன்' உடைமை குறித்த ஈறு.]*

**மைமை** *mai-mai,* பெ.(n.) பூசை; worship. *"புக்கவர் மைமை தொடங்கின ரன்றே" (மேருமந். 1285).*

க. மைமெ.

**மையக்கட்டை** *maiya-k-kaṭṭai,* பெ.(n.) வண்டியில் அச்சின் மேற்போடுங் கட்டை; piece of wood placed over the axle, supporting the frame-work of [redacted] country cart.

[மையம் + கட்டை]




**மையக்கவர்ச்சி** *maiya-k-kavarcci,* பெ.(n.) ஒரு பொருளின் சுற்றெல்லைக்குட்பட்ட அணுக்கள் அப்பொருளின் மையத்தை நோக்கி நெருங்கும் ஆற்றல் (சக்தி); centripetal force. (Mod.).

*[மையம் + கவர்ச்சி]*

**மையண்டம்** *maiyaṇḍam,* பெ.(n.) முட்டை (யாழ்.அக.); egg.

*[மையம் + அண்டம்]*

**Skt.** *aṇḍa* > த. அண்டம்.

**மையநாட்டம்** *maiya-nāṭṭam,* பெ.(n.) ஒரு பொருளை மற்றொரு பொருள் இழுக்கும் மைய ஈர்ப்பு; gravitation.

*[மையம் + நாட்டம். நாடு → நாட்டு → நாட்டம்]*

**மையநூக்கம்** *maiya-nūkkam,* பெ.(n.) ஒரு பொருளின் மையத்திலுள்ள அணுக்கள் அப்பொருளின் சுற்றெல்லையை நோக்கிப் போகும் ஆற்றல் (சக்தி); centrifugal force (Mod.).

*[மையம் + நூக்கம்]*

**மையம்**[1] *maiyam,* பெ.(n.) 1. நடு (சூடா.); centre, middle. 2. நடுத்தரமானது; that which is mediocre. 3. வளைவைத் தாங்கும் தூணின் மேலுறுப்பு (இ.வ.); impost; top portion of a pillar upon which an arch rests. (loc.).

ம. மய்யம்.

*[முள் → முடு → முடங்கு → மடங்கு. முடு → முடி → மடி. மடிதல் = மடங்குதல். மடங்கு → மடக்கு = அலகை மடக்கி வைக்கும் கத்தி (மு.தா.230) முள் → மள் → மய் → மய்யம் → மையம் = மடக்கப்பட்டது, மடங்கிய இடம், நடு.*

*வடமொழி madhya என்னும் சொல்லினின்று மையம் வந்ததாக செ.ப.அகரமுதலி குறிக்கிறது. madhya என்னும் சொல் மத்தியம் என தமிழ் வழக்கில் உள்ள நிலையில் மீண்டும் வேறொரு வகையில் இன்னொரு சொல் (மையம்) உருவாகும் தேவை மிகையானதே. மேலும் மத்ய மத்தியம் என மாறுமேயன்றி மய்யம் அல்லது மையம் என மாறுவதற்கு வாய்ப்பு குறைவு]*

**மையம்**[2] *maiyam,* பெ.(n.) ஐயமானது; that which is doubtful or vague.

*[மள் → மாள் → மாழ் → மாழ்கு. மாழ்குதல் = மயங்குதல். மாழ் → மாழை = மருட்சி, மயக்கம். முய → மய → மச → மசகு = திகைப்பு, மயக்கம். மய → மயல் = மயக்கம், காதல். மயல் → மையல் = காதன் மயக்கம் (மு.தா.178). மையல் → மையம் = மயக்கம் தருவது, ஐயமானது.]*

**மையம்**[3] *maiyam,* பெ.(n.) மை; a black paint.

*[மை → மையம்]*

**மையம்பாய்-தல்** *maiyam-pāy-,* 2 செ.கு.வி. (v.i.) இருபக்கமும் சாய்தலால் ஒவ்வாமல் நிற்றல் (யாழ்.அக.); to oscillate about the middle point, as the index of a balance.

*[மையம் + பாய்-,]*

**மையமண்டபம்** *maiya-maṇḍabam,* பெ.(n.) 1. தெப்பக்குளத்தின் நடுவில் அமைந்த மண்டபம் (இ.வ.); building or hall in the middle of a temple tank. 2. குடியரசுத் தலைவர் மாளிகையின் மையமண்டபம்; central hall of the President's Chamber.

*[மையம் + மண்டபம்]*


மையமண்டபம்

**மையல்** *maiyal,* பெ.(n.) 1. காமமயக்கம்; infatuation of love. *"மையல் செய் தென்னை மனங்கவர்ந்தானே யென்னும்" (திவ். திருவாய். 7, 2, 6).* 2. பித்து; madness. *"மையலொருவன் களித்தற்றால்" (குறள், 838).* 3. செல்வம் முதலியவற்றால் வரும் செருக்கு; overwhelming pride, due to rank, wealth etc. *"மையல் ....... ...... மன்னன்" (சீவக. 589).* 4. யானையின் மதம்; must of an elephant. *"வேழ மையலுறுத்த" (பெருங். உஞ்சைக். 37, 232).* 5. கருவூமத்தை (மலை.); datura.

*[மயல் → மையல் = மனத்தைக் கலக்கும் பெருங்காதல் (சு.வி.39)]*

**மையல்தருமகாமூலி** *maiyal-taru-makā-mūli,* பெ.(n.) சிவகரந்தை; a plant Ceylon toolsy-sphoeranthes zeylanica.

*[மையல் + தரு + மகா + மூலி. மா → மகா]*

**மையல்தருமூலி** *maiyal-taru-mūli,* பெ.(n.) காமவுணர்வைத் தூண்டும் மூலிகை; an agent stimulating the sexual passion.

*[மையல் + தருமூலி]*

**மையலஞ்சந்தை** *maiyalañ-candai,* பெ.(n.) சந்தை நடக்கும் இரண்டாம் நாள் (வின்.); the second day in the holding of a fair or market.

*[மையம் → மையலம் + சந்தை]*

**மையலவர்** *maiyalavar,* பெ.(n.) பித்தர்; persons of deranged minds. *"மையலவர் போல மனம் வகை சொன்னார்" (சீவக. 2013).*

*[மயல் → மையல் → மையலவர். (வே.க.4, 58).]*

**மையலார்** *maiyalār,* பெ.(n.) 1. மாய வினைஞர் (வித்தைக்காரர்); magicians. *"மண்மயக்கு மயக்குடை மையலார்" (இரகு. யாகப். 35).* 2. மையலவர் பார்க்க; see *maiyalavar.*

*[மயல் → மையல் → மையலார். (வே.க.4,58)]*

**மையலி** *maiyali,* பெ.(n.) மாய வினையாட்டி (வித்தைக்காரி) (யாழ்.அக.); witch.

*[மையல் → மையலி. 'இ'பெ.பா.ஈறு]*

**மையவாடி¹** *maiya-vāḍi,* பெ.(n.) முள் வேலியுள்ள இடம் (யாழ்.அக.); place hedged around with thorns.

*[மையம் + வாடி]*

**மையவாடி²** *maiya-vāḍi,* பெ.(n.) நன்காடு; burial-ground.

*[மையம் + வாடி]*

**மையன்மா** *maiyaṉmā,* பெ.(n.) யானை (இலக்.அக.); elephant.

*[மையல் + மா]*

**மையன்மை** *maiyaṉ-mai,* பெ.(n.) மையல் 1, 2 பார்க்க; see *maiyal* 1,2. *"மையன்மை செய்து" (திவ். பெரியாழ். 2, 3, 3).*

*[மையல் → மையன்மை]*

**மையனோக்கம்** *maiya-nōkkam,* பெ.(n.) துயரப்பார்வை; mournful look. *"மைய நோக்கம்பட வருமிரக்கம்" (தொல். பொ. 260, உரை).*

*[மயல் → மையல் + நோக்கம்]*

**மையா**[1] *mai-y-ā,* பெ.(n.) மலட்டு ஆ (பசு); barren cow. *"மையாதாங் காத்தோம்பி" (அறநெறி. 38).*

*[மை + ஆ. [redacted] = மலடு.]*

மை[3] பார்க்க.

**மையா**[2]**–த்தல்** *mai-y-ā,* 12 செ.கு.வி. (v.i.) 1. மயங்குதல்; to be perplexed. *"மலர் நாணின் மையாத்தி நெஞ்சே" (குறள், 1112).* 2. ஒளி மழுங்குதல்; to become dim. *"விண்மே லொளி யெல்லா மையாந் தொடுங்கி" (பு.வெ. 9, 13).* 3. பொலிவழிதல்; to look wan, to look deserted. *"மாந்த ரென்பவ ரொருவருமின்றி மையாந்த வந்நகர்" (காஞ்சிப்பு. நகரேற். 101).*

*[முல் → முள் → முள்கு. முள்குதல் = முயங்குதல். முயங்கு → மயங்கு → மயக்கு → மயக்கம். முயங்கு → மயங்கு. முய → மய. மயத்தல் = மயங்குதல். (வ.வ.2, 63). மய → மையா]*

**மையாடு–தல்** *mai-y-āḍu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. மையோலை பிடி–த்தல் பார்க்க; [redacted] *mai-y-ōlai-piḍi-, "ஐயாண் டெய்தி மையாடி யறிந்தார் கலைகள்" (சீவக. 2706).* 2. கருமையாதல்; to be blackened, as with poison. *(தேவா. 303, 1).*

*[மை + ஆடு–,]*

**மையாயிசம்** *maiyāyiśam,* பெ.(n.) கடுக்காய்; gallnut.

**மையாளி** *maiyāḷi,* பெ.(n.) கருந்தாளி; gaub.

மறுவ. காட்டத்தி.

*[மை + ஆளி]*

**மையான்** *mai-y-āṉ,* பெ.(n.) எருமை; buffalo, as black. *"இருணிற மையான்" (குறுந். 279).*

*[முள் → முய் → மய் → மை = கருப்பு, இருள் (வே.க.4, 59). [redacted] + ஆன் – மையான் = கருப்பு நிற மாடு (விலங்கு)]*

**மையி** *maiyi,* பெ.(n.) மிளகு, மிளகுக் கொடி; pepper creeper.

*[முள் → முய் → மய் → மை = கருப்பு. மை → மையி = கருமையானது]*

**மையிடு–தல்** *mai-y-iḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. கண்ணுக்கு மையெழுது (அஞ்சன மெழுது)தல்; to paint the eyes, with collyrium. *"வடிவேல் விழிக்கு மையிட்டாள்" (விறலிவிடு.).* 2. புதை பொருள் முதலிய வற்றைக் கண்டுபிடிக்க உள்ளங் கையிலேனும் கண்களிலேனும் மந்திர மை போடுதல்; to apply magic pigment to one's eyes or palm for obtaining a vision of stolen goods or hidden treasure.

*[மை + இடு–,]*

**மையிரவி** *maiyiravi,* பெ.(n.) 1. ஊமத்தைச் சாறு; juice of dhatura. 2. மருளூமத்தை; black datura.

**மையிருட்டு** *mai-yiruṭṭu,* பெ.(n.) காரிருள் (கொ.வ.); pitch darkness.

மறுவ. கும்மிருட்டு.

*[மை + இருட்டு. மை = கருப்பு. இரு → இருள் → இருட்டு]*

**மையிருள்** *mai-y-iruḷ,* பெ.(n.) மையிருட்டு பார்க்க; see *mai-y-iruṭṭu.* *"கருகு மையிருளின் கணம்" (பெரியபு. இளையான். 15).*

*[மை + இருள். இரு → இருள்]*

**மையிலை** *maiyilai,* பெ.(n.) ஒருவகைப் பூடு; [redacted] plant.

*[மை + இலை]*

**மையிழுது** *mai-y-iḻudu,* பெ.(n.) 1. மை விழுது; collyrium, eye-salve. *"மையிழுதிழுகி" (புறநா. 281).* 2. ஆட்டு நிண நெய் (புறநா. அரும்.); fat of sheep.

*[மை + இழுது]*

**மையுடை** *mai-y-uḍai,* பெ.(n.) கருவேல் (தைலவ. தைல); black babul.

*[மை + உடை]*

**மையுறிஞ்சி** *mai-y-uriñji,* பெ.(n.) மையொற்றி; blotting paper.

*[மை + உறிஞ்சி. உறிஞ்சு → உறிஞ்சி. 'இ' வினை முதலீறு]*

**மையூட்டு-தல்** *mai-y-ūṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. மையிடு-தல், 1 பார்க்க; see *mai-yiḍu-, 1.* 2. ஒலைக்கு மைதடவுதல்; to ink a written *ōla.*

*[மை + ஊட்டு-, உண் (த.வி.) → ஊட்டு (பி.வி.)]*

**மையூமத்தை** *maiyū-mattai,* பெ.(n.) கருவூமத்தை; blue or black variety of datura.

**மையெழுத்து** *mai-y-eḻuttu,* பெ.(n.) மையால் எழுதும் எழுத்து; writing, in ink. *"மையெழுத்தூசியின் மாண்டதோர் தோட்டிடை ............ கரந் தெழுத்திட்டாள்" (சீவக. 1767).*

*[மை + எழுத்து]*

**மையெழுது-தல்** *mai-y-eḻudu-,* 5 செ.கு.வி. (v.i.) மையிடு-தல் 1 பார்க்க; [redacted] *maiyiḍu-, 1* *"மையெழுதிப் பொட்டெழுதி" (கூளப்ப. 132).*

*[மை + எழுது-,]*

**மையொற்றி** *mai-y-orri,* பெ.(n.) எழுது மையை ஒற்றும் தாள்; blotting papper. (Mod.).

*[மை + ஒற்றி]*

**மையோலைபிடி-த்தல்** *mai-y-ōlai-piḍi-,* 4 செ.கு.வி. (v.i.) கற்கத் தொடங்கும் போது மைதடவிய எழுத்துள்ள ஓலையைக் கைக் கொள்ளுதல்; to handle an *ōla* written and inked, in commencing one's study. *"ஐயாட்டை நாளை எண்ணாகப் பெற்று மையோலைபிடித்துக் கலைகள் கற்றார்" (சீவக. 2706, உரை).* *"மையோலை பிடித்த இளைய புலவரது" (பரிபா. 11, 88, உரை).*

*[மை + ஒலை + பிடி-,]*

**மைரேயம்** *mai-rēyam,* பெ.(n.) ஒரு வகை நெய்மம் (தைலம்); a kind of medicated oil.

**மைலார்** *mailār,* பெ.(n.) பொங்கற் பண்டிகையை யடுத்து ஒரு கிழமைக் (வார) காலம் வண்ணார் முதலியோர் மைலாரு தேவியை வழிபட்டுக் கொண்டாடும் விழா; festival in which washermen, artisans and others worship mailaru, their tutelary deity, for about a week after *pongal.* (C.G.)

**மைலார்பூசை** *mailār-pūšai,* பெ.(n.) மைலார் பார்க்க (இ.வ.); see *mailār.*

*[மைலார் + பூசை]*

**மைலாரு** *mailāru,* பெ.(n.) சிறு தேவதை; a petty goddess.

தெ. மைலாரு.

**மைலாலக்கடி** *mailāla-k-kaḍi,* பெ.(n.) 1. மர வகை (பிசின்பட்டை); common grey mango laurel. 2. பிசின்பட்டை மரத்தின் மேற்றொலி; bark of common grey mango laurel.

**மைவாகனன்** *mai-vāganan,* பெ.(n.) 1. ஆட்டு ஊர்தியுடையோன், (அக்கினி தேவன்) (பிங்.); Agni, as riding a ram. *"நம்மை முகம் பாரான் மைவாகனன் வந்தே வயிற்றினிற் பற்றினனே" (தனிப்பா. i, 186, 14).*

*[மை + வாகனன்]*

**Skt.** *vāhanan* > த. வாகனம். வாகனம் → வாகனன்.

**மைவாசிகி** *maivāciki,* பெ.(n.) குண்டுப்பனை; a kind of palm.

**மைவிடை** *mai-viḍai,* பெ.(n.) ஆட்டுக் கிடாய்; ram. *"வாயின் மாடந்தோறும் மைவடை வீழ்ப்ப" (புறநா. 33).*

*[மை + விடை]*

**மைவிழியார்** *mai-viḻiyār,* பெ.(n.) விலை மகள்; prostitute. *'மைவிழியார் மனையகல்' (பழ.).*

*[மைவிழி → மைவிழியார். விலைமகட்கு அழகு மேனி மினுக்குதலாதலின் கண்ணுக்கு மை தீட்டும் வகையில் கொள்ளும் அழகுபடுத்துதல் குறிப்பாக விலைமகட்குரியதாயிற்று.]*

**மைவிளக்கு** *mai-viḷakku,* பெ.(n.) எரி விளக்கு; oil lamp. *"மாணிக்க விளக்கை மைவிளக்கோடே எடுத்து" (சிலப். 9, 1–4, உரை).*

*[மை + விளக்கு]*




**மைவீடு** *mai-vīḍu,* பெ.(n.) செங்கத்தாரி; a shrub with medicinal bark or root.

*[மை + வீடு]*

**மைவை–த்தல்** *mai-vai-,* 4 செ.கு.வி. (v.i.) 1. மையிட்டு (அஞ்சனமிட்டு) மயக்குதல்; to bewitch, to enchant by means of magic pigment. 2. கண்ணுக்கு அஞ்சனம் உருவாக்கல் (தயாரித்தல்) (இ.வ.); to prepare collyrium for the eye. 3. வெறி யுண்டாகும்படி கள்குடித்தல்; to drink to intoxication.

*[மை + வை–,]*

மைனம் *mainam,* பெ.(n.) மீன்; fish.

*[மீன் → மீனம் → மைனம்]*

மைனா *maina,* பெ.(n.) நாகணவாய்ப் புள்; a bird.




மைனிகன் *mainigan,* பெ.(n.) கறையான் (யாழ்.அக.); white ant.

# மொ

மொ¹ *mo,* பெ.(n.) தமிழ் நெடுங்கணக்கில் 'ம்' என்ற மெய்யெழுத்தும் 'ஒ' என்ற உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய் (அசை) யெழுத்து; the syllabic letter of 'm' and 'o'.

*[ம் + ஒ]*

மொ² *mo,* பெ.(n.) தோள்; shoulder.

மொக்கச்சி *mokkacci,* பெ.(n.) மொக்கைச்சி பார்க்க; see *mokkaicci.*

*[மொக்கைச்சி → மொக்கச்சி]*

மொக்கட்டை¹ *mokkaṭṭai,* பெ.(n.) தலையில் நெற்றி முதல் மோவாய் வரையிலுள்ள முன் பகுதி (யாழ்.அக.); front of head from forehead to chin, face.

மறுவ. முகம்.

தெ. மொக்கட்டு, மொகமு.

*[முகக்கட்டை = மோவாய்க்கட்டை. முகக் கட்டை → மொக்கட்டை]*

மொக்கட்டை² *mokkaṭṭai,* பெ.(n.) மழுக்கமானது (இ.வ.); that which is blunt.

தெ. மொக்கடி, மொக்கடீடு (குறுகிய மருப்புள்ள யானை).

த. மொக்கட்டை > **Skt.** matkuna (elephant without tusks)

*[மொக்கை + கட்டை. மொழுக்கு → மொக்கு → மொக்கை.]*

மொக்கட்டைமுறித்தான் *mokkaṭṭai-muṟittāṉ,* பெ.(n.) குறும்பன் (யாழ்.அக.); mischievous person.

*[மொக்கட்டை + முறித்தான். மொக்கட்டை = முகம்.]*

மொக்கட்டையீனம் *mokkaṭṭai-y-īṉam,* பெ.(n.) மதிப்புக்கேடு (யாழ்.அக.); disrespect.

*[முகக்கட்டை → மொக்கட்டை + ஈனம். முகத்திற்கு அதாவது (முகத்தை உடைய) ஆளுக்கு ஏற்படும் மதிப்புக் குறைவு.]*

**Skt.** *hīna* > த. ஈனம்.

மொக்கணி¹ *mokkaṇi,* பெ.(n.) குதிரைக்குக் கொள்ளு முதலியன உணவு கட்டும் பை; feed - bag, nose - bag. *"மொக்கணி முட்டக்கட்டி" (திருவாலவா. 29, 6).*

க. பக்கணா.

*[மொக்கு + அணி. மொக்குதல் = மொக்கித் தின்னுதல்.]*




**மொக்கணி²** *mokkaṉi,* பெ.(n.) கோவேறு கழுதை முதலியவற்றிக்கிடுங் கடிவாளம் போன்ற கருவி வகை (சப்.); a kind of bridle for mules, etc.

*[மூக்கணி → மொக்கணி]*

**மொக்களி¹-த்தல்** *mokkaḷi-,* 4 செ. குன்றாவி. (v.t.) செலவில் (பயணத்தில்) தடை செய்தல் (வின்.); to detain a person in his journey.

*[மொக்கு + அளி-,]*

**மொக்களி²-த்தல்** *mokkaḷi-,* 4 செ.கு.வி. (v.i.) பயணத்தில் தங்குதல் (யாழ்.அக.); to stop on a journey, to sojourn.

*[மொக்கு + அளி-,]*

**மொக்கன்** *mokkaṉ,* பெ.(n.) தடித்த-வன்-வள்-து (இ.வ.); stout person or thing.

தெ. மொக்காடு (தடித்தவன்)

*[மொழு → மொகு → மொக்கு = மரக்கணு, பருமன். மொக்கு → மொக்கன் (வே.க.4, 47)]*

**மொக்கித்தின்(னு)-தல்** *mokki-t-tiṉ(ṉu)-,* 14 செ.குன்றாவி. (v.t.) ஒரு சேர விழுங்கி யுண்ணுதல் (வின்.); to eat greedily in large mouthfuls.

*[மொக்கி + தின்(னு)-. முழுக்கு → முக்கு. முக்குதல் = ஒன்றை வாய்நிருள் முழுக்கித் தின்னுதல். முக்கு → மொக்கு. (மு.தா. 291). துல் → துன் → துற்று = உணவு. துற்றுதல் = உண்ணுதல் துற்று → துற்றி = உணவு. துன் → தின் → தின்னு.]*

**மொக்கு¹-தல்** *mokku-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. மொக்கித்தின்னு-தல் பார்க்க; see *mokki-t-tiṉṉu-.* *"முக்கனி சர்க்கரை மொக்கிய" (திருப்பு. 263).* 2. அடித்தல் (பிங்.); to beat.

க., பட. முக்கு; தெ. மெக்கு.

*[முள் → முழு → முழுங்கு → விழுங்கு. முழுங்கு → (முழுக்கு) → முடுக்கு = ஒருமுறை விழுங்கும் நீர் அளவு. முடுக்கு → மடக்கு. முழுக்கு → முக்கு. முக்குதல் = ஒன்றை வாய்நிருள் முழுக்கித் தின்னுதல். முக்கு → மொக்கு. மொக்குதல் = வாய்நிருள் நிரம்ப முழுக்கித் தின்னுதல் (மு.தா. 290, 291)முக்குதல் அல்லது மொக்குதல் வாய் நிறைய ஒன்றையிட்டுத் தின்னுதல். (சொ.க. 50)]*

**மொக்கு²** *mokku,* பெ.(n.) 1. பூமொட்டு; flower-but. 2. சேலைகளில் மொட்டுப் போற் செய்யப்படும் வேலைப்பாடு; bud-like designs on sarees. 3. தரையிலிடும் பூக்கோலம்; ornamental designs drawn on the floor with powder. 4. குத்து விளக்கின் தகழி (வின்.); bowl of an oil lamp.

மறுவ. மொட்டு.

க., பட. மொக்கு; தெ. மொக்க.

*[முள் → முளை = முளைக்கும் வேர், தளிர் முதலியன, மரக்கன்று. முருந்து = இளந்தளிர், இளவெலும்பு. முருந்து → முருந்தம் = கொழுந்து. முள் → முகை = அரும்பு (மு.தா. 39, 40). முகைதல் = அரும்புதல். முகு → மொகு → மொக்கு (வே.க.4,3)]*




**மொக்கு³** *mokku,* பெ.(n.) 1. மரக்கணு (யாழ்.அக.); knot in trees. 2. மொக்கை பார்க்க; see *mokkai.*

தெ. மொக்க.

*[முள் → (மொள்) → மொழுக்கு → மொழுக்கட்டை → மொக்கட்டை = மழுக்கமானது. மொழுக்கு → மொக்கு (மு.தா.99)]*

**மொக்குபோ-தல்** *mokku-pō-,* 8 செ.கு.வி. (v.i.) மொக்கைபோ-தல், பார்க்க (கொ.வ.); see *mokkai-pō-,*

*[மொக்கு + போ-,]*

**மொக்குமா** *mokkumā,* பெ.(n.) ஒருவகைக் கோலப் பொடி (இ.வ.); powder for drawing decorative designs on the floor.

*[மொக்கு² + மா⁶. மொகு → மொக்கு = பூமொட்டு, தரையிலிடும் பூக்கோலம். மொக்குமா = தரையில் பூக்கோலம் போடப் பயன்படுத்தும் மாவு]*

**மொக்குழி** *mokkuḻi,* பெ.(n.) சிற்றுண்டி வகை (இ.வ.); a kind of confection.

*[ மொக்குளித்தல் = திரளுதல். மொக்குளி → மொக்குழி]*

**மொக்குள்¹** *mokkuḷ,* பெ.(n.) 1. கொப்பூழ்; navel. 2. மகளிர் கந்து (யோனிலிங்கம்); clitoris. 3. புறயிதழ்; calyx.

க. முகுள்.

*[மொக்கு → மொக்குள் = மலரும் பருவத்து அரும்பு, அது போன்றுள்ள உடலுறுப்பு]*

**மொக்குள்²** *mokkuḷ,* பெ.(n.) 1. மலரும் பருவத்துள்ள அரும்பு; flower-bird. *'முகை மொக்கு ளுள்ளது நாற்றம்போல்' (குறள், 1274).* 2. நீர்க்குமிழி; bubble. *"படுமழை மொக்குளின்" (நாலடி, 27).*

க. முகுல்.

*[முகிள் → முகிழ் = அரும்பு. முகிழ் → முகிழம். முகை = அரும்பு. முகிடு → மொக்கு = அரும்பு. மொக்கு → மொக்குள் (வே.க.4,3)]*

**மொக்குளி-த்தல்** *mokkuḷi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. குமிழியுண்டாதல் (வின்.); to bubble up. 2. திரளுதல் (யாழ்.அக.); to gather up.

க. முக்குளிசு.

*[மொக்கு → மொக்குள் = மலரும் பருவத்து பேரரும்பு, நீர்க்குமிழி. மொக்குள் → மொக்குளி-, (வே.க.4,3)]*

**மொக்குளிப்பான்** *mokkuḷippāṉ,* பெ.(n.) சின்னம்மை; chicken-pox.

மறுவ. அம்மைக் கொப்புளம், கொப்புளிப்பான், விளையாட்டம்மை.

*[மொக்குளி → மொக்குளிப்பான். மொக்குளித்தல் = குமிழியுண்டாதல். உடம்பில் குமிழி போல் கொப்புளம் ஏற்படும் கரணியம் பற்றி இந்நோய் மொக்குளிப்பான் எனப்பட்டது. அக்கொப்புளத்தின் தன்மைக்கேற்ப தட்டம்மை, மணல்வாரியம்மை, பயற்றம்மை என்றாற்போன்று வேறுபடுத்திக் காண்பதும் உண்டு. கொப்புளத்தில் நீர்கோத்திருக்கும் தன்மைபற்றி நீர்க்கொள்வான் எனக் குறிப்பிடுவதும் உண்டு.]*

அம்மைக் கொப்புளம் முத்துப்போன்று இருத்தலால் அதை முத்தென்று அழைப்பர். அதனால் மாரிக்கு முத்துமாரியம்மன் என்றொரு பெயர் வழக்கும் உண்டு. (சொ.க.9.).

**மொக்கை**[1] *mokkai,* பெ.(n.) 1. கூரின்மை; bluntness as of an iron style. *'பேனா மொக்கையாய் விட்டது' (உ.வ.).* 2. பருமன்; bulkiness; stoutness. 3. மரத்துண்டு (இ.வ.); piece of wood, stump. 4. தாழ்வு (இ.வ.); low condition. 5. அவமானம் (யாழ்.அக.); ignominy, shame, disgrace. 6. மதிப்பு (யாழ்.அக.); respect. 7. முகம் (இ.வ.); face. *'மொக்கைக்காட்டி யடித்தான்' (இ.வ.).* 8. புணர்ச்சி; copulation.

தெ. மொக்க (கூரின்மை).

*[முள் → (மொள்) → மொழுக்கு → மொழுக்கட்டை → மொக்கட்டை = மழுக்கமானது. மொழுக்கு → மொக்கு → மொக்கை = கூரின்மை (மு.தா.99). மொழு → மொகு → மொக்கு = மரக்கணு, பருமன். மொக்கு → மொக்கன் = தடித்தவன். மொக்கு → மொக்கை (வே.க.4,48)]*

**மொக்கை**[2] *mokkai,* பெ.(n.) பெரியது; that which is big.

*[முள் → மள் → மாளிகை = பெருமனை. முரு → மொக்கு → மொக்கை = பெரியது. மொக்கை → மக்கை. மக்கைச்சோளம் = பெருஞ்சோளம்]*

**மொக்கைகுலை-தல்** *mokkai-kulai-,* 2 செ.கு.வி. (v.i.) அவமானப்படுதல் (வின்.); to be disgraced.

*[மொக்கை + குலை-, குல் → குலை. குலைதல் = கெடுதல்.]*

**மொக்கைச்சி** *mokkaicci,* பெ.(n.) 1. மிகப் பருத்தவள்; stout woman. 2. அறிவு மழுங்கின பெண்; dullard woman.

*[மொக்கை → மொக்கைச்சி]*

**மொக்கைச்சோளம்** *mokkai-c-cōḷam,* பெ.(n.) பருத்த அமெரிக்கச் சோளம் (மக்காச்சோளம்) (மூ.அ.); Indian corn.

*[மொக்கை + சோளம். மொக்கைச் சோளம் → மக்கைச் சோளம் → மக்காச்சோளம். (வே.க.4,48)]*



மொக்கைச்சோளம்

**மொக்கைபோ-தல்** *mokkai-pō-,* 8 செ.கு.வி. (v.i.) 1. அவமானப்படுதல்; to be disgraced. *"மொக்கை போகச் செகுத்திடுவார் பொருள்" (திருப்பு. 603).* 2. முனை மழுங்குதல் (யாழ்.அக.); to become blunt, as a knife. *'அரிவாள் மணை மொக்கை போய்விட்டது' (உ.வ.).*

*[மொக்கை + போ-,]*

**மொக்கைபோடு-தல்** *mokkai-pōḍu-,* 3 செ.குன்றாவி. (v.t.) புணர்தல்; to cohabit, copulate.

*[மொக்கு → மொக்கை = பருமன், புணர்ச்சி. மொக்கை + போடு-, (வே.க.4, 48)]*

**மொக்கையன்** *mokkaiyan,* பெ.(n.) 1. மிகப் பருத்தவன், தடியன்; stout man. 2. அறிவு மழுங்கியவன்; dullard.

*[மொக்கை → மொக்கையன்]*

**மொக்கையா—தல்** *mokkai-y-ā-*, 6 செ.கு.வி. (v.i.) முனை மழுங்குதல்; to be blunt, as a knife. *'கத்தி மொக்கையாய் விட்டது, சற்று தீட்டிக் கொடு' (உ.வ.).*

*[மொக்கை + ஆ–,]*

**மொக்கையாளி** *mokkai-y-āḷi*, பெ.(n.) மிகப் பருத்தவன்; stout man.

*[மொக்கை + ஆளி. மொக்கையாளி → மக்கையாளி → மக்காளி = மிகப் பருத்தவன். (உ.வ.) (வே.க.4.48).]*

**மொக்கையீனம்** *mokkai-y-īṉam*, பெ.(n.) மதிப்புக் குறைவு (யாழ்.அக.); disrespect.

*[மொக்கை + ஈனம்]*

**Skt.** *hīna* > த. ஈனம்.

**மொகடஞ்செடி** *mogaḍañ-jeḍi*, பெ.(n.) மகிழஞ்செடி; a tree with very fragrant flowers-munusops elengi.

*[மகிழம் + செடி. மகிழஞ்செடி → மொகடஞ்செடி]*

**மொகடம்பட்டை** *mogaḍam-paṭṭai*, பெ.(n.) மகிழம்பட்டை; bark of the tree.

*[மகிழம் + பட்டை. மகிழம்பட்டை → மொகடம்பட்டை. பட்டு → பட்டை = தட்டையான பொருள்.]*

**மொகத்தாருடம்** *moga-t-tāruḍam*, பெ.(n.) செங்குளவி; red beetle.

**மொகமொகெனல்** *mogamogeṉal*, பெ.(n.) 1. நீர்க் கொதிப்பின் ஒலிக்குறிப்பு; onom. expr. of boiling. 2. கழுத்துக் குறுகிய ஏனத்தி (பாத்திரத்தி)னின்று நீர் ஊற்றுங் காலுண்டாகும் ஈரடுக்கொலி குறிப்பு (சூடா.); onom. expr. of gurgling sound, as of water poured from a narrow-necked vessel.

*[மொகமொக + எனல்]*

**மொகர்** *mogar*, பெ.(n.) மோர்[1] பார்க்க; see *mōr*.

ம. மோர்.

*[முள் → முளி. முளிதல் = பொங்குதல் (மு.தா.63). முளி → முயி → முயர் → முசர் = மோர், தயிர். முசர் → மொசர் → மொகர்.]*

**மொகலிங்கம்** *moga-liṅgam*, பெ.(n.) மகலிங்கம் (M.M.1022); weaver's beam.

தெ. மொகலிங்கம்.

**மொகி** *mogi*, பெ.(n.) கொக்கு; a kind of bird stork.




**மொகுமொகு–த்தல்** *mogu-mogu-*, 4 செ.கு.வி. (v.i.) ஒலித்தல்; to resound. *"எழுகடல்களு மொகு மொகுத்தென" (பாரத. பதின்மூன். 86).*

*[மொகு + மொகு–]*

**மொகுமொகுமெனல்** *mogu-mogu-meṉal*, பெ.(n.) மொகுமொகெனல் பார்க்க (திவா.); see *mogu-mogeṉal*.

*[மொகு + மொகு + எனல்]*

**மொகுமொகெனல்** *mogu-mogeṉal*, பெ.(n.) 1. ஒலிக்குறிப்பு; onom. expr. of resounding. *"மொகுமொகென் றொலி மிகுந்த மருகங்கள்" (கலிங். 100).* 2. நீர் பெருகுதற்குறிப்பு; onom. expr. of gushing, as of water. *"மொகுமொகென விருவிழி நீர் முத்திறைப்ப" (தாயு. பொருள்வ. 4).*

*[மொகுமொகு + எனல்]*

**மொங்கன்** *moṅgaṉ*, பெ.(n.) மொக்கன் பார்க்க (வின்.); see *mokkaṉ*.

*[மொக்கு → மொக்கன் = தடித்த–வன்–வள்–து. மொக்கன் → மொங்கன். (வே.க.4,47)]*

**மொங்கான்** *moṅgāṉ*, பெ.(n.) 1. இடிகட்டை (வின்.); rammer for roads. 2. பெருத்துக் கனத்த பொருள் (கொ.வ.); anything large and heavy. 3. மொங்கான்தவளை பார்க்க; see *maṅgāṉ-tavaḷai*.

*[முள் → மள் → மாளிகை = பெருமனை. முரு → மொக்கு → மொக்கை = பெரியது. மொக்கு → மொங்கு → மொங்கான் = பெரியது, பெருந்தவளை (மு.தா.216)]*


மொங்கான்

**மொங்கான்சாத்து–தல்** *moṅgāṉ-šāttu-*, 5 செ.குன்றாவி. (v.t.) மொங்கான்வை–த்தல், 2 பார்க்க; see *moṅgāṉ-vai-*, 2.

*[மொங்கான் + சாத்து–,]*

**மொங்கான்தவளை** *moṅgāṉ-tavaḷai*, பெ.(n.) பருத்த பச்சைத் தவளை; a kind of frog which big and green in colour.

*[மொங்கான் + தவளை]*


மொங்கான்தவளை

**மொங்கான்வை–த்தல்** *moṅgāṉ-vai-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. இடிகட்டையால் நொறுக்குதல்; to ram. 2. ஏமாற்றுதல் (கொ.வ.); to deceive.

*[மொங்கான் + வை–,]*

**மொங்கின்** *moṅgiṉ*, பெ.(n.) கப்பலின் பாய்க்கயிறு கட்டுங் கட்டை (கப்.வ.); horizontal wooden block to which the fore-tack of a sail is fastened.

**மொச்சட்டங்கொட்டு–தல்** *moccaṭṭaṅ-koṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) நாவாற் கொட்டி யொலித்தல் (இ.வ.); to smack.

*[மொச்சட்டம் + கொட்டு–,]*

**மொச்சட்டம்** *moccaṭṭam*, பெ.(n.) நாவாற் கொட்டியொலிக்கை; smacking.

*['மொச்சு' = ஒலிக்குறிப்புச்சொல். மொச்சு → மொச்சட்டம்.]*

**மொச்சடி-த்தல்** *moccaḍi-,* [redacted] செ.கு.வி. (v.i.) தீய (துர்) நாற்றம் வீசுதல் (வின்.); to emit a foul smell, [redacted] goats.

தெ. முருகு.

*[மொச்சை + அடி-, மொச்சையடி → மொச்சடி-,]*

**மொச்சம்** *moccam,* பெ.(n.) மொசகம் பார்க்க; see *mošagam.*

**மொச்சி** *mocci,* பெ.(n.) மலைமொச்சி; mountain lablab.

*[மொச்சை → மொச்சி]*

**மொச்சு** *moccu,* பெ.(n.) தீய (துர்) நாற்றம் (வின்.); foul smell, as of goats.

தெ. முச்சு; பட. மொச்சு.

*[மொச்சை → மொச்சு]*

**மொச்சுமொச்செனல்** *moccu-mo-c-cenal,* பெ.(n.) அசையிட்டு உண்ணும் ஒலிக்குறிப்பு; onom. expr. of munching.

*[மொச்சு + மொச்சு + எனல்]*

**மொச்சேலயம்** *moccēlayam,* பெ.(n.) காட்டு மொச்சை; wild dolichos.

**மொச்சை[1]** *moccai,* பெ.(n.) தீய (துர்) நாற்றம்; foul smell. *"மொச்சைய வமணரும்".* *(தேவா. 579, 10).*

பட. மொச்சு (சாக்கடை).

*[ஊசுதல் = அழுகுதல், சுவைகெடுதல். ஊசு → மூசு. மூசுதல் = கெடுதல். மூசு → மூச்சு → மொச்சு → மொச்சை = கெட்ட பண்டத்திலிருந்து தோன்றும் தீய நாற்றம்.]*

**மொச்சை[2]** *moccai,* பெ.(n.) 1. மெல்லிய பழுப்பு நிறத்தோல் மூடிய அரை வட்ட வடிவிலிருக்கும் அவரைவகைப் பயறு, வெண்மொச்சை (சிலப். 14, 211, உரை); hyacinth bean, climber. 2. பயற்றுக் கொடிவகை; lablab, climber.

ம. மொச்ச.

*[மொத்து → மொத்தம். மொத்து → மொத்தை = திரளை. மொத்தை → மொச்சை = திரண்ட பயறு (மு.தா. 210), தமிழ்நாட்டுப் பயற்று வகைகளுள் மிக மொத்தமானது; வீட்டவரைக்கு இனமான காட்டவரை (வே.க.4,50).]*

**மொச்சைக்கொட்டை** *moccai-k-koṭṭai,* பெ.(n.) மொச்சைக் காயினுள் உட்குழிந்த அரைவட்ட வடிவிலிருக்கும் விதை (பதார்த்த. 837); hyacinth bean. *'இந்த சோறு மொச்சைக் கொட்டை மாதிரி இருக்கிறது'.*

*[மொச்சை + கொட்டை. குள் → கொள் → கொட்டை = உருண்டு திரண்ட விதை]*

**மொச்சைப்பயறு** *moccai-p-payaṟu,* பெ.(n.) மொச்சைக் கொட்டை பார்க்க (வின்.); see *moccai-k-koṭṭai.*

*[மொச்சை + பயறு]*

**மொச்சையடி-த்தல்** *moccai-y-aḍi-,* 4 செ.கு.வி. (v.i.) தயிர் முதலியன தீய (துர்) நாற்றம் வீசுதல் (இ.வ.); to emit a bad odour, [redacted] rencid curd, etc.

*[மொச்சை + அடி-,]*

**மொச்சையவரை** *moccai-y-avarai,* பெ.(n.) மொச்சை[2], 1 பார்க்க (இ.வ.); see *moccai[2],1.*

*[மொச்சை + அவரை. அவல் → அவலை → அவரை]*

**மொசகம்** *mošagam,* பெ.(n.) வாழை; plantain tree.

**மொசடி** *mošaḍi,* பெ.(n.) நீலங்கலந்த செந்நிறமுள்ளதும் 16 விரலம் வரை வளர்வதுமான கடல்மீன்வகை; a sea-fish, purplish-red, attaining 16 in. in length.



மொசடி

**மொசம்** *mošam,* பெ.(n.) இலவம் பிசின்; the gum of silk cotton tree.

**மொசி¹–தல்** *moši-,* 2 செ.கு.வி. (v.i.) மொய்த்தல்; to swarm. *"கடுந்தே றுறுகிளை மொசிந்தன துஞ்சும்" (பதிற்றுப். 71, 6).*

*[மொய் → மொசி–,]*

**மொசி²–த்தல்** *moši-,* 2 செ.குன்றாவி. (v.t.) தின்னுதல்; to eat. *"மையூன் மொசித்த வொக்க லொடு" (புறநா. 96).*

*[முள் → முடு → மடு. மடுத்தல் = வாயிலிடல், உண்ணுதல். மடு → மடை = உணவு, சோறு. முள் → (முசி) → மொசி(மு.தா.289). மொசித்தல் = பலர் கூடி உண்ணுதல் (தமி.வ.106)]*

**மொசிங்கிப்பாறை** *mošiṅgi-p-pāṟai,* பெ.(n.) வெண்மை கலந்த நீலநிறமுள்ளதும் 13 விரலம் வரை வளரக் கூடியதுமான கடல்மீன் வகை; horse mackerel, silvery blue, attaining 13 inch in length.

*[மொசிங்கி + பாறை]*



மொசிங்கிப்பாறை

**மொசுக்கு–தல்** *mošukku-,* 5 செ.குன்றாவி. (v.t.) மொக்கித்தின்(னு)–தல் பார்க்க (கொ.வ.); see *mokki-t-tiṉ(ṉu)-,*

*[மொக்கு → மொசுக்கு–,]*

**மொசுக்கை** *mošukkai,* பெ.(n.) முசுமுசுக்கை பார்க்க (மூ.அ.); see *mušu-mušukkai.*

*[முசுக்கை → மொசுக்கை]*

**மொசுப்பு** *mošuppu,* பெ.(n.) செருக்கு; pride. *"தீம்பிலே கைவளரும்படி வளர்த்த மொசுப் பெல்லாம்" (திவ். திருமாலை, 18, வ்யா. பக். 69).*

*[மொய் → மொசு → மொசுப்பு]*

**மொசுமொசு¹–த்தல்** *mošu-mošu-,* 11 செ.கு.வி. (v.i.) தினவெடுத்தல் (வின்.); to feel an itching sensation.

தெ. முசமுசலாடு

*[மொசு + மொசு]*

**மொசுமொசு²–த்தல்** *mošu-mošu-,* 4 செ. குன்றாவி. (v.t.) அடிக்கடி தொல்லை செய்தல்; to worry, annoy.

*[மொசு + மொசு–,]*

**மொசுமொசுக்கை** *mošu-mošukkai,* பெ.(n.) முசுமுசுக்கை (வின்.); bristly bryony.

*[முசுமுசுக்கை → மொசுமொசுக்கை]*

**மொசுமொசெனல்** *mošu-mošeṉal,* பெ.(n.) 1. வண்டு முதலியன மொய்த்தற் குறிப்பு; onom. expr. of swarming, as of bees. 2. நீர் உள்ளிறங்குதற்குறிப்பு; onom. expr. of gurgling sound, as in drinking. 3. மயிர் நன்கு வளர்தற்குறிப்பு; onom. expr. of signifying luxuriant growth of hair.

*[மொசு + மொசு + எனல்]*

**மொஞ்சகம்** *moñjagam,* பெ.(n.) பீலி; whisk made of peacock feathers. *"மொஞ்சகக் கையர்" (திருவாலவா. 26, 6).*

**மொஞ்சி** *moñji,* பெ.(n.) முலை; breasts. *"மொஞ்சி மொஞ்சியென் றழுங்குழந்தை" (திருப்பு. 71).*

து. முஞ்ஞு, முஞ்ஞெ.

*[மொள் → மொண் → மொண்ணை = மழுக்கம். மொண்ணை → மொண்ணி = வழுக்கையாக இருக்கும் முலை. மொள் → மொய் → மொய்சி → மொஞ்சி.]*

**மொஞ்சிநாற்றம்** *moñji-nāṟṟam,* பெ.(n.) முலைப்பால் மணம் (வின்.); smell of breast-milk.

*[மொஞ்சி + நாற்றம். நாறு → நாற்றம்]*

**மொட்டந்தலை** *moṭṭan-talai,* பெ.(n.) மொட்டைத்தலை பார்க்க (வின்.); see *moṭṭai-t-talai. 'மொட்டந்தலையிற் பட்டங்கட்டி யாள வந்தானோ'.*

*[மொட்டைத்தலை → மொட்டந்தலை]*

**மொட்டம்பு** *moṭṭambu,* பெ.(n.) கூரற்ற அம்பு (பிங்.); blunt arrow.

*[மொட்டை + அம்பு– மொட்டையம்பு → மொட்டம்பு. அம் → அம்பு.]*

**மொட்டாக்கிடு–தல்** *moṭṭākkiḍu-,* 17 செ. குன்றாவி. (v.t.) முகத்தை மூடுதல்; to cover the face as a veil.

*[முட்டாக்கிடுதல் → மொட்டாக்கிடுதல்]*

**மொட்டாக்கு** *moṭṭākku,* பெ.(n.) முக்காடு; a cloth covering the head.

*[முட்டாக்கு = முகத்தை மூடுதல். முட்டாக்கு → மொட்டாக்கு]*

**மொட்டி[1]–த்தல்** *moṭṭi-,* 11 செ.கு.வி. (v.i.) 1. குவிதல்; to close in like a bud. *"கரமலர் மொட்டித் திருதய மலர" (திருவாச. 4, 84).* 2. அரும்புதல் (சங்.அக.); to bud, to shoot forth buds.

*[மொட்டு → மொட்டி–,]*

**மொட்டி[2]** *moṭṭi,* பெ.(n.) பலாவிளி; a kind of tree.

**மொட்டு[1]** *moṭṭu,* பெ.(n.) 1. பூவின் இதழ் விரியாமலிருக்கும் நிலை, அரும்பு; tender flower-bud. *"மொட்ட றாமலர்" (திருவாச. 29,8). 'மல்லிகை மொட்டு முல்லை மொட்டை விட பெரியது' (உ.வ.)* 2. தேரின் கூம்பு; rounded top of a car. *"மாமொட்டொடிந்து மான்றேர் சிதைய" (பாரத. நான்காநாள். 24).* 3. ஆண்குறியின் நுனி (வின்.); glans penis.

மறுவ. அரும்பு, போகில், மொக்கு, மொக்குள்.

ம. மொட்டு; கூய். மொடோ.

*[முள் → முளை = முளைக்கும் வேர்தளிர் முதலியன, மரக்கன்று. முகுள் → முகுளம் = அரும்பு. முகுள் → முகிள் → முகிளம் = அரும்பு. முகிள் → முகிழ் = அரும்பு. முகிழ் → முகிழம். முகை = அரும்பு. முட்டு = பிஞ்சு. முட்டுக்காய் = பிஞ்சுக்காய். முட்டுக்குரும்மை = சிறுகுரும்மை. முட்டு → மொட்டு = அரும்பு. முதள் = அரும்பு (மு.தா. 39, 40)]*

**மொட்டு²** *moṭṭu,* பெ.(n.) தலையில் வாங்கும் குட்டு; blow with the knuckles or the fist on the head, cuff.

*[முட்டுதல் = தலையாலும் முகத்தாலும் தாக்குதல். முட்டு → மொட்டு. மொட்டு மொட்டென்று தலையிற் குட்டினான் என்பது வழக்கு. கொங்கு நாட்டார் குட்டை மொட்டுக்காய் என்பர் (மு.தா. 88)]*

**மொட்டுக்காய்** *moṭṭu-k-kāy,* பெ.(n.) மொட்டு¹ பார்க்க; see *moṭṭu¹.*

*[மொட்டு → மொட்டுக்காய்]*

**மொட்டுவெளித்தள்ளுதல்** *moṭṭu-veḷi-t-taḷḷutal,* பெ.(n.) ஆண்குறியின் மேற்றோல் மொட்டை மூடாமல் உள்வாங்கியுள்ள நிலை; condition in which the foreskin is drawn back from the end of the penis and cannot be returned (M.L.).

*[மொட்டு + வெளி + தள்ளுதல். தள்ளு → தள்ளுதல். 'தல்' தொ.பெ.ஈறு.]*

**மொட்டூசி** *moṭṭūci,* பெ.(n.) மேல்முனையில் மொட்டு போன்ற கொண்டியுடைய ஊசி, குண்டூசி (இ.வ.); pin.

*[மொட்டு + ஊசி. உள் → உளி → உசி = கூர்மை. உசி → ஊசி = கூர்மை, கூர்மையான கருவி.]*

**மொட்டை¹** *moṭṭai,* பெ.(n.) 1. முடி நீங்கிய நிலை; bald head, shaven head. *"மொட்டைய மணாதர்" (தேவா. 325, 10). 'குழந்தைக்கு மொட்டையடிக்க வேண்டும்'.* 2. இயற்கையாக இருக்க வேண்டியது இல்லாத நிலை; barrenness, in completion, baldness. *'மழையில்லாமல் மரங்கள் மொட்டையாக நிற்கின்றன'.* 3. கூரின்மை; bluntness, as of a knife. 4. அறிவின்மை; stupidity, ignoranace, dulness. *'மொட்டைப்புத்தி' (கொ.வ.).* 5. வெறுமை; complete barenness. *'மொட்டை மரம்'.* 6. நிறைவின்மை, தேவையான விளக்கம் இல்லாத தன்மை; imperfection, incompleteness want of necessary details. *'இப்படி மொட்டையாக விடை சொன்னால் எப்படிப் புரிந்து கொள்ள முடியும்' (உ.வ.).* 7. மொட்டைமுறையீடு பார்க்க (இ.வ.); see *moṭṭai-muṟaiyīḍu.*

மறுவ. மூளி.

ம. மோழ (கொம்பில்லா விலங்கு); க. மொண்ட, மொண்டு, மொண்டெ (மழுங்கிய நிலை, குறை), மோட, மோடு (குறைநிலை); தெ. மொண்டி (குறைக்கப்பட்ட, வெட்டப்பட்ட மர அடித்தாள்); து. மொண்டு; கோத. மொண்ட்ய் (முண்டம்); துட. முட்ய் (முடவன், முண்டம்); பட. மொட்டெ.

**Pkt.** *maṭṭa* (கொம்பில்லாதது); **Skt.** *muṇḍa* (கொம்பில்லாதது, வெட்டப்பட்டது).

*[முள் → (மள்) → மழு → மழுகு → மழுங்கு → மழுக்கு → மழுக்கம். முள் → முட்டு → மொட்டை. ஒ.நோ. பொட்டு → பொட்டை = கண்ணொளி மங்குதல் (மு.தா. 98).*

**மொட்டை²** *moṭṭai,* பெ.(n.) மணமாகாத இளைஞன் (வின்.); unmarried man, used in contempt. *'மொட்டைப் பையன்' (உ.வ.).*

*[முள் → முளு → முசு → மூசு = பிஞ்சு, பவாமுசு. ஒ.நோ. உளு → உசு. ள → ச போலித்திரிபு. முள் → முட்டு. முட்டுக் குரும்பை = சிறு தென்னம் பிஞ்சு அல்லது பனம் பிஞ்சு. முட்டு → மொட்டு = அரும்பு. மொட்டு → மொட்டை (வே.க.4, 1, 2)]*

**மொட்டைக்கட்டை** *mottai-k-kattai,* பெ.(n.) ஆடையில்லாவுடம்பு (அம்மணம்); nakedness, rudity (Tp).

மறுவ. முண்டக்கட்டை.

*[மொட்டை + கட்டை. முள் → முட்டு → மொட்டை = வெறுமை, இயல்பாக இருக்க வேண்டியது இல்லாத நிலை, ஆடை உடுத்தாதவுடம்பு. கள் → கட்டு → கட்டை = திரண்டது, திரண்டவுடம்பு.]*

**மொட்டைக்கடிதம்** *mottai-k-kadidam,* பெ.(n.) கையெழுத்திடாத முறையீடு (மனு), கையெழுத்திடாத கடிதம்; anonymous petition, anonymous letter. *'மேலதிகாரி கையூட்டு (லஞ்சம்) வாங்குவதாக மொட்டைக் கடிதம் வந்துள்ளது' (உ.வ.).*

*[மொட்டை + கடிதம்]*

**மொட்டைக்கறுப்பன்** *mottai-k-karuppan,* பெ.(n.) 1. கறுப்பு நெல்வகை (வின்.); a kind of black paddy. 2. காலன் (எமதூதன்); messenger of Yama.

*[மொட்டை + கறுப்பன். கறு → கறுப்பன்.]*

**மொட்டைக்காகிதம்** *mottai-k-kākidam,* பெ.(n.) 1. கையொப்பமில்லாத கடிதம் (இக்.வ.); anonymous letter. 2. மொட்டை முறையீடு பார்க்க; see *mottai-murai-y-īdu.*

*[மொட்டை + காகிதம்]*

U. *Kāgaz* > த. காகிதம்.

**மொட்டைக்குல்லா** *mottai-k-kullā,* பெ.(n.) தட்டை வடிவான தலைப்பாகை வகை (வின்.); a kind of flat cap.

*[மொட்டை + குல்லா]*

U. *Kalāh* > த. குல்லா.



மொட்டைக்குல்லா

**மொட்டைக்குறுவை** *mottai-k-kuruvai,* பெ.(n.) இரண்டு மாதத்திற் பயிராகக் கூடியதும் குட்டையாய்க் கீழ்நோக்கி வளைவதுமான நெல்வகை; a species of paddy, short and bent down, maturing in two months, dist. fr. *vār-kuruvai.*

*[மொட்டை + குறுவை. குறு → குறுவை = குறுகிய காலத்தில் விளைச்சல் தரும் நெற்பயிர்.]*

**மொட்டைக்கோதுமை** *mottai-k-kōdumai,* பெ.(n.) கோதுமை வகை; a kind of wheat.

*[மொட்டை + கோதுமை]*

Skt. *gōdhūma* > த. கோதுமை.

**மொட்டைக்கோபுரம்** *mottai-k-kōburam,* பெ.(n.) 1. அரைகுறையாய் செய்து நிறுத்தி விடப்பட்ட கோபுரம்; unfinished tower of a temple. 2. உச்சிக்கூம்பு இல்லாத கோபுரம்; pinnacle less tower.

*[மொட்டை + கோபுரம். கோ= அரசன். புர் புரம் = உயர்ந்த மனை. கோபுரம் = அரண்மனையிலுள்ள புரம்.]*


மொட்டைக்கோபுரம்

**மொட்டைச்சி** *mottaicci,* பெ.(n.) 1. மயிரற்ற தலையுடையவள்; bald-headed woman. 2. கைம்பெண்; widow, as having a shaven head. 3. ஒருவகை மருந்துப் பொடி (யாழ்.அக.); a medicinal powder.

*[மொட்டையன் (ஆ.பா) – மொட்டைச்சி (பெ.பா)]*

**மொட்டைத்தலை** *mottai-t-talai,* பெ.(n.) 1. மயிர் நீங்கிய தலை; bald or shaven head croped head. *"தட்டை முடி மொட்டைத் தலை" (அறப். சத. 64). 'மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் முடி போட்டது போல' (பழ.).* 2. முண்டாசு (பாகை) முதலியன அணியாத தலை; bare, uncovered head.

*[முட்டு → மொட்டை + தலை]*

**மொட்டைத்தலையன்** *mottai-t-talaiyan,* பெ.(n.) தலை மயிரை நீக்கியவன்; one who has shaven head. *'மொட்டைத் தலையன் போருக்கு அஞ்சான்' (பழ.)*

*[மொட்டை + தலையன். தலை → தலையன்]*

**மொட்டைத்தனம்** *mottai-t-tanam,* பெ.(n.) 1. மழுங்கடித்தல் (புதுவை.); shaven condition, as of head. 2. அசட்டுத் தனம் (இ.வ.); foolishness.

*[மொட்டை + தனம்]*

**மொட்டைதட்டு-தல்** *mottai-tattu-,* 5 செ. குன்றாவி.(v.t.) மொட்டையடி-த்தல்,2 பார்க்க (வின்.); see *mottai-y-adi-,* 2. *'மரத்தையெல்லாம் மொட்டை தட்டி விட்டான்'.*

*[மொட்டை + தட்டு-,]*

**மொட்டைப்பயல்** *mottai-p-payal,* பெ.(n.) சிறுவன்; boy, lad.

*[முள் → முளை = இளமை. முளையன் = சிறுவன். முளையான் = சிறு குழந்தை. முள் → முட்டு → மொட்டு → மொட்டை. மொட்டைப்பயல் = சிறுபயல் (மு.தா.41). மணமாகாத இளைஞர் (வே.க.4,2)]*

**மொட்டைப்பிராது** *mottai-p-pirādu,* பெ.(n.) மொட்டை முறையீடு பார்க்க (இ.வ.); see *mottai-muraiyīdu.*

*[மொட்டை + பிராது]*

U. *faryād* > த. பிராது.

**மொட்டைப்புத்தி** *mottai-p-putti,* பெ.(n.) மழுங்கின அறிவு (வின்.); stupidity, dulness of intellect.

*[மொட்டை + புத்தி]*

**மொட்டைமச்சு** *mottai-maccu,* பெ.(n.) மொட்டைமாடி பார்க்க; see *mottai-mādi.*

*[மொட்டை + மச்சு]*

**மொட்டைமண்டை** *mottai-mandai,* பெ.(n.) மழித்த தலை; bald or shaven head.

*[மொட்டை + மண்டை. முள் → மொள் → மொண்டை → மண்டை = நீர் முகக்குங்கலம். இரப்போர் கலம், அதுபோன்ற தலையோடு, தலையின் மேற்பகுதி]*

**மொட்டைமரம்** *moṭṭai-maram,* பெ.(n.) 1. பட்டுப்போன மரம்; dead tree. 2. காயா மரம்; barren, unyielding tree. 3. இலை, பழம் முதலியன முற்றும் உதிர்ந்த மரம்; tree stripped completely of its fruits, leaves, etc.

*[மொட்டை + மரம்]*

**மொட்டைமனு** *moṭṭai-maṉu,* பெ.(n.) மொட்டைமுறையீடு பார்க்க; see *moṭṭai-muṟai-y-īḍu.*

*[மொட்டை + மனு]*

**மொட்டைமாடி** *moṭṭai-māḍi,* பெ.(n.) கூரை எதுவும் இல்லாமல் சுற்றுச்சுவருடன் மட்டும் இருக்கும் (கட்டடத்தின்) மேல்தளம்; the flat roof of a house open to the sky, open terrace. *'கோடையில் மொட்டை மாடியில் நன்றாகக் காற்று வரும்' (உ.வ.).*

*[மொட்டை + மாடி]*

**மொட்டைமாடு** *moṭṭai-māḍu,* பெ.(n.) கொம்பில்லா மாடு; hornless or dehorned cattle.

*[மொட்டை + மாடு. மா → மாடு]*


மொட்டைமாடு

**மொட்டைமுறையீடு** *moṭṭai-muṟai-y-īḍu,* பெ.(n.) கையெழுத்திடப் பெறாத முறையீடு (விண்ணப்பம்); anonymous petition.

*[மொட்டை + முறையீடு. முறையிடு → முறையீடு]*

**மொட்டையடி-த்தல்** *moṭṭai-y-aḍi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. தலை முழுதும் மழித்தல்; to shaven the head entirely. *'ஆண்டுக்கொருமுறை மொட்டையடிப்பதைச் சிலர் வழக்கமாகக் கொண்டுள்ளனர்' (உ.வ.).* 2. முழுதுங் கொள்ளை கொள்ளுதல்; to strip completely, as a man of his wealth, as a tree of its fruits. *'மரத்தை மொட்டையடித்து விட்டார்கள்'.*

*[மொட்டை + அடி-, 'அடி' து.வி.]*

**மொட்டையன்** *moṭṭaiyaṉ,* பெ.(n.) 1. மொட்டைத் தலையன்; bald-headed man; man with fully shaven or cropped head. 2. முழுதுமிழந்தவன் (இ.வ.); man completely stripped of his wealth.

*[மொட்டை → மொட்டையன். 'அன்'. ஆ.பா.ஈறு.]*

**மொட்டையா-தல்** *moṭṭai-yā-,* 6 செ.கு.வி. (v.i.) 1. முடி நீங்குதல்; to become bald. 2. கூர் மழுங்குதல்; to blunt.

*[மொட்டை + ஆ-, முனைமழுங்கியது மொட்டையாகும். மொட்டையாதல் உண்மையாய் மொட்டையாதலும் அணிவகையில் மொட்டையாதலும் என இருவகை. உடம்பிற்குத் தலையின்மையும், தலைக்குப் பாகை மகுடமின்மையும், மண்டைக்கு மயிரின்மையும், உறுப்பிற்கு அணியின்மையும், மேலுக்கு ஆடையின்மையும், நிலத்திற்குப் பயிரின்மையும், முடங்கலுக்குக் கையெழுத்தின்மையும். மரத்திற்குக் கிளையின்மையும், வாலுள்ள உயிரிக்கு வாலின்மையும், வாலிற்கு அதன் நுனியின்மையும் இவை போல்வன பிறவும் மொட்டையாகக் கருதப்படும் (மு.தா. 100).]*

**மொட்டையாக்கு-தல்** *moṭṭai-y-ākku-*, 5 செ.குன்றாவி. (v.t.) மொட்டையடி-த்தல் 2 பார்க்க (இ.வ.); see *moṭṭai-yaḍi-, 2.*

*[மொட்டை + ஆக்கு-, ஆகு (த.வி.) - ஆக்கு (பி.வி.)]*

**மொட்டையிடு-தல்** *moṭṭai-y-iḍu-*, 17 செ.குன்றாவி. (v.t.) மொட்டையடி-த்தல் பார்க்க; see *moṭṭai-y-aḍi-,*

*[மொட்டை + இடு-,]*

**மொட்டைவசனம்** *moṭṭai-vaśanam*, பெ.(n.) 1. நிறைவுபெறா சொற்றொடர் (வாக்கியம்); incomplete sentence. 2. நிறுவப்படாத செய்தி; uncoroborated statement.

*[மொட்டை + வசனம்]*

**Skt.** *vacana* > த. வசனம்.

**மொட்டைவண்டி** *moṭṭai-vaṇḍi*, பெ.(n.) மேற்கூடில்லா வண்டி; open cart without roof or hood.

*[மொட்டை + வண்டி]*



மொட்டைவண்டி

**மொட்டைவிண்ணப்பம்** *moṭṭai-viṇṇappam*, பெ.(n.) மொட்டைமுறையீடு பார்க்க; see *moṭṭai-muṟai-y-īḍu.* *'அவர் மொட்டை விண்ணப்பம் போடுவதை வழக்கமாக கொண்டுள்ளார்'.*

*[மொட்டை + விண்ணப்பம்]*

**Skt.** *viñāpana* > த. விண்ணப்பம்.

**மொட்டைவெள்ளாடு** *moṭṭai-veḷḷāḍu*, பெ.(n.) கொம்பில்லாத ஆடு; hornless goat.

*[மொட்டை + வெள்ளாடு. பொதுவாக வெள்ளாடுகளுக்கு 1/2 முதல் 3/4 அடி அளவு கொம்பு இருக்கும்]*

**மொடமொடப்பு** *moḍa-moḍappu*, பெ.(n.) விறைப்புத்தன்மை; stiffness. *'மொட மொடப்பான துணிகளை அணிவதிலேயே சிலருக்கு நாட்டம் அதிகம்'.*

*[முல் → மல் = வலிமை. முல் → முள் → மொள் → மொய் = வலிமை. முள் → மொள் → மொட → மொடமொடப்பு.]*

**மொடமொடெனல்** *moḍa-moḍeṉal*, பெ.(n.) மொடுமொடெனல் பார்க்க (சது.); see *moḍu-moḍeṉal.*

*[மொடமொட + எனல்]*

**மொடவி** *moḍavi*, பெ.(n.) பரு, முகப்பரு; small pimple on the face (கருநா.).

க. மொடவி, மொடவெ; தெ. மொடிம; பட. மொடிவி; கோத. மொர்திரி (மச்சம்).

*[மொடு → மொடவி]*

**மொடு** *moḍu*, பெ.(n.) 1. பருமை; bigness, bulkiness. 2. மிகுதி (யாழ்ப்.); plenty. 3. விலை முதலியவற்றின் நயம் (வின்.); clearness. *"பெருச்சாளியை மூத்த நயினார் மொடுவாய்க் கொண்டு போனார்" (குற்றா. குற. 93, 2).*

*[முகடு → மோடு (மு.தா.68). மோடு → மொடு]*

**மொடுக்குமொடுக்கெனல்** *modukku-modukkeṉal,* பெ.(n.) ஒலிக் குறிப்பு வகை (வின்.); onom. expr. of gulping. *'மொடுக்கு மொடுக்கென்று குடிக்கிறான்'.*

*[மொடுக்கு + மொடுக்கு + எனல்]*

**மொடுகு** *modugu,* பெ.(n.) கையணி வகை; a kind of bracelet.

தெ. முருகு.

*[முள் → முறு → முறுகு → மொடுகு - முறுக்கிச் செய்யப்பட்ட அணி]*



மொடுகு

**மொடுமொடு-த்தல்** *modu-modu-,* 4 செ.கு.வி. (v.i.) 1. பசையுள்ள ஆடை முதலியன ஒலித்தல் (வின்.); to rustle, as dried skin, starched cloth. 2. வயிறு இரைதல்; to rumble, as the bowels. 3. விரைதல்; to hasten.

*[மொடு + மொடு-,]*

**மொடுமொடெனல்** *modu-modeṉal,* பெ.(n.) 1. உலர்ந்த தோல் முதலியவற்றின் ஒலிக் குறிப்பு (பிங்.); rustling sound as of dried skin, starched cloth. 2. வயிறு இரைதற் குறிப்பு (கொ.வ.); rumbling in the stomach. 3. விரைதற்குறிப்பு; hastening. *"முன்னலோர் வெள்ளிப் பெருமலைக் குட்டன் மொடுமொடு விரைந்தோட" (திவ். பெரியதி. 1, 7, 5).*

*[மொடு + மொடு + எனல்]*

**மொடுவார்நங்கை** *moduvār-naṅgai,* பெ.(n.) பாம்புகடி வேர்; a kind of root used as an antidote in snake poison.

**மொண்டணி** *moṇdaṇi,* பெ.(n.) மொந்தணி, 1 பார்க்க (சப்.); see *mondaṇi, 1.*

*[மொந்தணி → மொண்டணி]*

**மொண்டல்** *moṇdal,* பெ.(n.) மொள்ளுகை (நாமதீப. 757); taking liquid, as in a vessel, scooping.

*[மொள் → மொண்டு → மொண்டல். 'அல்'. தொ.பெ.ஈறு]*

**மொண்டள-த்தல்** *moṇdaḷa-,* 3 செ. குன்றாவி. (v.t.) நீர்மப் பொருள்களை முகந்து அளவு செய்தல்; to measure by taking in vessel, as water.

*[மொண்டு + அள-,]*

**மொண்டன்** *moṇdaṉ,* பெ.(n.) சாமை வகை (யாழ்ப்.); a species of *šāmai.*

**மொண்டாவன்** *moṇdāvaṉ,* பெ.(n.) மொண்டான் பார்க்க (சப்.); see *moṇdāṉ.*

*[மொண்டான் → மொண்டாவன்]*

**மொண்டான்** *moṇdāṉ,* பெ.(n.) நீர் மொள்ள உதவும் கலவகை (இ.வ.); a vessel for taking water.

*[முள் → முழு → (முகு) → முக. முகத்தல் - மொள்ளுதல், மொண்டளத்தல். முள் → மொள். மொள் → மொண்டை → மொந்தை - கள்*

முகக்குங்கலம் (மு.தா. 289). முள் → மொள் → மொண்டான் (வே.க.4, 92)]




**மொண்டி[1]** *mondi,* பெ.(n.) 1. நொண்டி வின்.); lame person. 2. ஆட்டத்தில் தன் (இ.வ.), தோல்வியை யேற்றுக் கொள்ளாமற் சாதிப்பவன் (இ.வ.); one who, refuses to admit defeat.

தெ. மொண்டி.

*[முள் → முண்டு → முண்டம் = மழித்தலை. முண்டு → மொண்டு = மொட்டைக்கை, கைக்குறை. மொண்டு → மொண்டி = கை குறைந்தவன். மொண்டி முடம் என்பது வழக்கு. முடம் என்பது வளைவு என்றும் மொண்டி என்பது குறை என்றும் வேறுபாடறிக. (மு.தா.101)]*

**மொண்டி[2]** *mondi,* பெ.(n.) மொண்டன் பார்க்க (யாழ்ப்.); see *mondan.*

*[மொண்டன் → மொண்டி]*

**மொண்டி[3]** *mondi,* பெ.(n.) மொண்டுக் காரன் பார்க்க; see *mondu-k-kāran.*

தெ. மொண்டி; க. மொண்ட; து. மொண்தி.

*[முரண்டு → மொண்டு → மொண்டி]*

**மொண்டி[4]** *mondi,* பெ.(n.) ஒரு சாமை; a millet, samai.

**மொண்டிமுடம்** *mondi-mudam,* பெ.(n.) மொண்டி[1] பார்க்க; see *mondi* [1].

*[மொண்டி + முடம்]*

**மொண்டு** *mondu,* பெ.(n.) 1. முரண்டு (வின்.); refractoriness, unruliness. 2. தொந்தரவு (யாழ்.அக.); annoyance worry.

■ மொரடு, முருடு; தெ. மொண்டி.

*[முரண்டு → முண்டு → மொண்டு. முரடு → முரடன் → க. மொட்ட]*

**மொண்டுக்காரன்** *mondu-k-kāran,* பெ.(n.) 1. முரண்டு செய்வோன் (யாழ்.அக.); refractory man. 2. தொந்தரவு செய்பவன்; trouble some person.

க. மொட்ட, மட்ட; பட. மொட்ட.

*[முரண்டுக்காரன் → மொண்டுக்காரன் = முரணாகச் செயல்படுவோன். முரள் → முரண் → முரண்டு → மொண்டு.]*

**மொண்டை** *mondai,* பெ.(n.) மொந்தை பார்க்க; see *mondai.*

*[முள் → மொள் → மொண்டை. மொண்டை → மண்டை = நீர் முகக்குங்கலம் (மு.தா.289)]*

**மொண்ணன்** *monnan,* பெ.(n.) வழுக்கைத் தலையன்; bald-headed person. *"வன்கண்ணர் மொண்ணரை" (தேவா. 705, 4).*

*[மொண்ணை → மொண்ணன்]*

**மொண்ணி** *monni,* பெ.(n.) முலை (யாழ்ப்.); breast.

மறுவ. அம்மம், குயம், குருக்கண், கொங்கை.

*[(மொள்) → மொண் → மொண்ணை = மழுக்கம். மொண்ணை → மொண்ணி = வழுக்கையாக இருப்பது]*

மொண்ணை *monnai,* பெ.(n.) 1. வழுக்கை; baldness. 2. கூர்மையின்மை; bluntness.

*[முள் → (மொள்) → மொழுக்கு → மொக்கு → மொக்கை = கூரின்மை. (மொள்) → மொண் → மொண்ணை = மழுக்கம், கூரின்மை (மு.தா.99)]*

மொண்ணையன் *monnaiyan,* பெ.(n.) அறிவு மழுங்கினவன் (நெல்லை.); dullard, idiot.

*[மொண்ணை = கூரின்மை. மொண்ணை → மொண்ணையன். 'அன்'. ஆ.பா.ஈறு]*

மொணரி *monari,* பெ.(n.) மொறுமொறுப்பவ-ன்–ள் (இ.வ.); one who grumbles.

*[முனுமுனு → மொணமொண. மொண → மொணரி.]*

மொத்தப்பட்டா *motta-p-paṭṭā,* பெ.(n.) சிற்றூர் அல்லது மாவட்டத்தை மொத்தமாக விடுங் குத்தகை (வின்.); lease of a whole village or district.

*[மொத்தம் + பட்டா]*

U. *paṭṭā* > த. பட்டா.

மொத்தப்பைசல் *motta-p-paisal,* பெ.(n.) 1. சிற்றூர் முழுவதுக்கும் மொத்தத் தீர்வையை உறுதிப்படுத்தப் பின்பு அத்தீர்வையை உரிமம் வாரியாக பிரித்தல்; (R.T.) settlement of land revenue based on a preliminary assessment of the whole village. 2. முழுதும் தீர்ந்து விடுகை; outright settlement, as of a business.

*[மொத்தம் + பைசல்]*

U. *faisal* > த. பைசல்.

மொத்தம்¹ *mottam,* பெ.(n.) 1. கூட்டுத் தொகை; sum, total, aggregate. *'தேர்வு எழுதினவர் எல்லாரும் மொத்தம் எத்தனை பேர்?' (உ.வ.).* 2. முழுமை; whole. *"பரிக்கும்பப் பரிமா மொத்தம்" (திருவாலவா. 28, 72). 'எல்லாக் காய்களையும் மொத்தமாய் விலைபேசி வாங்கிக்கொள் (உ.வ.). 'வரவு செலவுக் கணக்குப் பார்த்தால் மொத்தத்தில் இழப்பிராது'.* 3. பொது (அக.நி); universality, generality. *'எல்லாரையும் மொத்தமாய் வைதான்'.* 4. பெரும்பான்மை; majority. *'மொத்தவிலை வணிகர்' (உ.வ.).*

ம. மொத்தம்; க., பட. மொத்த; தெ. மொத்தமு; து. மொத்தொ.

*[முள் → முழு → முழுது = முழுமை. முழுது → முழுவது. முழு → முழுவல் → முழுவன். முழு → (முது) → முதல் = உடம்பு. முல் → முற்று = முழுது. முது → மொது → மொத்து → மொத்தம். (மு.தா.214)]*

மொத்தம்² *mottam,* பெ.(n.) பருமன் (வின்.) திண்ணம்; bulkiness. *'கட்டிற்கால் மொத்தமாயிருக்க வேண்டும்' (உ.வ.). 'எலுமிச்சம் பழத்தோல் மொத்தமாயிருத்தல் கூடாது'.*

*[முள் → முரு → முரள் → முரண் → முரடு = பெரியது, திரண்டது. கழுமுரடு = மிகத்திரண்ட பொருள். முரடு → முரசு = திரண்ட கட்டையாற் செய்யப்பட்ட மத்தளம், பேரிகை. முரசு → முரசம். முரடு → முருடு = முண்டுக்கட்டை. முள் → மொள் → மோள் → மோளம் → மேளம். மோளம் → மோழகம் → மேழகம் → ஏழகம் → மொள் → மொத்து = திரட்சி திரண்டது. மொத்து → மொத்தம் (மு.தா. 209, 210)]*

மொத்தம்³ *mottam,* பெ.(n.) நீலமலை குறும்பர் ஊர்; Kurumba (of Nilgiri) village.

பட. மொத்த; கோத. மொத்ம்; துட. முத்.

*[முள் → முழு → முழுது = முழுமை. முழு → மொது → மொத்து → மொத்தம் = கூட்டுத்தொகை. கூட்டாக வீடுகள் இருக்கும் குறும்பர் ஊர். ஒ.நோ. சேரி = வீடுகள் சேர்ந்திருக்கும் ஊர்]*

**மொத்தம்பைசல்** *mottam-paisal,* பெ.(n.) மொத்தப்பைசல் பார்க்க (G.Tj.D.I.182); see *motta-p-paišal.*

*[மொத்தம் + பைசல்]*

U. *faisal* > த. பைசல்.

**மொத்தமுதல்** *motta-mudal,* பெ.(n.) முதலாவது, தொடக்கமாவது; the very beginning, at the very first, in the first place.

■ மொத்த மொதல்.

*[மொத்தம் + முதல்]*

**மொத்தளம்** *mottaḷam,* பெ.(n.) 1. கூட்டம் (யாழ்.அக.); crowd. 2. மொத்தம் 1 பார்க்க; see *mottam 1.*

*[முது → மொது → மொத்து → மொத்தம் (மு.தா. 214) = கூட்டுத்தொகை. மொத்து → மொத்தளம். (வே.க.4,49).]*

**மொத்தன்** *mottaṉ,* பெ.(n.) 1. தடித்தவன்; stout man. 2. சோம்பேறி; lazy person. 3. மூடன்; dullard, idiot.

*[மொது → மொத்து → மொத்தன். (வே.க.4, 49)]*

**மொத்தி[1]** *motti,* பெ.(n.) புடைப்பு (யாழ்ப்.); excrescence, protuberance, swelling.

*[மொத்து → மொத்தி]*

**மொத்தி[2]** *motti,* பெ.(n.) 1. தடித்தவள்; stout woman. 2. சோம்பேறி; lazy woman. 3. மூடத்தனமுள்ளவள்; dullard woman.

க. மொத்தி.

*[மொத்தன் (ஆ.பா.) – மொத்தி (பெ.பா.)]*

**மொத்திக்கால்** *motti-k-kāl,* பெ.(n.) ஆனைக்கால்; elephantiasis bilarial leg.

*[மொத்தி + கால்]*

**மொத்தினி** *mottiṉi,* பெ.(n.) நுரை (சங்.அக.); foam.

*[மொத்து → மொத்தி → மொத்தினி]*

**மொத்து[1]-தல்** *mottu-,* 5 செ.குன்றாவி. (v.t.) உரக்க அல்லது வலுக்க அடித்தல்; to strike, beat. *"எதிர்மொத்தி நின்று" (கம்பரா. முதற்போ. 66). 'எல்லாருஞ் சேர்ந்து நன்றாய் மொத்தி விட்டார்கள்' (உ.வ.).*

ம. மொத்துக; க. மோது; தெ. மொத்து; து. முத்தெ.

*[முல் → முது → முத்து. முத்துதல் = சேர்தல், ஒன்றையொன்று தொடுதல், முது → மொது → மொத்து–.]*

**மொத்து[2]-தல்** *mottu-,* 5. செ.கு.வி. (v.i.) வீங்குதல்; to swell. *'அவனுக்கு முகம் மொத்தியிருக்கிறது' (உ.வ.).*

*[மொலு → மொது. மொதுமொதுவெனல் = திரளுதற் குறிப்பு. மொது → மொத்து–, (வே.க.4,49)]*

**மொத்து[3]** *mottu,* பெ.(n.) வலுத்த அடி; stroke, blow. *"மோதுதிரையான் மொத்துண்டு" (சிலப். 7, பாடல் 7).*

*[முது → மொது → மொத்து]*

**மொத்து[4]** *mottu,* பெ.(n.) 1. தடித்த–வன்–வள்–து; stout fellow. 2. மூடத்தனமான வன்–வள்–து; dullard, idiot. 3. சுறு சுறுப்பில்லாத வன்–வள்–து (கொ.வ.); lazy person or animal.

க. மொத்த; தெ. மொத்து.

*[மொது → மொத்து. (வே.க.4,49)]*

**மொத்துப்பிண்டம்** *mottu-p-pindam,* பெ.(n.) மொத்து[3] பார்க்க; see *mottu*[3].

*[மொத்து + பிண்டம். பிள் → பிண் → பிண்டு → பிண்டம்.]*

**மொத்துலவங்கப்பட்டை** *mottu-lavanga-p-pattai,* பெ.(n.) பெரிய கருவா (லவங்க)ப் பட்டை; thick variety of cinnamon bark.

*[மொத்து + லவங்கம் + பட்டை]*

**Skt.** *lavanga* > த. லவங்கம்.

**மொத்தை[1]** *mottai,* பெ.(n.) 1. உருண்டை (வின்.); ball, round lump. *'மொத்தைச் சோற்றுக்கு மேளம் அடிக்கிறான்' (பழ.).* 2. பருமன் (யாழ்.அக.); bulkiness, stoutness.

க., பட. முத்தெ; தெ. முத்த.

*[மொள் → மொத்து = திரட்சி, திரண்டது. மொத்து → மொத்தம். மொத்து → மொத்தை = திரளை (மு.தா. 210)]*

**மொத்தை[2]** *mottai,* பெ.(n.) மூடப்பெண் (வின்.); ignorant woman.

க. மொத்தி.

*[மொத்து → மொத்தை]*

**மொத்தை[3]** *mottai,* பெ.(n.) ஆடு; goat.

*[மொள் → மொத்து = திரட்சி, திரண்டது. மொத்து → மொத்தை = திரண்ட விலங்கு]*

**மொத்தைப்பிண்டம்** *mottai-p-pindam,* பெ.(n.) உருத்திரிந்து தசைத் திரட்சியாகத் தோலால் மூடிக் காணப்படும் கரு; foetus reduced to a shapeless mass of flesh covered with skin.

*[மொத்தை + பிண்டம். புள் → (பிள்) → பிண்டு → பிண்டம்.]*

**மொத்தையுரு** *mottai-y-uru,* பெ.(n.) நெட்டுரு (இ.வ.); learning by rote. *'மொத்தையுருப் போட்டுத் தேறிவிட்டான்' (உ.வ.).*

*[மொத்தை + உரு]*

**மொதிரகண்ணி** *modira-kanni,* பெ.(n.) மோதிரக்கண்ணி (இலத்.); climbing flax.

*[மோதிரக்கண்ணி → மொதிரகண்ணி]*

**மொதுமொதுவெனல்** *modumoduvenal,* பெ.(n.) திரளுதற் குறிப்பு; onom. expr. signifying crowding together. *'மொது மொதுவென்று மக்கள் குவிந்தார்கள்' (உ.வ.).* 2. கொழுத்து வளர்தற் குறிப்பு; onom. expr. signifying luxuriance in growth.

*[மொலு → மொது. மொது + மொது + எனல்.]*

**மொதுமொதெனல்** *modu-modenal,* பெ.(n.) 1. விழுங்கல் அல்லது உறிஞ்சல் ஒலிக்குறிப்பு (வின்.); onom. expr. signifying sound of swallowing or sucking in liquid. 2. திரளுதற்குறிப்பு; onom. expr. signifying crowding together. *'மொதுமொதென்று சனங்கள் குவிந்தார்கள்'.* 3. கொழுத்து வளர்தற் குறிப்பு; onom. expr. signifying luxuriance in growth.

*[மொதுமொதுவெனல் → மொதுமொதெனல் (வே.க.4,49)]*

**மொந்தணி** *montani,* பெ.(n.) மரத்தின் கணு (யாழ்ப்.); protuberance or knot in a tree. 2. மொத்தை[1] பார்க்க (யாழ்.அக.); see *mottai*[1].

*[மொத்து → மொந்து → மொந்தணி]*

**மொந்தணியன்** *mondaṉiyaṉ,* பெ.(n.) 1. உருண்டையானது; anything in round lump ball. 2. பருத்தது; anything bulky.

*[மொந்தணி → மொந்தணியன்]*

**மொந்தன்** *mondaṉ,* பெ.(n.) 1. தடித்த தோலையுடைய ஒருவகை வாழைப்பழம் (பதார்த்த. 728); thick-skinned plantain fruit, abyssinian banana. 2. ஒருவகை (திருவித்தி)க் கடுக்காய்; a variety of gallnut.

தெ. பொந்த.

*[முரு → மொக்கு → மொக்கை = பெரியது. முது → மொது → மொத்து → மொந்து → மொந்தன் = பெருவாழை (மு.தா.216). கதலிக்கு எதிரானது (வே.க.4, 50)]*

**மொந்தன்பழம்** *mondaṉ-paḻam,* பெ.(n.) மொந்தன் 1 பார்க்க; see *mondaṉ1.*

*[மொந்தன் + பழம்]*

**மொந்தின்கடுக்காய்** *mondiṉ-kaḍukkāy,* பெ.(n.) மொந்தன் 2 பார்க்க; see *mondaṉ 2.*

*[மொந்தின் + கடுக்காய்]*

**மொந்தை**[1] *mondai,* பெ.(n.) 1. சிறு பானை போன்ற மண்பாண்டம்; a small earthern vessel used mostly in tapping palmyra sap etc. *"நீர் மொள்ள மொந்தைக்கும் வழியில்லை"* (அருட்பா. v. கந்தர்சரண. தனிப்பா. 2). *'மோருக்குப் போய் மொந்தையை ஒளிப்பான் ஏன்?'* (பழ.). 2. சிறு மரப்பாண்ட வகை; a small wooden vessel. 3. சிறு ஏனம் (இ.வ.); a small vessel. 4. ஒரு கட்பறை வகை (பிங்.); a drum with one face.

ம. மொந்த; க. முந்தெ; தெ. முந்த.

*[முள் → முழு → (முகு) → முக. முகத்தல் = மொள்ளுதல், மொண்டளத்தல். முக → முகவை. முல் → (முழை) → மூழை = அகப்பை. மொள் → மொண்டை → மண்டை = நீர்முகக்குங்கலம், இரப்போர்கலம், அது போன்ற தலையோடு, தலையின் மேற்பகுதி, மண்டை போன்ற தோற்கருவி. மொள் → மொண்டை → மொந்தை = கள் முகக்குங்கலம், மொந்தை போன்ற தோற்கருவி (இசை.) (மு.தா.289)]*

**மொந்தை**[2] *mondai,* பெ.(n.) 1. பருத்தது; that which is stout or big. 2. திரண்டது; that which is round, lump.

*[மொள் → மொத்து = திரட்சி, திரண்டது. மொத்து → மொத்தம். மொத்து → மொத்தை = திரளை. மொத்தை → மொந்தை (மு.தா.210)]*

**மொந்தையுரு** *mondai-y-uru,* பெ.(n.) மொத்தையுரு பார்க்க (கொ.வ.); see *mottai-y-uru.*

*[மொத்தையுரு → மொந்தையுரு (வே.க.4,50)]*

**மொப்படி-த்தல்** *moppaḍi-,* 4 செ.கு.வி. (v.i.) வெடிநாற்றம் வீசுதல் (வின்.); to emit a rancid smell.

*[மொப்பு + அடி]*

**மொப்பு** *moppu,* பெ.(n.) 1. வெடிநாற்றம் (வின்.); rancid smell, as of sour milk or putrid meat. 2. குட்டி பாலைக்குடியாதபடி ஆட்டின் மடியில் சுற்றிவைக்குந் துணி (சங்.அக.); piece of cloth tied over the she-goat's udder to prevent its kid from sucking the milk.

*[மோ → மோப்பு → மொப்பு]*

**மொய்[1]–த்தல்** *moy-*, 11. செ.கு.வி. (v.i.) 1. சுற்றிச் சூழ்தல் அல்லது சூழ்ந்திருத்தல், நெருங்குதல்; to crowd, press, throng, swarm, as flies, bees, ants. *"வானோர் மொய்ப்ப" (புறநா. 13), 'ஈக்கள் மொய்த்த பண்டங்களை வாங்காதீர்கள்' (உ.வ.).* 2. மேற்பரவுதல் (வின்.); to spread, [redacted] an eruption. *'கரப்பான் மொய்க்கிறது'.* 3. இருத்தல் (அக.நி.); to abide in.

க. முசுரு.

*[மூழ் → மூடு → மூடி. மூடு → முடம் → மோடம். மூடு = அறிவிலி. மூடம் → மூடன். மூழ் → மூய். மூய்தல் = மூடுதல், வாய்மூடி எச்சில் உமிழ்தல். மூய் → மொய். மொய்த்தல் = மூடுதல் (மு.தா. 190)]*

**மொய்[2]–த்தல்** *moy-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. நெருங்கிச் சுற்றுதல்; to crowd round, swarm round. 2. தொல்லைப் படுத்துதல்; to annoy, tease. 3. மூடுதல்; to cover, to enclose.

*[மூய் → மொய். மொய்த்தல் = மூடுதல். (மு.தா.190)]*

**மொய்[3]–த்தல்** *moy-*, 4 செ.கு.வி. (v.i.) இறுகுதல்; to harden, as land dried by the sun.

*[முள் → முறு → முறுகு → முறுகல் = சூட்டினால் இறுகியது. முள் → (மொள்) → மொய். மொய்த்தல் = இறுகுதல் (மு.தா.222)]*

**மொய்[4]–த்தல்** *moy-*, 11 செ.குன்றாவி. (v.t.) கொடுத்தல் (அக.நி.); to give, bestow.

*[மொழிதல் = சொல்லுதல். மொழிந்து கொடுத்தல் = வாயால் சொல்லிப் பிறருக்குக் கொடுத்தல். மொழிதல் சொல்லிக் கொடுத்தல். மொழி → மொயி → மொய்]*

**மொய்[5]** *moy*, பெ.(n.) 1. நெருக்கம்; press, throng, swarm. *"மொய் கொண்மாக்கள்" (மணிமே. 19, 136).* 2. கூட்டம் (பிங்.); company, assembly, crowd. 3. போர்; battle, war. *"மொய் தாங்கிய முழுவலித் தோள்" (பு.வெ. 8, 28).* 4. போர்க்களம்; battle-field. *"மொய்த் தலைதனில்....... முடுகினனே" (இரகு. திக்கு. 87).* 5. பகை; enemy, enmity. *"மொய்யிரிய" (பு.வெ. 3, 5).* 6. வண்டு (சூடா.); bee.

*[மூழ் → மூய். மூய்தல் → மூடுதல். மூய் → மொய் (மு.தா.190)]*

**மொய்[6]** *moy*. பெ.(n.) 1. இறுகுகை; closeness, tightness. *"மொய்வளம் பூத்த முயக்கம்" (பரிபா. 18, 18).* 2. பெருமை; greatness, excellence. *"மொய்சிதைக்கு மொற்றுமை யின்மை" (நான்மணி. 23).* 3. வலிமை (பிங்.); strength. *"மொய்வளஞ் செருக்கி" (பதிற்றுப். 49, 8).* 4. யானை (பிங்.); elephant.

*[முள் → (மொள்) → மொய். மொய்த்தல் = இறுகுதல் (மு.தா.222)]*

**மொய்[7]** *moy*, பெ.(n.) தாய் (அக.நி.); mother.

*[அம்மா → அம்மொய் → மொய் (கொ.வ.)]*

**மொய்[8]** *moy*, பெ.(n.) 1. மணவிழா முதலியவற்றில் வழங்கும் அன்பளிப்புப் பணம் (கொ.வ.); presents given on special occasions, as at a wedding. *'மொய்ப் பணம் ஆயிரம்தான் உள்ளது' (உ.வ.).* 2. நன் கொடை (மகமை) (இ.வ.); contribution, as to a charity.

க. முய்; படு. மொய்யி; து. முயி; கோத. மொய்.

*[முழி → மொழி. மொழிதல் = சொல்லுதல், செய்யும் அன்பளிப்பை மொழிந்து விடுதல், மொழிந்து செய்யும் அன்பளிப்பு, அன்பளிப்பு.]*

**மொய்⁹** *moy,* பெ.(n.) 1. அத்தி; fig tree. 2. ஆமை; tortoise. 3. யானை; elephant.




**மொய்¹⁰** *moy,* பெ.(n.) வண்டு; beetle.

*[மூழ் → மூய். மூய்தல் = மூடுதல். மூய் → மொய் (மு.தா.190). மொய் = (ஒன்றை) மொய்க்கும் உயிரி.]*

**மொய்க்கணக்கு** *moy-k-kaṇakku,* பெ.(n.) திருமணம் முதலியவற்றில் வழங்கும் நன்கொடைகளின் குறிப்பு; list of presents made as marriage or other special occasions.

*[மொய் + கணக்கு]*

**மொய்கதிர்** *moy-kadir,* பெ.(n.) 1. முலைக் காய் (நிகண்டு.); nipple of woman's breast, teat of animal. 2. முலை (சது.); breast, udder.

*[மொய் + கதிர்]*

**மொய்த்தாய்** *moy-t-tāy,* பெ.(n.) தாய் (யாழ்.அக.); mother.

*[மொய் = அம்மா. மொய் + தாய் – மொய்த்தாய் = அம்மாவாகிய தாய்]*

**மொய்தாய்** *moy-tāy,* பெ.(n.) மொய்த்தாய் பார்க்க (யாழ்.அக.); see *moy-t-tāy.*

*[மொய் = அம்மா. தாய் = அம்மா. மொய்தாய் மீமிசைச் சொல்]*

**மொய்ப்பணம்** *moy-p-paṇam,* பெ.(n.) மொய்⁶ பார்க்க; see *moy*⁶.

*[மொய் + பணம். படம் → பணம்]*

**மொய்ம்பன்** *moymbaṉ,* பெ.(n.) வீரன்; warrior. *"வாளி......... மொய்ம்ப ரகங்களைக் கிழித்து" (கம்பரா. முதற்போ. 145).*

*[மொய்ம்பு → மொய்ம்பன்]*

**மொய்ம்பு** *moymbu,* பெ.(n.) 1. வலிமை; strength, valour, prowess. *"முரண் சேர்ந்த மொய்ம்பி னவர்க்கும்" (குறள், 492).* 2. தோள்; shoulder. *"பூந்தாது மொய்ம்பின வாக" (கலித். 88).*

ம. முறிப்பு; க. முய், முயிவு, முயிபு, முடிபு; தெ. மூபு; து. முடு (தோள்பொருத்து); பட. முடு; கூ. மோபு.

*[முள் → முறு → முறுகு → முறுகல். முள் → (மொள்) → மொய். மொய்த்தல் = இறுகுதல். மொய் = இறுகுதல், வலிமை. மொய் → மொய்ம்பு – வலிமை, வலிமையைக் காட்டும் தோள்.]*

**மொய்யற்சன்னி** *moyyaṟ-caṉṉi,* பெ.(n.) மூடு இசிவு (சன்னி) நோய்வகை (யாழ்.அக.); catalepsy.

*[மொய் → மொய்ம்பு. மொய் → மொய்யல் + சன்னி]*

**மொய்யெழுத்து** *moy-y-eḻuttu,* பெ.(n.) அற ஆவணம் (யாழ்.அக.); deed of endowment for a charitable purpose.

*[மொய் + எழுத்து. பரிசாகக் கொடுக்கப்பட்ட மொய்யினைக் குறிக்கும் ஆவணம்]*

**மொய்யெழுது¹-தல்** *moy-y-eḻudu-,* 5 செ. குன்றாவி.(v.t.) 1. மணம் முதலியவற்றில் நன்கொடையளித்தல்; to give presents on marriage or other special occasions. 2. அற (தரும)த்திற்குச் சிறு தொகை உதவுதல் (வின்.); to subscribe small sums to a charity. 3. கொடுத்துத் திரும்பக் கிடையாதனவற்றைச் செலவாக எழுதுதல்; to write off as irrecoverable.

*[மொய் + எழுது-,]*

**மொய்யெழுது²-தல்** *moy-y-eḻudu-,* 5 செ.கு.வி. (v.i.) திருமணம் முதலியவற்றில் அளிக்கும் நன்கொடைகளைப் பதிவு செய்தல்; to make a list of presents given on marriage or other special occasions.

*[மொய் + எழுது-,]*

**மொய்யெனல்** *moy-y-eṉal,* பெ.(n.) 1. சோம்பற்குறிப்பு (சூடா.); slowness. 2. புளித்தற்குறிப்பு (கொ.வ.); sourness.

*[மொய் + எனல்]*

**மொயின்** *moyiṉ,* பெ.(n.) கோயிலுக்குக் கொடுக்கும் பணம் அல்லது பொருள்; a payment or contribution, as to a temple (R.T).

*[மொய் = அன்பளிப்பு. மொய் → மொயின்]*

**மொயினி** *moyiṉi,* பெ.(n.) மொயின் பார்க்க; see *moyiṉ* (R.T).

*[மொய் → மொயின் → மொயினி]*

**மொரசுபறையன்** *morašu-paṟaiyaṉ,* பெ.(n.) கன்னட நாட்டிலிருந்து தமிழ்நாடு புகுந்த பறையர் வகுப்பினர்; a division of the *Paṟaiya* caste. said to have migrated from Karnataka to the Tamil Country. (E.T.V, 80).

*[மொரசு + பறையன்]*

**மொரப்பூர்** *morappūr,* பெ.(n.) தர்மபுரி மாவட்டத்தில் அமைந்த ஊர்; a village in Dharmapuri dt.

*[முரம்பு = கன்னிலம் அல்லது சரள் நிலம் (சொ.க.66). முரம்பு → மொரம்பு + ஊர் = மொரம்பூர் → மொரப்பூர். முரம்பு என்று பிறவிடங்களிலும் ஊர்ப்பெயர் அமைந்துள்ளதைக் காண்க]*

**மொரமொர-த்தல்** *mora-mora-,* 11. செ.கு.வி. (v.i.) 1. முறுக்கா யொலித்தல்; to rustle. 2. முறமுற-த்தல் 1 பார்க்க; see *muṟa-muṟa-,1.* 3. முறமுற-த்தல் 2 பார்க்க; see *muṟa-muṟa-,* 2.

*[மொர + மொர-, ]*

**மொரமொரப்பு** *mora-morappu,* பெ.(n.) 1. முறுக்காயொலிக்கை; rustling. 2. முறமுறப்பு 1 பார்க்க; see *muṟa-muṟappu, 1.* 3. முறமுறப்பு 2 பார்க்க; see *muṟa-muṟappu, 2.*

*[மொரமொர → மொரமொரப்பு. 'பு' தொ.பெ.ஈறு]*

**மொரமொரெனல்** *moramoreṉal,* பெ.(n.) 1. முறுக்காய் ஒலித்தற் குறிப்பு; rustling. *2.* முரமுரெனல் பார்க்க் (சங்.அக.) ; see *mura-mureṉal.*

*[மொர + மொரெனல்-, ]*

**மொருமொரு-த்தல்** *moru-moru-,* 11. செ.கு.வி. (v.i.) 1. முணுமுணுத்தல்; to murmur, to grumble. 2. மொரமொர-த்தல் பார்க்க; see *mora-mora-.*

*[மொரு + மொரு-]*

**மொருமொரெனல்** *moru-morenal,* பெ.(n.) 1. மொரமொரெனல் பார்க்க (சங்.அக.); see *mora-morenal.* 2. முணுமுணுத்தற் குறிப்பு; onom. expr. of grumbling.

*[மொருமொரு + எனல்]*

**மொல்லமாறி** *mollamāri,* பெ.(n.) 1. முடிச் சவிழ்க்கி; pickpocket. 2. புரட்டன்; dishonest person, deceiver.

தெ. முல்லை மாரி.

*[முல்லை + மாறி. இல்லிருத்தல் முல்லை (தனிப்பா.) முல்லை கற்பொழுக்கத்தின் அடையாளம். முல்லை = கற்பு நெறி, ஒழுக்கம். முல்லைமாறி → மொல்லமாறி. மாறு → மாறி. 'இ' வினை முதலீறு. ஒ.நோ. கேட்புமாறி]*

**மொல்லு** *mollu,* பெ.(n.) சண்டைக்கு முன் கைகால்களைத் தட்டிச் செய்யும் ஆரவாரம் (வின்.); noise made with hands and feet, preparatory to a fight.

*[மொல் → மொல்லு]*

**மொல்லுமொல்லெனல்** *mollu-mollenal,* பெ.(n.) இரைச்சற் குறிப்பு (சங்.அக.); onom. expr. signifying noisy clamour.

*[மொல்லு + மொல்லெனல்]*

**மொல்லை** *mollai,* பெ.(n.) ஓரைக்கூட்டத்தில் முதலாவது மேழம் (மேடம்) (சூடா. உள். 9); aries of the zodiac.

*[முல் → முல்லை = குத்தகை. முல்லைக்காரன் = குத்தகைக்காரன். முல்லை → மொல்லை = மேழம் (பருத்த செம்மறியாட்டுக் கடா), மேழவோரை (வே.க. 4, 27)]*

**மொல்லையிற்போடு-தல்** *mollaiyir-pōdu-,* 19 செ.குன்றாவி. (v.t.) குடும்பப் பொதுச் செலவிற்குக் கொடுத்தல்; to pledge a property for common expenditure of a family.

*[முல் → முல்லை = குத்தகை. மொல்லை + இல் + போடு-,]*

**மொலு** *molu,* பெ.(n.) மொல்லு பார்க்க (யாழ்.அக.); see *mollu.*

*[மொல்லு → மொலு]*

**மொலுமொலு-த்தல்** *molu-molu-,*4 செ.கு.வி. (v.i.) 1. மொருமொரு-த்தல் 1 பார்க்க (சங்.அக.); see *morumoru-, 1.* 2. விடாது பேசுதல்; to chatter. 3. இரைதல்; to clamour.

*[முல் → முல்லை = குத்தகை, முல்லை → மொல்லை = பருத்த செம்மறியாட்டுக்கடா. மொல் → மொலு. மொலு + மொலு-,]*

**மொலுமொலெனல்** *molu-molenal,* பெ.(n.) 1. விடாது பேசற்குறிப்பு; chattering. 2. இரைச்சற் குறிப்பு; noisy clamour. 3. முணுமுணுத்தற் குறிப்பு; grumbling. 4. தினவெடுத்தற்குறிப்பு; itching sensation. *'சிரங்கு மொலுமொலென்று அரிக்கிறது'.* 5. சொறிதற் குறிப்பு (வின்.); scratching.

*[மொல் → மொலு. மொலுமொலு + எனல்]*

**மொலுமொலுவெனல்** *molu-molu-v-enal,* பெ.(n.) ஈக்கள் மொய்த்தற் குறிப்பு; onom. expr. signifying swamp of flies.

*[மொலுமொலு + எனல்]*

**மொலோரெனல்** *molōreṉal,* பெ.(n.) சிறு மீன் கூட்டம் நீர் மட்டத்தில் துள்ளிவரும் ஒலிக்குறிப்பு; onom. expr. signifying noise produced by small fishes at upper part of tank, sea etc.

*[மொலோர் + எனல்]*

**மொழச்சு-தல்** *molaccu-,* 5 செ.குன்றாவி. (v.t.) மழித்தல் (கொச்சை); to shave.

*[மொழு → மொழச்சு]*

**மொழி¹-தல்** *moḻi-,* [redacted] செ.குன்றாவி. (v.t.) சொல்லுதல்; to say, speak. *"மனத்தொடு வாய்மை மொழியின்" (குறள், 295).*

*[முள் → முளி → முழி → மொழி (வே.க.4,44). மொழிதல் சொற்றிருத்தமாகப் பேசுதல். (சொ.க.49)]*

**மொழி²** *moḻi,* பெ.(n.) 1. மணிக்கட்டு, முழங்கால், கணைக்கால் முதலியவற்றின் பொருத்து; joint, [redacted] of wrist, knee, ankle, etc. *'மொழி பிசகி விட்டது' (உ.வ.).* 2. மரஞ் செடி கொடிகளின் கணு; joint where a twig branches off from the stem. *"மொழியு மினியீர்...... மதுரக் கழைகாள்" (அழகர்கல. 67).*

*[முல் → முள் → முள்கு. முள்குதல் = முயங்குதல். முள் → முளி = உடல் மூட்டு, மரக்கணு, கணுக்கால். முழி → மொழி. (வே.க.4,44)]*

**மொழி³** *moḻi,* பெ.(n.) 1. சொல்; word. *"மறைமொழி தானே மந்திரமென்ப" (தொல். பொ. 481).* 2. கட்டுரை; saying, maxim. *"பழமொழி".* 3. பேசும் மொழி; language, speech. *"மொழி பெயர் தேஎத்த ராயினும்" (குறுந். 11).* 4. வாக்கு மூலம் (நாஞ்சி.), உறுதிமொழி; deposition, promise. *'மொழி தப்பினவன் வழி தப்பினவன்' (பழ.).* 5. பொருள்; meaning, sense. *"இனமொழி" (தொல். பொ. 480).*

கருத்து வெளிப்பாடே மொழி. ஒவ்வொரு மொழியின் அமைதியும் இலக்கணம், மரபு என இருவகைப்படும். ஒரு மொழியின் இலக்கணத் தையும் அதிலுள்ள நூல்களையும் எவரும் அம்மொழியை எழுதப்படிக்கத் தெரிந்தவுடன் தாமே கற்றுக்கொள்ளலாம். ஆனால் அம்மொழியின் மரபையும், அம்மொழியாரின் விதப்புக் கருத்து களையும் தாமே அறிய முடியாது (மு.தா.1 : 67).

மொழி தோன்றிய [redacted] :

இயற்கை விளைவையே முற்றுஞ் சார்ந்திருந்த அநாகரிக மாந்தர், மணவுறவும் மகவுவளர்ப்பும் பற்றி நிலையற்ற குடும்ப அளவான கூட்டுறவு பூண்டு வாழ்ந்து வந்தனர். அவர் கூடி வாழ்ந்த போது ஒருவர்க்கொருவர் தத்தம் கருத்தைப் புலப்படுத்த வேண்டியதாயிற்று. அதற்குக் கண்சாடை, முகக்குறிப்பு, சைகை, நடிப்பு, உடலசைவு முதலிய செய்கைகளையும், உணர்வொலி (Emotional Sound), ஒப்பொலி (Imitative Sounds), குறியொலி (Symbolic-Sounds), வாய்ச்செய்கையொலி (Gestigulatory Sounds), குழவி வளர்ப்பொலி (Nursery-Sounds), சுட்டொலி (Deictic Sounds), ஆகிய அறுவகையொலிகளையும், இயற்கையாகவும் செயற்கையாகவும் ஆண்டு வந்தனர்.

செயற்கை விளைவை அறிந்துகொண்ட முந்தியல் மாந்தர், பயிர்த்தொழிலைச் செய்தற்கும் தற்காப்பிற்கும் தத்தம் பிள்ளைகளுடனும், பேரப்பிள்ளைகளுடனும், கொட்பேரப்பிள்ளை களுடனும், கூட்டங்கூட்டமாக ஒவ்வோரிடத்தில் நிலைத்து வாழத் தொடங்கிய பின், நிலைத்த விரிவுபட்ட கூட்டுறவு ஏற்பட்டது. நாகரிகம் தோன்றி வளர்ந்தது. கருத்துக்கள் பல்கின. அவற்றைக் குறிக்கச் சொற்கள் வேண்டியிருந்தன. பழைய அறுவகை யொலிகளினின்றும் படிப்படியாய்ச் சொற்கள் பிறப்பிக்கப்பட்டன. சொற்கள் முறையே,

(1) அசைநிலை (Monosyllabic Stage),

(2) புணர்நிலை (Compounding Stage),
(3) பகுசொன்னிலை (Inflexional Stage),
(4) கொளுவுநிலை (Agglutinative Stage),
என்னும் நால்வகை நிலைகளையடைந்து நிறைவடிவுற்றன.

கருத்துகள் மேன்மேலும் புதிது புதிதாய்த் தோன்றத் தோன்றச் சொற்களும் ஆக்கப்பட்டுக் கொண்டே வந்ததினால், மொழியானது வளர்ச்சி யடைந்து கொண்டேயிருந்தது. பிற்கால மொழியை நோக்க முற்கால மொழிநிலை குறைபாடுள்ள தேனும், ஒரு குறிப்பிட்ட காலமொழிநிலையைத் தனிப்பட நோக்கும்போது, அது அக்காலத்திற்கேற்ப நிறைவுள்ளதாகவே யிருக்கும்.

குறிஞ்சி நிலத்தைவிட முல்லை நிலத்திலும், முல்லை நிலத்தைவிட மருத நிலத்திலும், உழவு சிறப்பாய்ச் செய்யப்பட்டது. உழவிற்குத் தக்க ஊர்ப்பெருக்கமும், ஊர்ப் பெருக்கத்திற்குத் தக்க நாகரிகமும், நாகரிகத்திற்குத் தக்க மொழி வளர்ச்சியும் ஏற்பட்டன.

குறிஞ்சியினின்று மாந்தர் பிற நிலங்கட்குச் செல்லுமுன்னரே, மொழிக்கு அடிப்படையான சொற்களெல்லாம் தோன்றிவிட்டன. பிற நிலங்களில், வெவ்வேறு பொருட்களையும் வினைகளையுங் குறித்தற்கு, வெவ்வேறு சொற்தொகுதிகள் எழுந்தன. பண்டமாற்றினாலும் ஆட்சி விரிவினாலும் திணைமயக்கம் ஏற்பட்டதினால், நானில அல்லது ஐந்திணைச் சொற்றொகுதிகளுஞ் சேர்ந்து வளமுள்ள ஒரு பெருமொழி தோன்றிற்று. இங்ஙனம் குமரிக்கண்டத்தில் தோன்றிய மொழியே தமிழாகும்.

[redacted] முதற் பெருமொழியாக்கம் மிக மெல்ல நடைபெற்றிருக்குமாதலானும், அதன் பின்னிலை களினும் முன்னிலைகள் அமைதற்கு நீண்ட காலஞ் சென்றிருக்கு மாதலானும், நிமிர்ந்த குரங்கு மாந்தன் (p.e.) காலம் கி.மு.500,000 என்று மாந்தநூல் வல்லார் கூறியிருத்தலானும், தமிழ்மொழி குறிப்பொலி நிலையினின்று நால்வகைச் சொன்னிலையும் அடைதற்கு, ஏறத்தாழ ஓரிலக்கம் ஆண்டுகள் சென்றிருத்தல் வேண்டும். அதன் திருந்திய மொழிநிலை கி.மு.25,000 ஆண்டுகட்கு முன்னரே ஏற்பட்டிருத்தல் வேண்டும்.

தமிழ் முதல் தாய்மொழியென்பதற்குக் காரணங்கள்

(1) மாந்தன் பிறந்தகமாகிய குமரிக்கண்டத்தில் தமிழ் தோன்றியுள்ளமை.

(2) இதுபோதுள்ள மொழிகளுள் தமிழ் மிகப் பழைமையான தாயிருத்தல்.

(3) தமிழ் எளிய வொலிகளைக் கொண்டிருத்தல்.

(4) தமிழிற் சிறப்புப்பொருள் தருஞ் சொற்கள் பிற மொழிகளிற் பொதுப்பொருள் தருதல்.
எ-டு. செப்பு (தெ.), தா(இலத்தீன்).

(5) தமிழ் இயற்கையான சொல்வளர்ச்சி யுடைமை (செயற்கையான சொல்வளர்ச்சியின்மை).

(6) ஆரிய சேமிய மொழிச் சொற்கள் பலவற்றின் வேரைத் தமிழ் தன்னகத்துக் கொண்டிருத்தல்.

(7) பல மொழிகளின் மூவிடப் பதிற்பெயர்கள் தமிழ்ப் பெயர்களைப் பெரிதுஞ் சிறிதும் ஒத்திருத்தல்.

(8) தாய்தந்தையரைக் குறிக்கும் தமிழ் முறைப் பெயர்கள், ஏறத்தாழ எல்லா மொழிகளிலும் திரிந்தும் திரியாதும் வழங்கிவருதல்.

(9) தமிழ்ச்சொற்கள் வழங்காப் பெருமொழி உல கத்திலின்மை.

(10) ஒரு தனி மொழிக்குரிய தோற்ற வளர்ச்சி முறைகளைத் தமிழே தெரிவித்தல்.

(11) சில பல இலக்கண நெறிமுறைகள் தமிழுக்கும் பிற மொழிகட்கும் பொதுவாயிருத்தல்.

(12) [redacted] மொழிகள் தமிழிலுள்ள ஒரு பொருட் பல சொற்களுள் ஒவ்வொன்றைத் தெரிந்து கொண்டிருத்தல்.
(எ-டு, இல் (தெலுங்கு), மனை (கன்னடம்), அகம் (கிரேக்கம்), குடி (பின்னியம்).

(13) பிறமொழிகட்குச் சிறப்பாகக் கூறப்படும் இயல்களின் மூலநிலைகள் தமிழிலிருத்தல். (எ-டு) ஆரிய மொழிகளின் அசையழுத்தமும் சித்திய மொழிகளின் உயிரிசைவு மாற்றமும் அமெரிக்க மொழிகளின் பல்தொகை நிலையும் போல்வன.

பெரும்பான் மொழிகள் தமிழை ஒவ்வாதிருத்தற்குக் காரணங்கள்

தமிழ் முதல் தாய்மொழியாயினும், பெரும்பான் மொழிகள் அதை ஒத்திருக்கவில்லை. அதற்குக் காரணங்களாவன:-

(1) குமரிக் கண்டத்தில் மொழிதோன்று முன்னமே, சில மாந்தர் கூட்டங்கள் வெவ்வேறு திசையிற் பிரிந்து சென்று, ஆங்காங்கு வெவ்வேறு முறையில் ஒவ்வொரு சிறு மொழி வளர்த்துக்கொண்டமை.

(2) தமிழின் நால்வகை நிலையிலும் மக்கள் குமரிக் கண்டத்திலிருந்து வெவ்வேறிடம் பிரிந்து சென்றமையும், அவர்கள் மொழிகள் பலவகையில் திரிந்து போனமையும்.

(3) குமரிக் கண்டத்திலிருந்து பிரிந்து சென்ற மக்கள், சென்ற தேயத்துச் சூழ்நிலைக்கேற்பப் புதுச் சொற்களை ஆக்கிக் கொண்டபின், இன்றியமையாத அடிப்படைச் சொற்கள் தவிர ஏனைய தமிழ்ச்சொற்களெல்லாம் வழக்கின்றி மறைந்து போனமை.

(4) ஏறத்தாழ ஐம்பான் சொல்லாலும் அறுபான் சொல்லாலும் தம் கருத்துக்களையெல்லாம் தெரிவிக்கும் அரை நாகரிக நாடோடிச் சிறு குல மாந்தர், அடிக்கடி தம் மொழியை அடியோடு மாற்றிக்கொண்டிருந்தமை.

(5) போராலும் வலக்கரத்தாலும் வெல்லப்பட்ட மக்கள், வென்ற மக்களின் மொழியை முற்றும் அல்லது பெரும்பாலும் மேற்கொண்டமை.

(6) மொழிகள் மேன்மேலுந் திரிந்துகொண்டே வந்தமை.

மொழிகள் மாந்தன் அமைப்பே

மொழிகள் என்றுமுள்ளவையென்றும், இறைவனால் படைக்கப்பட்டவை யென்றும், இயற்கையாய் அமைந்தவையென்றும்; சில மொழிகள் தேவமொழி யென்றும்; பல தவறான கருத்துகளை இன்றும் பல இந்தியர் கொண்டுள்ளனர்.

மொழிகளெல்லாம் படிப்படியாகவும் சிறிது சிறிதாகவும் மாந்தனால் வளர்க்கப்பெற்றவையே. அவற்றுள் ஒரு சில தனித்தனி யெழுந்த தனி மொழிகள்; ஏனைய இரண்டும் பலவும் கலந்த கலவை மொழிகள். உலகிலுள்ள மொழிகளெல்லாம் மக்கள் மொழிகளே.

மொழிகள் மாந்தன் அமைப்பே யென்பதற்குக் காரணங்களாவன:-

(1) மொழியில்லாத அநாகரிக மாந்தர் இன்றும் சில மலைகளிலும் காடுகளிலும் வாழ்ந்து வருதல்.

(2) மொழியுள்ள மக்களின் பிள்ளைகளெல்லாம், தம் பெற்றோர் மொழியை, அவரிடத்தும் பிறரிடத்தும் சிறிது சிறிதாய்த் தம் பிள்ளைப் பருவத்திற் கற்றே பேசப்பழகுதல்.

குழவிப் பருவத்திலேயே மக்கட் கூட்டத்தினின்று பிரிக்கப்பட்டு, பேச்சுக் கற்கும் வாய்ப்பு சிறிதுமில்லாமல் வளர்க்கப்படும் எந்த ஆடவனும் பெண்டும், ஒரு மொழியும் பேசாது ஊமையாய்த் தானிருக்க முடியும், பிறவிச் செவிடர் எல்லாரும் ஊமையரா யிருத்தலை நோக்குக.

(3) மொழிகள், அவற்றைப் பேசும் மக்களின் நாகரிக அளவிற்கேற்ப வளர்ச்சியடைந்திருத்தல்.

(4) இருமொழியும் பல மொழியும் கலந்து பல கலவை மொழிகள் ஒரு சில நூற்றாண்டுகட்கு முன் புதிதாய்த் தோன்றியிருத்தல்.

(5) பல மொழிகள் வரவர வளர்ச்சியடைந்து வருவது வரலாற்றாலறியப்படல்.

(6) மொழிகள் பலவாயிருத்தல்.

இறைவன் படைப்பாகவாவது இயற்கையமைப்பாகவாவது மொழியிருந்திருப்பின், ஒரேயினமான உலக மக்கட்கெல்லாம் ஒரே மொழியே யிருந்திருத்தல் வேண்டும்.

(7) கற்கப்படாத மொழிகள் ஒருவனுக்கு விளங்காமை.

மொழிகள் இறைவன் படைப்பாகவாவது

இயற்கை யமைப்பாகவாவது இருந்திருப்பின், எல்லாமொழியும் எல்லார்க்கும் இயல்பாகவே தெரிந்திருத்தல் வேண்டும்.

(8) இனத்தொடர்புள்ள மக்களின் மொழிகள் சொல்லிலும் இலக்கண நெறிமுறையிலும் பெரும்பாலும் ஒத்தும், அத் தொடர்பில்லா மக்களின் மொழிகள் அவ் விரண்டிலும் பெரும்பாலும் ஒவ்வாதும் இருத்தல்.

(9) இற்றைஞான்றும், புதுக்கருத்துகளைக் குறிக்கும் புதுச்சொற்கள், ஒவ்வொரு மொழியிலும் தோன்றிக் கொண்டும் சேர்க்கப்பட்டுக் கொண்டும் வருதல்.

கருத்துகளைக் குறிக்கும் ஒலிக்குறிகளே சொற்கள். கருத்துகள் வரவரப் பல்கி வருகின்றன, அநாகரிகக் காலத்தில் கருத்துகள் சில்கி யிருந்திருக்குமாதலின், அவற்றைக் குறிக்கும் சொற்களும் சில்கியே இருந்திருத்தல் வேண்டும்.

**மொழிவளர்ச்சி ஒரு திரிந்தமைவு (evolution)**

மக்கள் கற்றிருக்கும் ஒவ்வொரு கலையும், அதன் துவக்க நிலையிலிருந்து மெல்ல மெல்லத்திரிந்து வளர்ந்து நீண்ட காலத்திற்குப் பின் நிறைவடைந்ததேயன்றி, ஒரேயடியாய்த் தோன்றியதன்று, இதனை ஈரெடுத்துக் காட்டுகளால் விளக்குவாம்.

இதுபோது மக்கள் பயிலும் கலைகளுள் ஆசிரியப் பயிற்சியும் ஒன்றாம். ஆசிரியப் பயிற்சிப் பள்ளிகளும் கல்லூரிகளும் தோன்றுமுன், ஆசிரியத் தொழிலிற்புகும் ஒவ்வொருவரும் தத்தம் ஆசிரியர் தமக்குக் கற்பித்த முறையில் ஒரு கூற்றையன்றி வேறொன்றும் அறியாதவராயிருந்தனர். அதனால், அவரது ஊழிய முற்பகுதியில் மாணவருளங்கொளக் கற்பிக்கும் ஆற்றலற்றவராயிருந்தனர். தற்காலக் கற்பிப்பு முறையில் ஒரு பகுதியை அதாவது நுவற்சி நெறிமுறைகள் சிலவற்றைக் கண்டறிதற்கும், அவர்க்கு நீண்டகாலஞ் சென்றது. ஆகவே, அவருடைய பிற்கால மாணவரே அவர் கற்பிப்பால் பெரும்பயன் பெறமுடிந்தது. ஆயின், ஆசிரியப் பயிற்சி ஏற்பட்ட பின்போ, ஆசிரிய வூழியத்தை மேற்கொள்ள விரும்பும் ஒவ்வொரு மாணவரும், அவ்வூழியத்தைத் தொடங்குமுன்னரே, நுவற்சி நெறிமுறைகளெல்லாவற்றையும், ஆசிரியப் பயிற்சி வாயிலாய் ஒருங்கே அறிந்து கொள்கின்றனர். அந்நெறிமுறைகளெல்லாம் ஒருவராலேயே அல்லது ஒரே தலைமுறையில் கண்டுபிடிக்கப்பட்டவையல்ல. பல நூற்றாண்டுகளாக, பற்பல நுண்மாண் நுழைபுல ஆசிரியரால், ஒவ்வொன்றாகக் கண்டுபிடிக்கப்பட்ட நுவற்சிநெறிமுறைகளின் தொகுதியே இற்றை ஆசிரியப் பயிற்சியாகும்.

முதற்கால மாந்தர் உணவுபொருள்களைப் பச்சையாகவே உண்டுவந்தனர். அதன்பின் சுட்டுண்ணக் கற்றனர். அதன்பின் முறையே, அவித்துண்ணவும், உப்பிட்டவித் துண்ணவும், மசாலையென்னும் கறிச்சரக்குச் சேர்த்துக் குழம்பு கூட்டு சாறு முதலியன காய்ச்சவும், வறுவல், பொரியல், சுண்டல், புழுக்கல் முதலிய முறைகளைக் கையாளவும், அவற்றைப் பலகாரஞ் செய்யவும், நீண்ட நாட் பலகாரஞ் செய்யவும் கற்றனர். இவற்றிக்குச் சென்றகாலம் எத்துணையோ வூழிகளாகும். ஆயின், இன்றோ, பன்னீடூழிகளாகப் படிப்படியாய் வளர்ந்துவந்த மடைக் கலையை, ஒருவர் சின்னாளில் முற்றும் பயின்று கொள்கின்றார்.

இங்ஙனமே, மாந்தன் தோன்றியதிலிருந்து கழி பலவூழிகளாக வளர்க்கப்பட்ட கருத்தறிவிப்புக் கலையாகிய மொழியும், இன்று ஒவ்வொருவராலும் பெற்றோர் மற்றோர் வாயிலாகப் பிள்ளைப் பருவத்திற் கற்கப்படுகின்றது. ஆயின், இற்றை மொழிநிலை என்றும் இருந்திலது. முதலாவது, விலங்கும் பறவையும் போலப் பல்வேறு குறிப்பொலிகளாலேயே மாந்தர் தம் கருத்தைத் தெரிவித்து வந்தனர். பின்பு, அக்குறிப்பொலிகள் சொன்னிலை யெய்தின. அச்சொற்கள், முற்கூறியவாறு, முறையே அசைநிலை, புணர்நிலை, பகுசொன்னிலை, கொளுவுநிலை ஆகிய நால்வகை நிலைகளை அடைந்தன. அதன்பின், தனிச்சொல்லும் (Simple word), கூட்டுச்சொல்லும் (Compound word) ஆன சொற்களின் பெருக்கம் ஏற்பட்டு, மொழியானது

இற்றை நிலையடைந்தது. அங்குக் கூறப்பட்ட ஒவ்வொரு நிலைக்கும் ஒவ்வொரு பேரூழி சென்றதென்பதை அறிதல் வேண்டும்.

கி.மு. பத்தாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட தலைச் சங்கத்தமிழ் முத்தமிழாயிருந்ததனால், அம் முத்தமிழும் ஒன்று சேரற்கும், அவற்றுக்கு மூலமான இயற்றமிழின் இலக்கணம் அமைதற்கும், அவ்விலக்கணத்திற்கு மூலமான இலக்கியம் எழுதற்கும், அவ்விலக்கியத்தின் சிறந்த வடிவான செய்யுள் தோன்றற்கும், அச்செய்யுட்கு மூலமான உரைநடை அல்லது மொழி தோன்றற்கும், எத்துணையோ ஊழிகள் சென்றிருத்தல் வேண்டும்

தமிழ் அல்லது தமிழன் பிறந்தகம் குமரிக்கண்டமே என்பதற்குக் காரணங்கள்

(1) தமிழ் தொன்றுதொட்டுத் தென்னாட்டில் வழங்கிவரல்.

(2) தமிழ்நாட்டில் தெற்கே செல்லச் செல்லத் தமிழ் தூய்மையாகவும், வடக்கே செல்லச் செல்ல அது திரிந்தும் இருத்தல்.

(3) தமிழ்நாட்டையடுத்து வடக்கும் மேற்கும் தமிழின் திரிபான திராவிடமொழிகள் வழங்கல்.

(4) இந்தியாவில், வடக்கே செல்லச் செல்லத் திரவிட மொழிகள் திரிதல்.

(5) வட இந்தியாவில் திரவிட மொழிகளும் ஆரிய மொழிகளும் வழங்கல்.

(6) இந்தியாவிற்குப் புறம்பாகப் பெலுச்சித்தானத்திலன்றி வேறொரிடத்தும் திரவிடமொழி வழங்காமை.

(7) தமிழிலக்கிய மெல்லாம் தென்னாட்டிலேயே இயற்றப்பட்டிருத்தல்.

(8) வணிகத்தால் பிறநாடுகளினின்று வந்த கருப்பொருள்களன்றி, பண்டையிலக்கியத்திற் கூறப்பட்டுள்ள முதல் கருவுரியாகிய மூவகைப் பொருள்களும், தென்னாட்டிற்கே யுரியவை யாயிருத்தல்.

(9) பழம் பாண்டிநாடு குமரிக்கண்டப் பகுதியாகக் கூறப்பட்டிருத்தல்.

(10) தமிழ் ஒலிமுறைமை தென்னாட்டிற்கன்றி வேறொரு நாட்டிற்கும் ஏலாமை (மு.தா.முன். 21–31).

**மொழிக்கட்டு** *moḻi-k-kaṭṭu*, பெ.(n.) உடற் பொருத்திற் காணுந் திமிர் (மருத்.); stiffness of joints.

*[மொழி + கட்டு]*

**மொழிச்சாரியை** *moḻi-c-cāriyai*, பெ.(n.) இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட வெழுத்துகளால் ஆகிய சாரியை (நன். 252, மயிலை.); (Gram.) particle, augment consisting of two or more letters.

*[மொழி + சாரியை]*

**மொழிதடுமாறு-தல்** *moḻi-taḍumāṟu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. திக்கிப் பேசுதல் (யாழ்.அக.); to stammer. 2. வாய் குழறுதல்; to err, hesitate or stumble in reading, reciting, etc.,

*[மொழி + தடுமாறு-,]*

**மொழிதவறு-தல்** *moḻi-tavaṟu-*, 5 செ.கு.வி. (v.i.) மொழி பிசகு-தல் பார்க்க; see *moḻi-piśagu-*, *'மொழி தவறாதவன் வழி தவறாதவன்' (பழ.).*

*[மொழி + தவறு-,]*

**மொழிந்ததுமொழிவு** *moḻindadu-moḻivu*, பெ.(n.) முன்மொழிந்ததனையே பயனின்றிப் பின்னும் மொழிவதாகிய நூற்குற்றம் (தண்டி. 102); tautology, a defect in literary composition, one of ten *nūr-kuṟṟam*.

மறுவ. கூறியது கூறல்.

*[மொழிந்தது + மொழிவு]*

**மொழிநூல்** *moḻi-nūl*, பெ.(n.) மொழி வரலாற்றுக் கூறும் நூல் (பு.வ.); philology. *'மொழிநூலை உலகில் தோற்றுவித்தவர் குமரி நாட்டுத் தமிழிலக்கண நூலாரே என்பார் பாவாணர்'.*

*[மொழி + நூல்]*

மொழிநூல்

மொழிநூலாவது சொற்கள், சொல்லாக்க முறைகள், இலக்கண அமைதி முதலியனபற்றிப் பல மொழிகட்கிடையிலுள்ள தொடர்பை ஆராயுங் கலை.

மொழி நூல் முதலாவது கிரேக்கு. இலத்தீன் என்னும் மொழிகளைக் கற்குங் கல்வியாக, 18 ஆம் நூற்றாண்டில் மேனாடுகளில் தோன்றிற்று. பின்பு, ஆங்கிலேயரும் விடையூழியரும் (Missionaries) இந்தியாவிற்கு வந்து, சமற்கிருதத்திற்கும் கிரேக்க லத்தீன் மொழிகட்குமுள்ள நெருக்கத்தைக் கண்டுபிடித்த பின், ஐரோப்பாவில் ஆரிய மொழிகளைப் பற்றிச் சிறப்பாராய்ச்சி எழுந்தது. ஆரிய மொழிகளை யாராய்ந்தவர்களுள் கிரீம் (Grimm), வெர்ணெர் (Verner) என்ற இருவர் தலைசிறந்தவர். உலகத்தின் பல இடங்களுக்குச் சென்ற விடையூழியரும் வழிப்போக்கரும் அவ்வவ்விடத்து மொழிகளைக் கற்று, மேலை மொழிகளில் அவற்றின் இலக்கணங்களை வரைந்து வெளியிட்டதுமன்றி, இனமொழிகளை யெல்லாம் ஒப்பிட்டுப் பல குடும்பங் களாகவும் வகுத்துக் காட்டினர். ஒப்பியன் மொழி நூல்கலையே விடையூழியராலும் வழிப்போக்கராலும் தான் உருவாயிற்று என்று கூறினும் மிகையாகாது. பிற கலை யாராய்ச்சியாளரும் மொழிநூலுக்கு உதவியிருக்கின்றனர்.

பல நாட்டு மொழிகள் மேனாட்டு மொழிகளில் வரையப்பட்ட பின், மாக்கசு முல்லர் என்ற மாபெரும் புலவர், சென்ற நூற்றாண்டில், தம் வாழ்நாளை யெல்லாம் மொழிநூற் கல்விக்கே ஒப்புக்கொடுத்து, உலக மொழிகளிற் பெரும்பாலானவற்றை ஆராய்ந்து, தம் நுண்மாண் நுழைபுலத்தால் ஒப்பியன் மொழி நூலை உருவாக்கினார்.

மாக்கசு முல்லர் திராவிட மொழிகளைச் சரியாய் ஆராயாததாலும், அவற்றை வடமொழியின் கிளைகள் என்று தவறாக எண்ணியதாலும், திராவிடத்தின் உண்மையான இயல்புகளைக் கூறமுடியவில்லை. திராவிடம் வடமொழிச் சார்பற்றதென்றும், உலக முதன்மொழிக்கு மிக நெருங்கியதென்றும், வடசொல்லென மயங்கும் பல சொற்கள் தென்சொற்களேயென்றும், வட மொழியில் பல தமிழ்ச்சொற்கள் கலந்துள்ளன வென்றும், முதன்முதல் எடுத்துக்காட்டி, மொழிநூற் சான்றுகளால் நிறுவியவர் கால்டுவெல் (Caldwell) கண்காணிரே. திராவிட மொழிகள் மொத்தம் பன்னிரண்டென்பதும். அவற்றுள் ஆறு திருந்தினவும், ஆறு திருந்தாதனவுமாகும் என்பதும், பெலுச்சித்தானத்திலுள்ள பிராகுவி திராவிட மொழியேயென்பதம், இவருடைய கண்டுபிடிப்புகளே. திராவிடம் வடமொழிச் சார்பற்றது, வடமொழியில் பல திராவிடச் சொற்களுள்ளன என்னுங் கொள்கையில், இவருடன் ஒன்றுபட்டவர், இவர் தமிழைச் சிறப்பாயாராய்ந்ததுபோன்றே மலையாள மொழியைச் சிறப்பாயாராய்ந்தவர் டாக்டர் குண்டட் (Gundert) ஆவர். இவ் விருவர்க்கும் திராவிட வுலகம், விதப்பாய்த் தமிழுலகம் பட்டுள்ள கடன் மாரிக்குப் பட்டுள்ளதேயெனினும் பொருந்தும்.

கால்டுவெல், மாக்கசு முல்லர் என்ற இருவர் ஆராய்ச்சிகளே இந்நூலுக்கு முதற்காரணமாகும்.

மொழிநூற்கலைக்கு ஆங்கிலத்தில் முதலிலிருந்து வழங்கி வரும் பெயர்கள் 'Philology' (Gk. - L. philos, desire; logos, discourse), 'Glottology' (Gk, L glotta, tongue; logos, discourse) என்பன. இவற்றுள் முன்னையதே பெருவழக்கு. ஆனால், மாக்கசு முல்லர் 'Science of Language' என்று தாம் இட்ட பெயரையே சிறப்பாகக் கொண்டனர்.

மொழிநூலுக்கு ஆங்கிலத்தில் Linguistics, Linguistic Science என்றும் பெயருண்டு.

'Philology' என்னும் பெயர் விரும்பிக் கற்கப்படுவது என்னும் பொருளது. கிரேக்கும் இலத்தீனும், மேனாட்டாரால் இலக்கிய மொழிகளென விரும்பிக் கற்கப்பட்டதினால், இப்பெயர் தோன்றிற்று. தமிழில், முதன்முதல் தோன்றிய மொழிநூற் பனுவல், மாகறல் கார்த்திகேய முதலியார் 1913 ஆம் ஆண்டு வெளியிட்ட 'மொழிநூல்' ஆகும். 'மொழிநூல்' என்னும் குறியீடும் அவரதே. அதன் பின்னது டாக்டர் சுப்பிரமணிய சாத்திரியார் அவர்கள் எழுதி 1936–ல் வெளியிட்ட 'தமிழ் மொழிநூல்' ஆகும்.

அதன்பின்னது, கலைத்திறவோரும் (M.A.) சட்டத் திறவோரு (M.L.)மான கா. சுப்பிரமணியப் பிள்ளை அவர்கள் எழுதி, 1939ஆம் ஆண்டில் வெளிவந்த 'மொழிநூற் கொள்கையும் தமிழ்மொழி அமைப்பும்' என்பதாகும்.
(மு.தா.1.82–84).

மொழிப்பற்றாளர் *moḻi-p-paṟṟāḷar,* பெ.(n.) தாய்மொழியின் மேல் அக்கறை கொண்டவர்; language zealists. *'தமிழின் தூய்மைக்குத் தமிழ் மொழிப் பற்றாளரின் பங்கு பெரிது' (உ.வ.).*

*[மொழி + பற்றாளர்]*

மொழிப்பிசகு[1] *moḻi-p-pišagu,* பெ.(n.) சொல் மாறுகை (வாக்குத்தவறுகை); failure to keep one's word.

*[மொழி + பிசகு]*

மொழிப்பிசகு[2] *moḻi-p-pišagu,* பெ.(n.) உடற் பொருத்து இடம் விட்டு விலகுகை; dislocation of joints.

*[மொழிபிசகு → மொழிப்பிசகு]*

மொழிப்பொருள் *moḻi-p-poruḷ,* பெ.(n.) 1. சொற்கு ஏற்பட்ட பொருள்; significance or meaning of a word. *"மொழிப் பொருட் காரணம்" (தொல். சொல். 394).* 2. நிமித்தச் சொல்; word or utterance foreboding good or ill. *"நிமித்த மொழிப்பொரு டெய்வம்" (தொல். பொ. 36).* 3. மறைமொழி; mantra. *"மொழிப் பொருட் டெய்வம் வழித்துணை யாகென" (சிலப். 10, 100).*

*[மொழி + பொருள்]*

மொழிபிசகு[1]-தல் *moḻi-pišagu-,* 5 செ.கு.வி. (v.i.) வாக்குத் தவறுதல்; to fail in keeping one's word.

*[மொழி + பிசகு-,]*

மொழிபிசகு[2]-தல் *moḻi-pišagu-,* 5 செ.கு.வி. (v.i.) உடற்பொருத்து இடம் விட்டு விலகுதல்; to suffer dislocation in joints.

*[மொழி + பிசகு-,]*

மொழிபிறழ்[1]-தல் *moḻi-piṟaḻ-,* 3 செ.கு.வி. (v.i.) மொழி பிசகு[1]-தல் பார்க்க; see *moḻi-pišagu[1]-,*

*[மொழி + பிறழ்-,]*

மொழிபிறழ்[2]-தல் *moḻi-piṟaḻ-,* 3 செ.கு.வி. (v.i.) மொழிபிசகு[2]-தல் பார்க்க; see *moḻi-pišagu[2]-,*

*[மொழி + பிறழ்-,]*

மொழிபுணர்இயல்பு *moḻi-puṇar-iyalbu,* பெ.(n.) பொருள்கோள்; modes of construing verses.

*[மொழிபுணர் + இயல்பு]*

சொற்றொடரில் பொருள் நிலைக்கு ஏற்றபடி சொற்கள் சேரும் முறைமையினைத் தொல்காப்பியம் மொழி புணர் இயல்பு என்று குறிப்பிடுகிறது. இதனையே பிற்கால இலக்கணப் புலவர் யாற்று நீர், மொழி மாற்று, நிரனிறை, விற்பூட்டு, தாப்பிசை, அளைமறியாப்பு, கொண்டு கூட்டு, அடிமறி மாற்று என எண்வகையாகச் செய்யுட்குப் பொருள் கொள்ளும் முறையினைக் குறிப்பிடும் பொருள் கோள் என்று குறிக்கின்றனர்.

மொழிபெயர்-த்தல் *moḻi-peyar-,* 4 செ.குன்றாவி. (v.t.) நூல் முதலியவற்றை வேறு மொழியில் மொழிமாற்றம் செய்தல்; to interpret, translate. *"மொழிபெயர்த் ததர்ப்பட யாத்தல்" (தொல். பொ. 652).*

*[மொழி + பெயர்-,]*

**மொழிபெயர்தேசம்** *moḻipeyar-tēšam,* பெ.(n.) மொழிபெயர்தேம் பார்க்க; see *moḻi-peyar-tēm.*

*[மொழிபெயர் + தேசம்]*

**மொழிபெயர்தேம்** *moḻi-peyar-tēm,* பெ.(n.) வேற்றுமொழி வழங்கும் நாடு; foreign country, as the place where the language is different. *"மொழிபெயர்தே எத்தராயினும்" (குறுந். 11).*

*[மொழி + பெயர் + தேம். தேசம் → தேம்]*

**மொழிபெயர்தேயம்** *moḻipeyar-tēyam,* பெ.(n.) மொழிபெயர்தேம் பார்க்க; see *moḻi-peyar-tēm.*

*[மொழிபெயர் + தேயம்]*

**மொழிபெயர்ப்பு** *moḻi-peyarppu,* பெ.(n.) மொழிமாற்றம் செய்தல் (நன். 50); translation; interpretation in another language.

*[மொழி + பெயர்ப்பு. பெயர் → பெயர்ப்பு. 'பு' தொ.பெ.ஈறு]*

தொல்காப்பியர் நூல்களை முதல்நூல், வழிநூல் என இருவகைப்படுத்தி வழிநூல் 1. தொகுத்தல், 2. விரித்தல், 3. தொகைவிரி, 4. மொழிபெயர்ப்பு என நான்கு வகைப்படும் என்பர். வழிநூல் முறையினை நன்னூலார் யாப்பு என்ற சொல்லால் குறிப்பார். நன்னூலார் கோட்பாட்டின்படி நூல்யாப்பு நான்கு வகைப்படும். தொல்காப்பியர் கூறிய வழிநூல்வகை நான்கினையும் நன்னூலார் நூல்யாப்பு என்ற சொல்லால் குறித்துள்ளார்.

**மொழிமாற்று** *moḻi-māṟṟu,* பெ.(n.) பொருள் கோளெட்டனுள் ஏற்ற பொருளுக்கு இயையுமாறு மொழிகளை மாற்றிப் பொருள் கொள்ளும் முறை (நன். 413); (pros.) mode of contruing a verse in which the words have to be transposed for the ascertainment of its proper meaning, one of eight *poruḷ-kōḷ* (q.v.).

*[மொழி + மாற்று. மாறு → மாற்று. செய்யுளில் சொற்களை மாற்றிப் பொருள் செய்ய வேண்டிய நிலையில் சொற்கள் புணர்க்கப்பட்டிருப்பது மொழிமாற்று. எ-டு. சுரை யாழ அம்மி மிதப்ப.]*

**மொழிமாற்றுப்பொருள்கோல்** *moḻimāṟṟu-p-poruḷkōḷ,* பெ.(n.) மொழி மாற்று பார்க்க; see *moḻi-māṟṟu.*

*[மொழிமாற்று + பொருள்கோள்]*

**மொழிமாறாவோலை** *moḻi-māṟā-vōlai,* பெ.(n.) மாற்றுங் கருத்தில்லாத கட்டுப்பாடு உடைய ஆவணம்; (Legal.) deed whose terms cannot be revoked.

*[மொழி + மாறு + ஆ + ஓலை. 'ஆ' எ.ம. இடைநிலை]*

**மொழிமிரட்டி** *moḻi-miraṭṭi,* பெ.(n.) ஒருவகைப்பூடு; a herb.

*[மொழி + மிரட்டி]*

**மொழிமுதலெழுத்துகள்** *moḻimudal-eḻuttukaḷ,* பெ.(n.) சொல்லின் முதலில் வரும் எழுத்துகள்; initial letters.

*[மொழிமுதல் + எழுத்துகள். மொழி - சொல்]*

உயிரெழுத்து பன்னிரண்டும் க, ச, த, ந, ப, ம, வ, ய, ஞ ஆகிய ஒன்பது மெய்யெழுத்துகளுமாகி இருபத்தொன்று எழுத்துகள் மொழிமுதல் எழுத்துகள். நன்னூலார் இங் ஙனம், எங் ஙனம் முதலாய சொற்களை மனத்திற்கொண்டு ஙகரமும் மொழி முதலில் வரும் என்பார்.

மொழிமுறித்தான்காய்ச்சல் *moḻi-muṟittāṉ-kāyccal,* பெ.(n.) முடக்குக் காய்ச்சல்; dengue.

*[மொழி + முறித்தான் + காய்ச்சல். காய் → காய்ச்சல். 'சல்' தொ.பெ.ஈறு.]*

மொழிமை *moḻimai,* பெ.(n.) உண்மை, ஒழுக்கம் போன்றன பற்றி நன்கு அறியப்பட்ட சுருக்கமான கூற்று (பிங்.); proverb.

மறுவ. பழமொழி, சொலவடை, முதுமொழி.

*[மொழி → மொழிமை. 'மை' ப.பெ.ஈறு]*

மொழியன் *moḻiyaṉ,* பெ.(n.) பெரிய பேன் (யாழ்.அக.); large louse.

*[முழு → முழுமை = பருமை. முழா → மிழா = பருத்த ஆண்மான். முழா → முடா → மிடா = பெரு மண்பானை. முழு → மொழு → மொழுக்கு → மொழுக்கன் = தடித்தவன். மொழு → மொழியன் = பெரும் பேன் (வே.க. 4, 46, 47)]*

மொழியாக்கம் *moḻi-y-ākkam,* பெ.(n.) 1. மொழிபெயர்ப்பு பார்க்க; see *moḻi-peyarppu.* 2. ஒரு மொழியில் உள்ள இலக்கியம் முதலியவற்றை இன்னொரு மொழியில் அதன் பண்பாடு நாகரிகத்தை யொட்டி மாற்றி ஆக்கம் செய்தல்; transcreation.

*[மொழி + ஆக்கம். ஆகு (த.வி.) – ஆக்கு (பி.வி.) → ஆக்கம்]*

மொழியிடையெழுத்து *moḻi-y-iḍai-eḻuttu,* பெ.(n.) சொல்லின் நடுவில் வேற்றுநிலை மெய்ம்மயக்காகவும் உடனிலை மெய்ம் மயக்காகவும் வரக்கூடிய எழுத்துகள் (வின்.); (Gram.) letters capable of succeeding a consonant in the middle of a word.

*[மொழி + இடை + எழுத்து]*

மொழியியல் *moḻi-yiyal,* பெ.(n.) மொழியை ஆராயும் அறிவியற் புலம்; linguistics. *'சென்ற நூற்றாண்டில் மொழியியல் வியக்கத்தக்க வளர்ச்சியைக் கண்டது' (உ.வ.).*

*[மொழி + இயல்]*

வண்ணனை மொழியியல், ஒப்பீட்டு மொழியியல், வரலாற்று மொழியியல் என்று பகுத்துக் கொண்டு மொழியியல் மொழிகளைப் பாகுபடுத்தியும் ஒப்பிட்டும் ஆராய்கிறது. இத்துறை பிறதுறைகளுடன் சேர்ந்து கொண்டு குமுகாய மொழியியல், உளவியல் மொழியியல் என்றாற்போன்று நல்ல ஆய்வுப் பரப்பினைக் கொண்டுள்ளது.

மொழியிறுதி *moḻi-y-iṟudi,* பெ.(n.) மொழியீற்றெழுத்து பார்க்க (வின்.); see *moḻi-y-īṟṟeḻuttu.*

*[மொழி + இறுதி]*

மொழியீற்றெழுத்து *moḻi-y-īṟṟeḻuttu,* பெ.(n.) சொல்லின் முடிவில் வரும் எழுத்து (வின்.); (Gram.) final letter of a word.

*[மொழி + ஈற்று + எழுத்து. ஈறு → ஈற்று. எழு → எழுது → எழுத்து]*

அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஐ, ஒ, ஓ, ஔ ஆகிய பதினொரு உயிரெழுத்துகளும், ஞ், ண், ந், ம், ன், ய், ர், ல், வ், ழ், ள் ஆகிய பதினொரு மெய்யெழுத்துகளும் மொழியிறுதியில் வரும்.

மொழியீறு *moḻi-y-īṟu,* பெ.(n.) மொழி யீற்றெழுத்து பார்க்க (வின்.); see *moḻi-y-īṟṟeḻuttu.*

*[மொழி + ஈறு]*

**மொழியொலிக்குறிப்பு** *moḻi-y-oli-k-kuṟippu,* பெ.(n.) சொல்லின் அழுத்தமான பலுக்கம் (வின்.); tone, emphasis.

*[மொழி + ஒலி + குறிப்பு. குறி → குறிப்பு]*

**மொழியோசை** *moḻi-y-ōšai,* பெ.(n.) பலுக்கல் (உச்சரிப்பு) (வின்.); pronunciation.

*[மொழி + ஓசை]*

**மொழிவழக்கு** *moḻi-vaḻakku,* பெ.(n.) மொழியில் காணப்படும் வழக்குகள்; dialects.

*[மொழி + வழக்கு]*

ஒரு பெரு மொழியில் பல வழக்குகள் (Dialect) உண்டு. அவற்றை மொழிவழக்கெனலாம். அவை, இடவழக்கு (Local Dialect), திசைவழக்கு (Provincial Dialect), குலவழக்கு (Class Dialect), திணைவழக்கு (Regional Dialect) [illegible] நால்வகைப்படும். ஒரு மொழி நீடித்து வழங்குமாயின், முற்கால (Old) வழக்கு, இடைக்கால (Middle) வழக்கு, இக்கால (Modern) வழக்கு என முந்நிலைகளை யடைந்திருக்கும்.

ஒரு மொழி உயர்ந்ததும் தாழ்ந்ததுமான இருவழக்குகளை யுடையதாயிருப்பின், அவை முறையே உயர் (High), தாழ் (Low) என்னும் அடைகள்பெற்று, அம்மொழிப் பெயராற் குறிக்கப்படும் (கா: உயர்ஜெர்மன் – High German, தாழ் ஜெர்மன் – Low German). தமிழில் இவை செந்தமிழ் கொடுந்தமிழ் என வழங்கும்.

ஒரு மொழியில், எழுத்தில் வழங்கும் வழக்கு நூல்வழக்கு (Literary Dialect) என்றும், பேச்சில் வழங்கும் வழக்கு உலக வழக்கு (Colloquial Dialect) என்றும் கூறப்படும். (மு.தா.1:81)

**மொழுக்கட்டை** *moḻu-k-kaṭṭai,* பெ.(n.) தடித்த–வன்–வள்; stout man or woman.

*[முழு → மொழு → மொழுக்கு → மொழுக்கன் = தடித்தவன். மொழுக்கு → மொழுக்கட்டை. (வே.க.4,47)]*

**மொழுக்கம்மை** *moḻu-k-kammai,* பெ.(n.) ஒருவகை அம்மை நோய்; a kind of disease.

*[மொழுக்கு + அம்மை]*

**மொழுக்கன்**[1] *moḻu-k-kaṉ,* பெ.(n.) வேலைப்பாடில்லாத அணிகலன் (இ.வ.); plain jewel without elaborate or fine engraving of filigree work. 2. எளிய (இயல்பு) வேலை (யாழ்.அக.); plain workmanship.

*[முள் → (மொள்) → மொழுக்கு → மொழுக்கன். மழுங்கு → மழுங்கன் = வேலைப்பாடில்லாத அணி (மு.தா.101).]*

**மொழுக்கன்**[2] *moḻu-k-kaṉ,* பெ.(n.) தடித்தவன்; stout man.

*[முழா → முடா → மிடா = பெருமண்பானை. மிடாத்தவளை = பெருந்தவளை. முழு → மொழு → மொழுக்கு → மொழுக்கன். (வே.க.4,47)]*

**மொழுக்கன்**[3] *moḻu-k-kaṉ,* பெ.(n.) காய்ச்சல் கண்டு உடம்பு வீங்கி வலியுடன் வரும் ஒருவகை அம்மைநோய்; a kind of pox attended with moderate fever and pain all over the body with swelling.

**மொழுக்கன்பிரண்டை** *moḻukkaṉ-piraṇḍai,* பெ.(n.) ஒருவகைப் பிரண்டை; a variety of vitis guadrangularis.

*[மொழுக்கன் + பிரண்டை]*

**மொழுக்கன்மோதிரம்** *moḻukkaṉ-mōdiram,* பெ.(n.) பூவேலை முதலியன செய்யப்படாத விரலணி (வின்.); plain ring.

*[மொழுக்கன் + மோதிரம்]*

**மொழுக்கனோலை** *molukkaṉ-ōlai,* பெ.(n.) கல் வைத்து இழைக்காது தங்கத்திற் செய்த எளிய காதோலையணி (வின்.); woman's plain ear-ring made of gold and not set with gems.

*[மொழுக்கன் + ஓலை]*

**மொழுக்கு-தல்** *molukku-,* 5. செ.குன்றாவி. (v.t.) 1. மொழுக்குமரமடி-த்தல் பார்க்க (நாஞ்.); see *molukku-maram-aḍi-,* 2. மெழுகு-தல் பார்க்க; see *meluguu-,* *'தரையைச் சாணமிட்டு மொழுக்கு' (இ.வ.)*

*[முள் → (மொள்) → மொழு → மொழுக்கு]*

**மொழுக்குமரம்** *molukku-maram,* பெ.(n.) உழுத கழனியைச் சமப்படுத்தும் பலகை; board or roller for smoothing land newly ploughed, harrow, drag.

மறுவ. பரம்பு.

*[மொழுக்கு + மரம்]*


மொழுக்குமரம்

**மொழுக்குமரமடி-த்தல்** *molukku-maramaḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) உழுத பின் விதைத்தற்காகப் பரம்புப் பலகையால் நிலத்தைச் சமன் செய்தல்; to level ploughed land by a board or drag, for sowing.

மறுவ. பரம்படித்தல்.

*[மொழுக்கு + மரமடி-,]*

**மொழுக்கெனல்** *molu-k-keṉal,* பெ.(n.) 1. சடக்கென ஒடிகைக் குறிப்பு (சங்.அக.); breaking suddenly, as a dry branch. 2. எண்ணெய்ப் பசையாயிருத்தற் குறிப்பு; being greasy.

*[மொழுக்கு + எனல்]*

**மொழுக்கை** *molukkai,* பெ.(n.) கூர் மழுங்கிய தன்மை; boldness.

*[முழு → மொழு → மொழுக்கை (மு.தா.105)]*

**மொழுங்கன்** *moluṅgaṉ,* பெ.(n.) மொழுக்கன் பார்க்க (சங்.அக.); see *moluk-kaṉ.*

*[முள் → (மொள்) → மொழு → மொழுங்கு → மொழுங்கன்]*

**மொழுப்பு¹-தல்** *moluppu-,* 5 செ.குன்றாவி. (v.t.) காரியத்தை மழுப்புதல் (வின்.); to protract, as a business; to delay, put off on frivolous pretences; to evade.

*[முழு → மொழு → மொழுக்கை = மொட்டையான தன்மை. மொழு → மொழுப்பு = எதற்கும் பிடிப்புத் தராமல் வழுக்குதல், மழுப்புதல். மழுப்பு → மொழுப்பு என்றலுமாம்.]*

**மொழுப்பு²** *moluppu,* பெ.(n.) 1. கட்டு; tie, knot. *"சடைமொழுப் பவிழ்ந்து" (திருவிசைப். கருவூர். 8, 1).* 2. சோலை செறிந்த தேயம்; locality abounding in garden. *"சோலைசூழ் மொழுப்பில்" (திருவிசை. கருவூர். 1, 5).*

க. மொடுபு.

*[முழு → மொழு → மொழுக்கு → மொழுக்கன் = தடித்தவன். மொழுக்கு → மொழுக்கட்டை = தடித்த-வன்-வள். மொழு → மொழுப்பு = சோலை செறிந்த பைதிரம் (பிரதேசம்) (வே.க.4,46)]*

**மொழுமை** *molumai,* பெ.(n.) குங்கிலியம்; Indian dammerresin.

**மொழுமொழு-த்தல்** *molu-molu-,* 4 செ.கு.வி. (v.i.) கொழுகொழுப்பாயிருத்தல்; to be flabby.

*[முள் → (மொள்) → மொழு → மொழுமொழு. மொழுமொழுத்தல் = சதை தளர்தல் (மு.தா. 281)]*

**மொழுவீக்கம்** *molu-vikkam,* பெ.(n.) ஊதை நோய் (வாத) வீக்கம்; a rheumatic swelling.

*[மொழு + வீக்கம்]*

**மொள்(ளு)-தல்** *mol(lu)-,* 2 செ.குன்றாவி. (v.t.) நீர் முதலியன முகத்தல் (அக.நி.); to take in a vessel, as water. *"இன்ப மொண்டே யருந்தி யிளைப்பாளினேன்" (தாயு. பாயப்புலி. 27).*

- ம. முள்கெ.

*[முள் → முழு → (முகு) → முக. முகத்தல் = மொள்ளுதல், மொண்டளத்தல். முள் → (முழை) → மூழை = அகப்பை. முள் → மொள். மொள்ளுதல் = கலத்தை நீருட்புகுத்தி நீர் (முதலியன) கொள்ளுதல்(மு.தா.289)]*

**மொள்ளமாறி** *mollamāri,* பெ.(n.) மொல்லமாறி பார்க்க; see *molla-māri.*

*[முல்லைமாறி → மொல்லமாறி → மொள்ளமாறி]*

**மொளி** *moli,* பெ.(n.) எலும்பின் அசைவு; joints.

**மொளிபொருத்தல்** *moli-poruttal,* தொ.பெ. (vbl.n.) மூட்டு வீங்கல்; swellings of the joints.

*[மொளி + பொருத்தல்]*

**மொறமொறப்பு** *mora-morappu,* பெ.(n.) 1. தூய்மை; cleanliness. 2. சருச்சரை; roughness. 3. உலர்ச்சி; dryness.

*[முள் → முறு → முறுகு → முறுகல் = சுட்டினால் இறுகியது. முறு → முற → முறமுறப்பு = விறப்பு (மு.தா.222). முறமுறப்பு → மொறமொறப்பு]*

**மொறமொறெனல்** *mora-morenal,* பெ.(n.) மொரமொரெனல் பார்க்க; see *mora-morenal.*

*[மொரமொரெனல் → மொறமொறெனல்]*

**மொறுமொறு-த்தல்** *moru-moru-,* 11 செ.கு.வி. (v.i.) வெறுப்புக்குறிப்புக் காட்டுதல்; to grumble. *"சுரர் மொறுமொறுப்பப் போகந் துய்த்தனன்" (திருவானைக். கவுத. 102).*

*[மொறு + மொறு-.]*

**மொறுமொறெனல்** *moru-morenal,* பெ.(n.) மொரமொரெனல் பார்க்க (வின்.); see *mora-morenal.*

*[மொரமொரெனல் → மொறமொறெனல் → மொறுமொறெனல்]*

# மோ

**மோ¹** *mō,* பெ.(n.) தமிழ் நெடுங்கணக்கில் 'ம்' என்ற மெய்யெழுத்தும் 'ஓ' என்ற உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய் (அசை) யெழுத்து; the sylabic letter formed by adding the long vowel 'ō' to the consonant 'm'

*[ம் + ஓ]*

**மோ²** *mō,* இடை. (part.) முன்னிலையசைச் சொற்களுள் ஒன்று (தொல். சொல். 276); a verbal suffix of second pers. as *kēnmō.*

**மோ[3]-த்தல்** *mō-*, 12 செ.குன்றாவி. (v.t.) மூக்கால் நுகர்தல்; to smell. *"மோப்பக் குழையு மனிச்சம்" (குறள், 90). 'பழைய சோற்றை நாய் மோந்து பார்த்து விட்டுச் சாப்பிடாமல் ஓடிவிட்டது' (உ.வ.).*

க., பட. மூசு.

*[முகம் → முகர் = முகம், மூக்கு. முகர்தல் = மணமறிதல். முகர் → மோர் → மோ. மோத்தல் = மணமறிதல் (வே.க.4,4)]*

**மோ[4]-த்தல்** *mō-*, 12 செ.குன்றாவி. (v.t.) மொள்ளுதல் (தைலவ. தைல.); to take in a vessel, as water. 2. மேற்கொள்ளுதல்; to undertake. *"மோந்த போர்முகத்து" (உபதேசகா. சிவவிரத. 327).*

க., பட. மொகெ.

*[முழு → முகு → முக. முகத்தல் = நீரைக் குழித்தல் அல்லது துளைத்தல் போல மொள்ளுதல், நீர்ப்பொருளையுங் கூலப் பொருளையும் கலத்தால் அல்லது படியால் மொண்டளத்தல், தாங்கி யெடுத்தல். முக → மோ (வே.க.4,89)]*

**மோக்கட்டை** *mōkkaṭṭai*, பெ.(n.) வாயின் கீழ்ப்பகுதி; part of face below mouth, chin.

மறுவ. முகரைக்கட்டை, மோரைக்கட்டை.

*[முகவாய் → மோவாய். மோவாய்க்கட்டை → மோக்கட்டை].*

**மோக்களா** *mōkkaḷā*, பெ.(n.) 1. மகிழ்ச்சி ஆரவாரம்; joviality, conviviality. 2. கட்டுப்பாடில்லாமை (இ.வ.); freedom from restraint.

**மோகணத்தி** *mōgaṇatti*, பெ.(n.) மொந்தன் வாழை; thick-skinned plantain fruit.

**மோகந்திரிவாள்** *mōgantirivāḷ*, பெ.(n.) சார்வளை; a prostate plant.

**மோகநட்சத்திரம்** *mōganaṭcattiram*, பெ.(n.) மோகமீன் (விதான. குணா குண. 41, உரை) பார்க்க; [redacted] *mōgamīṉ.*

*[மோகம் + நட்சத்திரம்]*

**Skt.** *naksatra* > த. நட்சத்திரம்.

**மோகநூல்** *mōga-nūl*, பெ.(n.) 1. சமய எதிராளிகளை வெளியாக்குவதற்காகப் பொய்க் கொள்கைகளை மேற்கொண்டு கூறும் நூல்; book of false doctrines written to confound heretics and lead them astray. 2. இன்பநூல் (காமநூல்); treatise on erotics. *"முற்பருவப் பெண்கட்கு மோகநூல்" (பூவண. உலா, 447).*

*[மோகம் + நூல்]*

**மோகப்படைக்கலம்** *mōga-p-paḍaikkalam*, பெ.(n.) மயக்கத்தை உண்டாக்கும் அம்பு வகை (வின்.); a magic arrow that causes swooning.

*[மோகம் + படைக்கலம்]*

**மோகம்[1]** *mōgam*, பெ.(n.) 1. முருங்கை; horse-radish tree. 2. வாழை; plantain.



மோகம்[1]

**மோகம்²** *mōgam,* பெ.(n.) 1. விருப்பம்; love, affection. 2. பாலுணர்வு வேட்கை, காம மயக்கம்; fascination due to love. *'மோகம் முப்பது நாள் ஆசை அறுபது நாள்' (பழ.).* 3. விடுபட முடியாத விருப்பம்; craze, infatuation. *'மேல்நாட்டு மோகம் கொண்டு பலர் வெளிநாடுகள் செல்கின்றனர். திரைப்பட மோகம் யாரை விட்டது' (உ.வ.).* 4. மயக்கம் (மூர்ச்சை) (சூடா.); loss of consciousness, fainting. 5. மாயையால் நிகழும் மயக்கவுணர்ச்சி (சி.போ.பா. 2, 2); delusion of mind which prevents one from discerning the truth. 6. திகைப்பு; confusion, distraction. *"மோகமெங்கு முளவாக" (கம்பரா. நாகபாச. 84).* 7. மோகமீன் (விதான. குணாகுண. 41, உரை) பார்க்க; see *mōga-mīṉ.*

*[முகம் = மூக்கு. முகத்தில் மிக முன்னால் நீண்டிருப்பது மூக்காதலால், முகப்பெயர் மூக்கையுங் குறித்தது. முகம் → முக. முகத்தல் = மணத்தல், விரும்புதல். "மூர்க்கரை மூர்க்கர் முகப்பர்" (மூதுரை). முக → மோ. மோத்தல் = முகர்தல் = விரும்புதல். மோ + கம் – மோகம் = விருப்பம், காதல், பெருங்காதல் (சு.வி.29). காதலால் ஏற்படும் மயக்கம், திகைப்பு]*

**மோகம்³** *mōgam,* பெ.(n.) மோர்; buttermilk. *"மோகமுறை யிணக்கம்" (அழகர்கல. 87).*

**மோகமீன்** *mōgamīṉ,* பெ.(n.) காரி (சனி) நிற்கும் விண்மீனிற்கு ஆறாவதும், பத்தாவதும், பதினோராவதும், இருபதாவது மாகிய விண்மீன்கள்; (Astrol.) the 6th, 10th, 11th and 20th naksatras counted from that occupied by saturn.

*[மோகம் + மீன்]*

**மோகர்** *mōgar,* பெ.(n.) 1. மோகமுடையவர் (சங்.அக.); infatuated persons. 2. சித்திரக் காரர் (சூடா.); painters, as appealing to the aesthetic sense by their art.

*[மோகம் → மோகர். 'ர்' ப.பா.ஈறு.]*

**மோகரம்** *mōgaram,* பெ.(n.) 1. பேராரவாரம்; roar. *"பன்றி பெரு மோகரத்தோடு" (பாரத. அருச்சுனன்றவ. 95).* 2. கொடுமை (யாழ்.அக.); vehemence, rage.

*[மோகனம் → மோகரம்]*

**மோகரா** *mōgarā,* பெ.(n.) பத்து அல்லது பதினைந்து ரூபாய் மதிப்புள்ள காசு (நாணய)வகை; gold coin, varying in value from 10 to 15 rupees.

**மோகரி¹-த்தல்** *mōgari-,* 11 செ.கு.வி. (v.i.) ஆரவாரித்தல்; to roar, to shout with excitement. *"வீமனு மோகரித் தவுணரைத் தடிந்து" (பாரத. வேத்திர. 63).*

**மோகரி²-த்தல்** *mōgari-,* 11 செ.கு.வி. (v.i.) மயங்குதல் (யாழ்.அக.); to be perplexed.

**மோகரி³** *mōgari,* பெ.(n.) ஒரு வகை மருந்து விதை (அசமதாகம்); a medicinal seed of ornum variety.

**மோகலிங்கம்** *mōgaliṅgam,* பெ.(n.) ஒரு வகை மரம்; a kind of tree.

**மோகலீலை** *mōga-līlai,* பெ.(n.) காம விருப்ப நடத்தை (வின்.); lascivious behaviour.

*[மோகம் + லீலை]*

**Skt.** *līla* > த. லீலை.

**மோகவிலை** *mōga-vilai,* பெ.(n.) விருப்பத்தின் பொருட்டு கொடுக்கும் அதிகவிலை; fancy price.

*[மோகம் + விலை]*

**மோகவுவமை** *mōga-v-uvamai,* பெ.(n.) பொருண் மேலுள்ள வேட்கையால் உவமானம் உவமேயங்களை மயங்கக் கூறும் உவமையணி வகை (தண்டி. 30, உரை); (Rhet.) figure of speech in which the *upamāṉan* and the *upamēyam* are confounded.

*[மோகம் + உவமை]*

**மோகன்** *mōgaṉ,* பெ.(n.) காமன் (பிங்.); *Kāma*, the god of love.

*[மோகம் = விருப்பம், காதல், பெருங்காதல். மோகன் = காதலையுண்டாக்கும் காமன் (சு.வி.29,30)]*

**மோகனக்கல்** *mōgaṉa-k-kal,* பெ.(n.) 1. பூசைப் பொருள்களை வைக்கும் சரக்கு (அர்த்த) மண்டபத்திலுள்ள கல் மேடை; stone platform in the artha *maṇḍabam*, on which the necessary articles for worship are kept. 2. முகனைக்கல்; carved stone -lintel projecting from a temple gate-way.

*[மோகனம் + கல்]*

**மோகனச்சுண்ணம்** *mōgaṉa-c-cuṇṇam,* பெ.(n.) மயக்கப் பொடி; magic powder used for fascinating a person. *"சிலை வேள்விட்ட மோகனச் சுண்ணம்" (பாரத. சம்பவ. 94).*

*[மோகனம் + சுண்ணம். சுள் → சுண் → சுண்ணம் = நீறு, சுண்ணாம்பு, நறுமணப்பொடி, பொடி.]*

**மோகனசாத்திரம்** *mōgaṉa-śāttiram,* பெ.(n.) மோகநூல் பார்க்க; see *mōga-nūl.*

*[மோகனம் + சாத்திரம்]*

**Skt.** *sāstra* > த. சாத்திரம்.

**மோகனநாட்டியம்** *mōgaṉa-nāṭṭiyam,* பெ.(n.) மகளிர் கூத்து (யாழ்.அக.); dancing by women.

*[மோகனம் + நாட்டியம்]*

**மோகனப்படை** *mōgaṉa-p-paḍai,* பெ.(n.) மயக்கத்தை உண்டாக்கும் அம்பு வகை (சங்.அக.); a magic arrow that causes swooning.

*[மோகனம் + படை]*

**மோகனம்** *mōgaṉam,* பெ.(n.) 1. மயக்க முண்டாக்குகை; bewildering, confusing. 2. மனமயக்கம்; confusion of mind, mental perturbation, giddiness. *"மோகனமின் முனி" (சேதுபு. வேதா. 11).* 3. எண்வகை செயலுள் (அட்டகருமத்துள்) ஒன்றும் அறுபத்து நாலு கலையுள் ஒன்றுமான பிறரை மயங்கச் செய்யும் கலை; magic art of fascinating a person, one of *aṣṭa* - karumam, q.v, also one of *arupattu-nālu kalai. "திடமுள மோகனமாட" (தனிப்பா. i, 235, 1).* 4. காமன் ஐங்கணைகளுள் மோகமுண்டாக்கும் அம்பு (யாழ்.அக.); one of the five arrows of *kāma* that makes a person infatuated. 5. ஐவகையம்பு (பஞ்சபாண)ச் செயல்களுள் ஒன்றான ஆசைமிகுகை (பிங்.); infatuation as the effect of *mōgaṉam*, one of *pañca-pāṇa-c-ceyal.* 6. ஓர் அராகம்; (Mus.) a specific melody type. 7. ஏமாற்றுகை (யாழ்.அக.); deceiving, cheating.

*[மோகம் → மோகி + அனம் = மோகனம் = பெருவிருப்பம், காதல், வசியம், மயக்குகை. (சு.வி.30) 'அனம்' ஓர் ஈறு.]*

**மோகனமாலை** *mōgaṉa-mālai,* பெ.(n.) பொன்னும் பவளமும் கோத்த மாலை வகை; a necklace of gold beads and corals. *"மோகனமாலைக் கிசைவாய் மல்லிகைப் பூமாலையிட்டே" (கொண்டல்விடு. 501).*

*[மோகனம் + மாலை]*

**மோகனலாடு** *mōgaṉalāḍu,* பெ.(n.) பண்ணிகார [redacted] (இக்.வ.); a kind of sweet meat.

*[மோகனம் + லாடு]*

**U.** *lāḍu* > த. லாடு.

**மோகனவித்தை** *mōgaṉa-vittai,* பெ.(n.) பிறரை மயங்கச் செய்யும் கலை (வின்.); the magic art of fascinating a person.

*[மோகனம் + வித்தை]*

விழி → விடி → வித். த. வித் > **Skt.** *vidyā* > த. வித்தை.

**மோகனாங்கனை** *mōgaṉāṅgaṉai,* பெ.(n.) அழகு முதலியவற்றால் கண்டோரை மயக்கும் பெண் (வின்.); fascinating woman.

*[மோகனம் → மோகனாங்கனை]*

**மோகனீயம்** *mōgaṉiyam,* பெ.(n.) எண் குற்றத்துள் ஆதனு (ஆன்மாவு)க்கு மயக்கத்தைச் செய்யுங்குற்றம் (பிங்.) (சிலப். 10, 177, உரை); the karma which bewilders all the faculties, one of *eṉ-kuṟṟam, q.v.*

**மோகனூர்** *mōgaṉūr,* பெ.(n.) சேலம் மாவட்டம் நாமக்கல் வட்டத்திலுள்ள ஊர்; a village in *Sēlam* dt., *Nāmakkal* taluk.

*[மோகனம் - ஒருவகைப்பண். மோகனம் → மோகனூர். இப்பண்ணின் வல்ல கலைஞர் இருந்த இடம். இனி மோகம் - கண்டாரைக் கவர்தல். மோகம் → மோகனூர் என்றுமாம்.]*

**மோகனை** *mōgaṉai,* பெ.(n.) மோகனம் 3 பார்க்க; see *mōgaṉam, 3. "மோகனை யென்பது முந்தி முயன்றாள்" (கம்பரா. அயோமுகி. 59).*

*[மோகனம் → மோகனை]*

**மோகா** *mōgā,* பெ.(n.) பாதிரி; a kind of tree.

**மோகாதி** *mōgādi,* பெ.(n.) காமம், வெகுளி, மயக்கம் என்னும் முக்குற்றங்கள் (யாழ்.அக.); the three defects or infirmities viz., *kāmam, veguḷi, mayakkam.*

*[மோகம் + ஆதி]*

**மோகாந்தகாரம்** *mōgānda-kāram,* பெ.(n.) மோகமாகிய இருள்; confusion of mind; mental darkness, [redacted] caused by sexual passion.

*[மோகம் + அந்தகாரம்]*

**Skt.** *andhakāra* > த. அந்தகாரம்.

**மோகான்** *mōgāṉ,* பெ.(n.) வெண்ணிறமுடைய கடல்மீன்வகை; white pomfret, deep neutral tint.



மோகரன்

**மோகி¹-த்தல்** *mōgi-,* 11 செ.கு.வி. (v.i.) 1. மனம் தடுமாறுதல் (விநாயகபு. 74, 218); to be confused, bewildered. 2. காமத்தால் மயங்குதல்; to be infatuated with love.

*[மோகம் → மோகி-,]*

**மோகி²** *mōgi,* பெ.(n.) கஞ்சா (தைலவ. தைல.); ganja plant, bhang.




**மோகி³** *mōgi,* பெ.(n.) கம்புகம் (அபின்) (நாமதீப. 393); opium.

**மோகிக்கப்பண்ணு-தல்** *mōgikka-p-paṇṇu-,* 12 செ.குன்றாவி.(v.t.) காமங் கொள்ளச் செய்தல் (வின்.); to infatuate.

*[மோகி → மோகிக்க + பண்ணு-,]*

**மோகிதம்** *mōgidam,* பெ.(n.) காமமயக்கம்; infatuation of love. *"மோகிதமான வெங்களை" (விநாயகபு. 82, 7).*

*[மோகி → மோகிதம்]*

**மோகிதன்** *mōgidaṉ,* பெ.(n.) காமவிருப்பம் கொள்வோன் (வின்.); love stricken man.

*[மோகி → மோகிதம் → மோகிதன்]*

**மோகிப்பி-த்தல்** *mōgippi-,* 11 செ.குன்றாவி. (v.t.) மோகிக்கப்பண்ணு-தல் பார்க்க; see *mōgikka-p-paṇṇu-,* *"எல்லாச் சகத்தையு மோகிப்பிக்கு மன்னவன்" (விநாயகபு. 74, 218).*

*[மோகி → மோகிப்பி-,]*

**மோகிரம்** *mōgiram,* பெ.(n.) மயக்கம்; mental delusrion.

**மோகினி** *mōgiṉi,* பெ.(n.) 1. மோகனாங் கனை பார்க்க; see *mōgaṉāṅgaṉai. "அடைய மோகினி களாயினர்கொல்" (தக்கயாகப். 87).* 2. திருமாலின் கண்டோரை மயங்கச் செய்யும் பெண்வடிவான தோற்றரவம்; incarnation of *Visṇu* as a fascinating woman. *"மோகினியாகிய நின்வடிவினைக் கண்டு" (பரிபா. 3, 33, உரை).* 3. தீயமாயை (அசுத்தமாயை); (Saiva.) impure *māyā. "பிரியா மோகினிப் பெரும் போகத்தை" (ஞானா. 1, 29).* 4. பெண் பேய்வகை; a class of demoness. *"மோகமோகினிகள் யோக யோகினிகள்" (தக்கயாகப். 593).*

*[மோகம் → மோகி + அனம் - மோகனம் = பெரு விருப்பம், காதல், வசியம், மயக்குகை, மோகனம் செய்யும் பேய் மோகினி. (சு.வி.30)]*

**மோகினிக்குள்மஞ்சினி** *mōgiṉikkuḷ-mañjiṉi,* பெ.(n.) புளிகறளை; a hairy creeper.

**மோகினிப்பணம்** *mōgiṉi-p-paṇam,* பெ.(n.) திருவிழாவில் தெய்வத்திற்குப் பெண் கோலஞ் செய்து எழுந்தருளிவிக்கும் போது கொடுக்கும் பணம் (வின்.); money offered to a god, when he is dressed in female attire and taken out in procession.

*[மோகினி + பணம். படம் → பணம்.]*

**மோகினிப்பிசாசு** *mōgiṉi-p-piśāśu,* பெ.(n.) மோகினி¹ 4 பார்க்க; see *mōgiṉi¹, 4.*

*[மோகினி + பிசாசு]*

**மோகை** *mōgai,* பெ.(n.) உருத்தோன்றாதப் பருப்பொருள் (இ.வ.); lump or mass, without any distinctive shape.

**மோங்கில்** *mōṅkil,* பெ.(n.) திமிங்கல வகை (தக்கயாகப். 384, உரை); a kind of whale.

**மோச்சரசம்** *mōccaraśam,* பெ.(n.) மோசைச்சாறு பார்க்க; see *mōśai-c-cāṟu.*

*[மோசைரசம் – மோச்சரசம்]*

**மோசக்காரன்** *mōśa-k-kāraṉ,* பெ.(n.) ஏய்ப்போன் (வஞ்சகன்); deceiver, a deceitful or treacherous man, a trickster.

க. மோசகார.

*[மோசம் + காரன்]*

**மோசக்காரி** *mōśakkāri,* பெ.(n.) ஏய்ப்பவள்; a deceiver, a deceitful or treacherous woman.

க. மோசகாதி

*[மோசம் + காரி]*

**மோசகம்[1]** *mōśagam,* பெ.(n.) 1. மோசம்[2] 2 பார்க்க (மூ.அ.); see *mōcam[2]* 2. 2. துறவு (யாழ்.அக.); asceticism.

**மோசகம்[2]** *mōśagam,* பெ.(n.) வாழை; plantain.

**மோசகன்[1]** *mōśagaṉ,* பெ.(n.) 1. விடுவிப்போன்; deliverer. 2. வெளி விடுவோன்; one who passes or lets out. *"நந்தனவனத்து மோசகனை மலமதனை" (சிவதரு. சுவர்க்கநரக. 175).* 3. துறவி (யாழ்.அக.); ascetic.

**மோசகன்[2]** *mōśagaṉ,* பெ.(n.) 1. திருடன் (சங்.அக.); thief. 2. தட்டான்; gold smith.

*[மோசம் → மோசகன். மோசம்செய்வோன்]*

**மோசகி** *mōśagi,* பெ.(n.) செடிவகை (கிலுகிலுப்பை) (மூ.அ.); rattlewort.

*'இச்செடியின் விதைகள் கிலுகிலுப்பையைப் போலாகும்'.*

**மோசடி** *mōśaḍi,* பெ.(n.) 1. சொந்த ஊதிய(லாப)த்துக்காகச் செய்யும், சட்டத்திற்குப் புறம்பான ஏமாற்றுச் செயல்; defrauding, cheating. *'சீட்டு நிறுவனம் நடத்தி மோசடி செய்தவர்கள் காவலரிடம் சரணடைந்தனர்'.* 2. பொய்யானது, கெட்ட எண்ணத்தோடு கூடியது; deception, fraud. *'முடிவளர மருத்துவம் செய்யப்படும் விளம்பரங்கள் யாவும் மோசடியானவை'.*

*[முள் → முய் → முசு → மோச → மோசம் = ஏய்ப்பு. மோசம் → மோசடி]*

**மோசநாசம்** *mōśa-nāśam,* பெ.(n.) ஏமாற்றுகையும் கேடுறுத்துகையும்; cheating and damaging.

*[மோசம் + நாசம்]*

**மோசம்[1]** *mōśam,* பெ.(n.) 1. பிறருக்குத் தீமை விளைவிப்பது, ஏய்ப்பு, வஞ்சனை; treachery, deceit, fraud. *'உயிர் போகும் அளவிற்கு ஒரு மோசமான செயல் நிகழ்ந்து விட்டது'.* 2. பேரிடர் (அபாயம்); danger, risk, detriment, accident. *'இவ்வாண்டு மழை மோசமான பாதிப்பை ஏற்படுத்தி விட்டது'*

*(உ.வ.).* 3. பிசகு (சங்.அக.); mistake, error. 4. தரம், ஒழுக்கம் முதலியவற்றில் குறைவு, தாழ்வு; bad in standard,ability, standard etc. *'பையன் இந்தத் தேர்வில் மிக மோசமான மதிப்பெண் எடுத்துள்ளான்' (உ.வ.).*

ம., க., தெ., பட. மோச.

இச்சொற்கு ஒருவேளை வடமொழி *mośa* மூலமாயிருக்கலாம் என்று செ.ப.க.அகரமுதலி குறிப்பிடுகிறது. வடமொழியில் அச்சொல்லிற்குத் திருட்டு, கொள்ளை என்பன போன்ற பொருள்கள் உள்ளனவே யன்றி தமிழில் உள்ளதுபோல் வஞ்சனை, பேரிடர், பிசகு என்னும் பொருள்கள் இல்லை. வடமொழி *mośa* திருடுதல், கொள்ளையடித்தல் என்னும் பொருளுள்ள *muś* என்னுடம் வேரினின்று பிறந்தது என்று மா.வி.அகரமுதலி குறிப்பிடுகிறது.

*[முல் – துளைத்தற் கருத்துவேர்.*
*முல் → முழு – முழைத்தல் = துளைத்தல்*
*முழைத்த வான்புழை (பாரத. காண்டவ. 17)*
*முழை–மூழை = L குழிந்த இடம், 2. உட்குழிந்த அகப்பை. "மூழை சுவையுணராதாங்கு" மூழை–மூசை = உட்கூடான மண்குகை, மாழையை உருக்கும் சிறுமண்கரு. வெளியில் உருவோடு இருந்து உள்ளே வெறுமைக் கூடாக இருக்கும் பொருளை ஏமாற்றுப் பொருளாகக் கருதுதல் இயல்பு. ஒ.நோ. பொள் = துளை, பொள் → பொய். பொய்தல் = துளைக்கப்படுதல். 'பொய்தகடொன்று பொருந்தி' (கம்பரா. பஞ்ச. 49). பொய்த்தல் = 1. உண்மையல்லாதவற்றைச் சொல்லுதல். 'தன்னெஞ் சறிவது பொய்யற்க' (குறள், 293) = 2 ஏமாற்றுதல், வஞ்சித்தல். 'நின்றோடிப் பொய்த்தல்' (நாலடி, 111). பொய்த்தல் = 1. செயல்தவறுதல். "விண்ணின்று பொய்ப்பின்" (குறள்,13). 2. கெடுதல்*
*"பொருளென்னும் பொய்யா விளக்கம் (குறள், 753)*
*பொள் → பொய்ச்சு = பழத்தின் குற்றம் (வி.)*
*சொத்தைப்பகுதி*
*மூசை = உட்கூடான, புறத்தில் நன்கு அமைந்ததான பொருளை ஏய்ப்புப் பொருளாகவும் ஏமாற்றுப் பொருளாகவும் பார்க்கிற இயல்பு மக்களுக்கு உண்டு. மூசைத்தங்கம் = குறை பாடுள்ள பொன், பத்தரை மாத்துத் தங்கத்திற்கு எதிரானது. மூசை → மோசம். வடமொழி வேர் mus என்பதற்கும் தமிழ் வேர் முல் மூலமாக இருப்பதைக் காணலாம்].*

**மோசம்[2]** *mōśam,* பெ.(n.) 1. முருங்கை பார்க்க; see *muruṅgai.* 2. வாழை; plantain.

**மோசம்செய்–தல்** *mōśam-sei-,* 1 செ.கு.வி. (v.i.) நம்பிக்கையைப் பொய்யாக்கும் வகையில் ஏமாற்றுதல், வஞ்சித்தல்; to cheat, let (one) down. *'என் நண்பனே இப்படி மோசம் செய்வான் என்று எதிர்ப்பார்க்க வில்லை'.*

[redacted] மோசகொளிசு.

*[மோசம் + செய்–,]*

**மோசம்போ–தல்** *mōśam-pō-,* [redacted] செ.கு.வி. (v.i.) 1. ஏமாற்றப்படுதல்; to be decieved. *'அவனிடம் நம்பிக்கை வைத்துப் பணம் தந்ததால் மோசம் போய்விட்டோம்' (உ.வ.).* 2. இடர்ப்பாட்டுக்குள்ளாதல்; to fall into danger. 3. பிசகுதல்; to go wrong, to be mistaken.

க. மோசகொள்ளு, மோசகோகு.

*[மோசம் + போ–,]*

**மோசமான** *mōśamāṉa,* பெ.எ. (adj.) 1. வஞ்சித்து ஒழுக்கிற, கீழறுப்பான; deceitful, treacherous. *'அவன் மிகவும்*

மோசமானவன்' (உ.வ.); 2. இடர் நிறைந்த; dangerous. 'மோசமான காலம்' (உ.வ.).

[மோசம் + ஆன]

**மோசனம்¹** *mōšaṉam,* பெ.(n.) நெல்வகை (யாழ்.அக.); a kind of paddy.

**மோசனம்²** *mōšaṉam,* பெ.(n.) விடுபடுகை (சூடா.); liberation, deliverance. "பாசமோசனந்தான் பண்ணும்படி" (சி.சி. 8, 3).

**மோசனம்³** *mōšaṉam,* பெ.(n.) கூரையின் நெடுவிட்டம்; purlin.

க. மொகசர.

[முகசரம் → மொகசரம் → மோசரம் → மோசனம்]

**மோசனி** *mōšaṉi,* பெ.(n.) இலவுமரவகை (சங்.அக.); red-flowered silk cotton tree.

[மோசை → மோசனி]

**மோசா** *mōšā,* பெ.(n.) கருநொச்சி; a black variety of nochi. 2. இலவம்பிசின்; gum of silk cotton tree.

[மோசை → மோசா]

**மோசாகம்** *mōšāgam,* பெ.(n.) வாழை; plantain.

**மோசாகிரீடம்** *mōšā-kirīḍam,* பெ.(n.) சந்தன மரம்; sandal wood tree.

**மோசாசம்** *mōšāšam,* பெ.(n.) பருத்திப் பிசின் (யாழ்.அக.); resin gathered from the cotton-plant.

**மோசாசனி** *mōšāšaṉi,* பெ.(n.) இலவு; silk cotton tree.




**மோசாசிகம்** *mōšāšigam,* பெ.(n.) மருளூமத்தை; a variety of *dhātura.*

**மோசாடம்** *mōšāḍam,* பெ.(n.) 1. சந்தனம் (மலை.); sandalwood. 2. வாழைப்பழம் (யாழ்.அக.); plantain fruit.

**மோசாபரணி** *mōšāparaṉi,* பெ.(n.) பருத்தி; cotton.

**மோசி¹-த்தல்** *mōši-,* 11 செ.கு.வி. (v.i.) பிசகிப்போதல் (சப்.); to err, to be misled.

[மோசம் → மோசி-,]

**மோசி²-த்தல்** *mōši-,* 11 செ.கு.வி. (v.i.) விட்டொழிதல்; to give up. "சங்கை மோசிப்பாயே" (கைவல். சந். 21).

[முசிதல் - அறுதல். முசி → மூசி → மோசி-,]

**மோசி³** *mōši,* பெ.(n.) பழைய புலவருள் ஒருவர்; an ancient poet. "மோசி பாடிய வாயும்" (புறநா. 158).

**மோசிகீரனார்** *mōšikīraṉār,* பெ.(n.) கழகக் (சங்க) காலப் புலவர்; a poet of sangam age.

[மோசி + கீரனார். மோசி - ஓர் ஊர். இன்றைய கருவூர்ப் பக்கத்திலுள்ள மோகூர் மோசியூரே எனக் கருத இடமுண்டு.]

**மோசிகை** *mōšikai,* பெ.(n.) உச்சிமுடி (யாழ்.அக.); tuft of hair on top of head.

**மோசிமல்லிகை** *mōši-mallikai,* பெ.(n.) காட்டு மல்லிகை (சிலப். 13, 156, உரை); wild jasmine.

*[மோசி + மல்லிகை]*




**மோசிரிகோபம்** *mōširi-kōbam,* பெ.(n.) வெதுப்படக்கி; a plant, ballota disticha.

மறுவ. எருமுட்டைப் பீநாறி, பேய்மிரட்டி.

**மோசை**[1] *mōšai,* பெ.(n.) 1. மோசையிலவம் (மூ.அ.) பார்க்க; see *mōšai-ilavam.* 2. நீலிச்செடி, அவுரி (மூ.அ.); Indian indigo. 3. வசம்பு (சங்.அக.); sweet flag. 4. வாழை (மூ.அ.); plantain.

**மோசை**[2] *mōšai,* பெ.(n.) விரலணிவகை; finger-ornament, probably of the shape of plantain flower. *"மகளிர் ..... மெல்விரல் மோசை போல"* (நற். 188), *"முற்றிவளை மோசை முதற்கங்காளன்"* (காளத். உலா, 341).

**மோசைச்சாறு** *mōšai-c-cāṟu,* பெ.(n.) இலவம் பிசின்; resin of silk cotton.

*[மோசை + சாறு]*

**மோசையிலவம்** *mōcai-y-ilavam,* பெ.(n.) இலவு (தைலவ. தைல.); red flowered silk-cotton tree.

*[மோசை + இலவம்]*

**மோட்டடைப்பன்** *mōṭṭaḍaippaṉ,* பெ.(n.) கூரை முகட்டின் இரு பக்கங்களிலும் வைக்கப்படுஞ் சித்திர வேலைப்பாடுடைய பலகையடைப்பு (நாஞ்.); a decorated piece of plank, placed on both sides of the ridge of a roof.

*[மோடு + அடைப்பன்]*

**மோட்டன்** *mōṭṭaṉ,* பெ.(n.) முரடன் (மூர்க்கன்); ruffian. *"சீதையை மோட்டன் வளைத்தொரு தேர்மிசை யேகொடு"* *(திருப்பு. 266).*

*[மோடு → மோட்டன்]*

**மோட்டா** *mōṭṭā,* பெ.அ. (adj.) 1. பெரிய; large, great, big. 2. கீழ்த்தரமான; shoddy, trashy. 3. தடித்த, முருடான; coarse, rough, unrefined. *'வெயில் காலத்தில் இப்படி ஒரு மோட்டாத் துணியில் சட்டை தைத்துப் போட்டிருக்கிறாயே?' (உ.வ.).*

*[மோடு → மோட்டா]*

**மோட்டாக்குறுவை** *mōṭṭā-k-kuṟuvai,* பெ.(n.) மூன்று மாதத்தில் விளையக் கூடிய குறுவை நெல்வகை (இ.வ.); a coarse paddy which matures in 3 months.

*[மோட்டா + குறுவை. குறு → குறுவை = குறுகிய காலத்தில் விளைச்சல் தரும் நெற்பயிர்.]*

**மோட்டில்** *mōṭṭil,* பெ.(n.) குமிழ்; a thorny tree.

**மோட்டிறால்** *mōṭṭiṟal,* பெ.(n.) இறால் மீன் வகை (வின்.); mantis-shrimp.

*[மோடு + இறால்]*


மோட்டிறால்

**மோட்டுத்தனம்** *mōṭṭu-t-taṉam,* பெ.(n.) முருட்டுத்தனம் (சங்.அக.); obstinacy.

*[மோடு + தனம்]*

**மோட்டுமீன்** *mōṭṭu-mīṉ,* பெ.(n.) விண்மீன்; star. *"மோட்டு மீன் குழாத்தின்" (சீவக. 2325).*

*[மோடு + மீன்]*

**மோட்டுவடிம்பு** *mōṭṭu-vaḍimbu,* பெ.(n.) மோட்டுவளை பார்க்க; see *mōṭṭu-vaḷai.* (C.G.)

*[மோட்டு + வடிம்பு]*

**மோட்டுவரி** *mōṭṭu-vari,* பெ.(n.) வீட்டுவரி (யாழ்ப்.); house-tax.

*[வீட்டுவரி → மீட்டுவரி → மோட்டுவரி]*

**மோட்டுவலயம்** *mōṭṭu-valayam,* பெ.(n.) மாலைவகை; a kind of garland. *"சூட்டுக் கத்திகையும் மோட்டு வலயமும் பிறவுமாகப் புனைந்து" (இறை. 2, பக். 42).*

*[மோட்டு + வலயம்]*

**மோட்டுவளை** *mōṭṭu-vaḷai,* பெ.(n.) உட்கூரையின் உச்சிப் பகுதி (இ.வ.); ridge of the inner roof. *'வீட்டுக்கு உள்ளேயே உட்கார்ந்து மோட்டுவளையைப் பார்த்தால் எப்படி முன்னேறமுடியும்' (உ.வ.).*

*[முகடு → மோடு → மோட்டு + வளை]*

**மோட்டுவளையோடு** *mōṭṭu-vaḷai-y-ōḍu,* பெ.(n.) மோட்டோடு பார்க்க (பு.வ.); see *mōṭṭōḍu.*

*[மோட்டு + வளையோடு]*

**மோட்டை** *mōṭṭai,* பெ.(n.) நீர் கசிந்து வெளியேறும்படி வயல் வரப்புத் துளைப் பட்டிருக்கை; porosity of the ridge of a field. *'மோட்டை போனால் கோட்டை போகும்' (நெல்லை).*

*[முள் → முண்டு. முண்டுதல் = பன்றி முகத்தாற் இளைத்தல் (மு.தா.257). முள் → முட்டு → (மொட்டை) → மோட்டை = துளை. இனி மோடு + ஓட்டை (மோட்டில் அமைந்த ஓட்டை) – மோட்டை என்றுமாம்.]*

**மோட்டோடு** *mōṭṭōḍu,* பெ.(n.) வீட்டு முகட்டிலிடும் வளைவோடு (கொ.வ.); ridge tile.

*[முகடு → மோடு + ஓடு]*

**மோட்டோலை** *mōṭṭōlai,* பெ.(n.) கூரையோடு வேயும் ஓலை (நாஞ்.); palm - leaf used to cover the ridge of a roof.

*[முகடு → மோடு + ஓலை]*

**மோடசகன்** *mōḍaśagaṉ,* பெ.(n.) கள்வன் (யாழ்.அக.); thief.

**மோடம்**[1] *mōḍam,* பெ.(n.) மந்தாரம்; dark, clouded sky.

ம. மூடம்; க., து., பட. மோட; தெ. மோடமு; குட. மோட.

*[முள் → மூழ். மூழ்த்தல் = மூடுதல். மூழ் → மூழல் = மூடி. மூழ் → மூடு → மூடி. மூடு → மூட்டம் → மோடம் = வானம் மூடிய மந்தாரம். (மு.தா.190)]*

**மோடம்**[2] *mōḍam,* பெ.(n.) மூடத்தனம் (வின்.); stupidity.

து. மோட.

*[முள் → மூழ். மூழ்த்தல் = மூடுதல். மூழ் → மூடு → மூடி. மூடு → மூடம் → மோடம் = வானம் மூடிய மந்தாரம், மந்தாரம் போன்ற மடமை. (மு.தா. 190).]*

**மோடமரம்** *mōḍa-maram,* பெ.(n.) மகிழ்[3] பார்க்க (இ.வ.); see *magiḻ*[3].

*[மகிழமரம் → மோடமரம்]*

**மோடன்**[1] *moḍaṉ* பெ.(n.) வளர்ந்தவன்; tall man. *"நெடுந்தாளினான் மோடன்" (சைவச. ஆசா. 13).*

*[மோடு → மோடன்]*

**மோடன்**[2] *mōḍaṉ,* பெ.(n.) மூடன்; foal, blockhead. *"மோடாதி மோடனை" (திருப்பு. 557).*

*[மோடம் = மடமை. மோடம் → மோடன். 'ன்'. ஆ.பா.ஈறு.]*

**மோடனம்** *mōḍaṉam,* பெ.(n.) 1. காற்று (யாழ்.அக.); wind. 2. அரைக்கை (யாழ்.அக.); rubbing, grinding. 3. அவமானம்; disgrace. *"கலுழனை மோடனம் விளைத்தமைபோல்" (குற்றா. தல. திருமண. 66).* 4. மாயக்கலை (வித்தை) (வின்.); magic, enchantment, as a craft. 5. மூடத்தனம் (வின்.); folly.

**மோடா** *mōḍā,* பெ.(n.) மேல்புறமும் கீழ் புறமும் வட்டமாகவும் இடைப்பகுதி குறுகியும் இருக்கும் உட்கார பயன்படுத்தும் பிரம்பால் பின்னப்பட்ட இருக்கை; a seat in the shape of an hour glass.

*[மோடு → மோடா]*




**மோடாசம்** *mōḍāśam,* பெ.(n.) வெண்பூசனி; ash pumpkin.




**மோடாமோடி** *mōḍa-mōḍi,* பெ.(n.) பகட்டு (ஆடம்பரம்) (வின்.); ostentation, pomp. *'மோடாமோடியாய்ச் செலவு செய்கிறது'.*

க. மோடாமோடி (அழகு, எழில்).

*[மோடி + மோடி – மோடிமோடி → மோடாமோடி]*

**மோடி[1]** *mōḍi,* பெ.(n.) 1. செருக்கு (வின்.); arrogance. 2. வகை (விதம்); way, manner, style, air. *"அப்போதிலொரு மோடியுமாய் வேறே முகமுமாய்" (பணவிடு. 195).* 3. பகட்டு (ஆடம்பரம்); grandeur, display. *'திருமணம் வெகுமோடி?'.* 4. உயர் தோற்றம் (வின்.); military bearing, as of [redacted] soldier, dignified bearing. 5. வேடிக்கைக் காட்சி; exhibition show. 6. பிணக்கு; dis agreement, discord. *'ஊடலாய்ப் போவாரை மோடி திருத்துவார்' (விறலிவிடு. 315).* 7. ஏய்ப்பு; deceit, fraud. 8. மொத்தம் (வின்.); wholesale, entirety. *'அவற்றை மோடியாய் வாங்கினாய்'.*

ம., க., தெ. மோடி.

*[முகடு = உச்சி, மேலிடம், கூரை. முகடு → மோடு. (மு.தா.68). மோடு → மோடி]*

**மோடி[2]** *mōḍi,* பெ.(n.) மந்திரத்தால் பொருளை மறைத்தலும் அதனைக் கண்டெடுத்தலுமாகிய உறழாட்டில் (விவாதத்தில்) மந்திரம் செய்வோர்களுக்கிடையே நிகழும் போட்டி; trial of magical powers between two enchanters, in which one hides some treasure from the other and challenges him to discover it by mantra.

ம., க., தெ. மோடி.

*[மகிடி → மோடி]*

**மோடி[3]** *mōḍi,* பெ.(n.) பாம்பாட்டியின் ஊது குழல் வகை; a kind of flute used by snake-charmers.

தெ. மகிடி.

*[மகிடி → மோடி]*

**மோடி[4]** *mōḍi,* பெ.(n.) 1. கண்ட திப்பிலி; dried knots of the creeper of long pepper. 2. திப்பிலி மூலம் (பைஷஜ. 85); long-pepper root.

க. மோடி. (திப்பிலியின் வேர்)

**மோடி[5]** *mōḍi,* பெ.(n.) மோடியெழுத்து பார்க்க (இ.வ.); see *mōḍi-y-eḻuttu.*

**மோடிக்காரன்** *mōḍi-k-kāraṉ,* பெ.(n.) 1. ஒப்பனைவிரும்பி (இ.வ.); stylish man. 2. பிணக்கங்காட்டுவோன் (வின்.); unfriendly man, man with forbidding countenance. 3. ஏய்ப்போன் (இ.வ.); deceitful person.

க. மோடிகார (மோடிக்கலை செய்பவன்).

*[மோடி + காரன்]*

**மோடிடு-தல்** *mōḍiḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. சோரத்திற் கருப்பமாதல் (இ.வ.); to become pregnant by illicit inter course. 2. ஆறு முதலியவற்றில் மணலால் மேடு உண்டாதல்; to form shoals, [redacted] in river.

*[மோடு + இடு-, 'இடு' து.வி.]*

**மோடிநாணயம்** *mōḍi-nāṇayam,* பெ.(n.) பொற்காசு (பொன்னாணய) வகை; a gold coin introduced by the Maharattas. *"மோடி நாணய விலையாலே" (திருப்பு. 572).*

*[மோடி + நாணயம்]*

**Skt.** *nāṇaka* > த. நாணயம்.

**மோடிப்புடவை** *mōḍi-p-puḍavai,* பெ.(n.) வெண்ணிறமுள்ள புடைவை வகை (வின்.); a kind of white-coloured saree.

*[மோடி + புடவை]*

**மோடிமோதிரம்** *mōḍi-mōdiram,* பெ.(n.) சொகுசான மோதிரம் (இ.வ.); finger-ring made of pinchbeck.

*[மோடி + மோதிரம். முகத்திரம் → மோதிரம்.]*

**மோடியெடு-த்தல்** *mōḍi-y-eḍu-,* 4 செ.கு.வி. (v.i.) 1. ஒருவனுக்குக் கேடு விளைப்பதற்காக அவன் நிலத்திற் புதைத்து வைக்கப்பட்ட பாழ்ப் (சூனிய) பொருளை எடுத்து விடுதல்; to discover and remove the articles of witchcraft buried in the ground belonging to a person with a view to cause him harm. 2. மறைமொழிக் கல்வியால் புதையலிடத்தைக் கண்டறிதல்; to search for hidden treasure by means of magic.

*[மோடி + எடு-,]*

**மோடியெழுத்து** *mōḍi-y-eḻuttu,* பெ.(n.) 1. மராத்திய எழுத்து வகை; a Maharatta script. 2. சேர்ந்தெழுது மெழுத்து; a running hand.

*[மோடி[4] + எழுத்து. எழு → எழுது → எழுத்து.]*

**மோடிவித்தை** *mōḍi-vittai,* பெ.(n.) மோடி[2] பார்க்க; see *mōḍi*[2].

து. மோடிவித்யெ.

*[மோடி + வித்தை]*

**மோடிவை-த்தல்** *mōḍi-vai-,* 4 செ.கு.வி. (v.i.) ஒருவனுக்குக் கேடு விளைப்பதற்காக அவன் நிலத்தில் பாழ்பொருளைப் புதைத்து வைத்தல்; to bury articles of witchcraft under the ground belonging to a person with a view to cause him harm.

*[மோடி + வை-,]*

**மோடு[1]** *mōḍu,* பெ.(n.) 1. உயர்ச்சி (பிங்.); height. *"மோடிசை வெற்பென" (அஷ்டப். திருவேங்கடத்தந். 44).* 2. மேடு (சூடா.); hill, eminence. 3. உட்கூரையின் உச்சிப் பகுதி, முகடு; top, as of a house. *'மறுமொழி (பதில்) சொல்லாமல் மோட்டைப் பார்த்துக் கொண்டு படுத்திருந்தால் என்ன பொருள் (அர்த்தம்)?' (உ.வ.).* 4. கூரையின் உச்சி; ridge of roof. 5. பருமை; largeness, stoutness. *"மோட்டிறா" (சீவக. 95), "மோட்டெருமை" (தமிழ்நா. 77).* 6. பெருமை; greatness. *"மோட்டெழி லிளமை நீங்க" (சீவக. 2799).* 7. உயர்நிலை; high position. *"மோட்டிடத்துஞ் செய்யார் முழுமக்கள்" (நாலடி. 358).* 8. வயிறு (பிங்.); belly, stomach. *"பிணர் மோட்டு......... பேய்மகள்" (திருமுரு. 50).* 9. கருப்பை; womb. 10. உடம்பு; body. *"மோட்டுடைப் போர்வையோடு" (ஆசாரக். 92).* 11. பிளப்பு (அக.நி.); cleavage, cleft.

*[முகடு = உச்சி, மேலிடம், கூரை. முகடு → மோடு (மு.தா.68)]*

**மோடு[2]** *mōḍu,* பெ.(n.) மடமை; stupidity, dullness of intellect, ignornce. *"புலவர் கவிதை கேட்டவர்க்கு வரிசைநல்காத மோட்டுலுத்தர்" (கடம்ப. பு. இலீலா. 127).*

மறுவ. முட்டத்தனம்.

*[முள் → மூழ். மூழ்த்தல் = மூடுதல். மூழ் → மூழல் = மூடி. மூழ் → மூடு → மூடி. மூடு → முடம் → மோடம் = வானம் மூடிய மந்தாரம், மந்தாரம் போன்ற மடமை. (மு.தா.190). மோடம் → மோடு]*

**மோடுகூடு-தல்** *mōḍu-kūḍu-,* 5 செ.கு.வி. (v.i.) மார்பெலும்பு முதலியன தெரிதல்; to be bony in the chest. *'இந்தக் குழந்தைக்கு மார்பு மோடு கூடியிருக்கிறது'.*

*[மோடு + கூடு–, முகடு → மோடு.]*

**மோடுபரு–த்தல்** *mōḍu-paru-,* 4 செ.கு.வி. (v.i.) பிடரியிற் சதை திரண்டிருத்தல்; to be strong and sinewy in the nape of the neck. *"ஊன் மல்கி மோடு பருப்பார்" (திவ். திருவாய். 3, 5, 7).*

*[மோடு + பரு–,]*

**மோடுபிரி–தல்** *mōḍu-piri-,* 3 செ.கு.வி. (v.i.) கருப்பமாதல் (இ.வ.); to become pregnant.

*[மோடு + பிரி–,]*

**மோண்டுகொளி** *mōṇḍukoḷi,* பெ.(n.) உறக்கத்தில் படுக்கும் பாயிலும் உடுக்கும் உடையிலும் மோண்டு கொள்ளும் பையன் அல்லது பெண்பிள்ளை; one who (a boy or girl) soils bed or dress by urine.

*[மோண்டு + கொளி, கொள்ளி → கொளி, மொள் → மோள். மோளுதல் = சிறுநீர் பாய்ச்சுதல் அல்லது கழித்தல். (வே.க.4,92,93)]*

**மோணம்** *mōṇam,* பெ.(n.) 1. பழத்தின் வற்றல்; dried fruit. 2. பாம்புப் பெட்டி; box for carrying snakes.




**மோத்திரம்** *mōttiram,* பெ.(n.) சிறுநீரகத்தில் உருவாவதும் பிறப்புறுப்புகள் வழியாக வெளியேறுவதுமான நீர்மம், மூத்திரம்; urine. மறுவ. சிறுநீர்.

*[மொள் → மோள். மோளுதல் = துளையினின்று சிறுநீர் பாய்ச்சுதல் அல்லது கழித்தல். மோள் → மோட்டிரம் → மோத்திரம் → மூத்திரம் (பாண்டி நாட்டு வழக்கு) (வே.க.4,92,93)]*

**மோத்தை[1]** *mōttai,* பெ.(n.) 1. செம்மறியாட்டுக் கடா; ram. *"மோத்தையுந் தகரு முதலும்" (தொல். பொ. 602).* 2. வெள்ளாட்டுக்கடா (சூடா.); goat. 3. மேழவேரை (சூடா. உள். 9); aries.

க. மேகெ (பெண்ணாடு); தெ. மேக (ஆட்டுக்கடா).

*[மொத்து → மொத்தை = திரளை. மொத்தை → மோத்தை = விலங்குகளின் ஆண் பொதுவாகப் பெண்ணினும் பருத்திருப்பதால், கடா, மோத்தை, மேழகம் (மோழகம்) முதலிய பெயர்களாற் குறிக்கப்பெறும். (மு.தா. 210)]*

**மோத்தை[2]** *mōttai,* பெ.(n.) 1. வாழை, தாழை முதலியவற்றின் மடல் விரியாத பூ; spathe or unblown flower, as of plantain, fragrant screw-pine, etc. *"நெடலை வக்கா முதலியன....... தாழம்பூ மோத்தை போலிருப்பின" (நற். 211, உரை).* 2. முற்றாத தேங்காய் (கோவை); half-ripe coconut.

*[மொத்து → மொத்தை = பருமன், உருண்டை, சோற்றுருண்டை. மொத்தை → மோத்தை (வே.க.4,50)]*

**மோத்தைக்கடா** *mōttai-k-kaḍā,* பெ.(n.) மோத்தை[1] 1 பார்க்க; see *mōttai[1] 1.*

*[மோத்தை + கடா]*

**மோதகக்கெண்டை** *mōdaga-k-keṇḍai,* பெ.(n.) நீலமும் பசுமையுங் கலந்தகெண்டை மீன்வகை; large - eyed carp, bluish green.

*[மோதகம் + கெண்டை]*



மோதகக்கெண்டை

**மோதகக்கொண்டை** *mōdaga-k-koṇḍai,* பெ.(n.) உருண்டையாகக் கட்டும் உச்சிக் கொண்டை; a kind of rounded braid of hair on the top of head.

*[மோதகம் + கொண்டை]*



மோதகக்கொண்டை

**மோதகத்தேக்கு** *mōdaga-t-tēkku,* பெ.(n.) கொழுக்கட்டைத் தேக்கு; a kind of tree.

*[மோதகம்³ + தேக்கு]*

**மோதகப்பிரியன்** *mōdaga-p-piriyaṉ,* பெ.(n.) பிள்ளையார் (விநாயகன்)(யாழ்.அக.); *Gaṇēśā.*

*[மோதகம் + பிரியன்]*

**மோதகம்¹** *mōdagam,* பெ.(n.) 1. அப்பவருக்கம்; cake of rice-flour made into ■ ball and boiled or steamed. *"வகையமை மோதகம்" (மதுரைக். 626).* 2. கொழுக்கட்டை (கந்தபு. காவிரி. 25); a bolus-like preparation of rice-flour. 3. பிட்டு; a kind of pudding, made of flour. *"காழியர் மோதகத் தூழுறு விளக்கமும்" (சிலப். 6, 137).* 4. தோசை (வின்.); a kind of flour-cake.

*[முள் → மூழ். மூழ்த்தல் = மூடுதல். மூழ் → மூடு → மூடி (மு.தா.190). மூடு → மூடகம் = உள்ளே பொருள்களை வைத்து மூடியது. மூடகம் → மோடகம் → மோதகம்]*

**மோதகம்²** *mōdagam,* பெ.(n.) 1. மகிழ்ச்சி (வின்.); delight, mirth. 2. இணக்கம் (யாழ்.அக.); agreement, suitability.

*[மோதம் → மோதகம்]*

**மோதகம்³** *mōdagam,* பெ.(n.) 1. குதிரைப் பிடுக்கன் மரம்; a tree. 2. கொழுக்கட்டைத் தேக்கு; a tree.

**மோதகம்⁴** *mōdagam,* பெ.(n.) மதுரை மாவட்டம் திருமங்கலம் வட்டத்தில் உள்ள ஊர்; ■ village in Madurai dt., Tirumangalam taluk.

*[மூடகம் → மோடகம் → மோதகம் = கொழுக்கட்டை, கல்லுப்பட்டி பக்கத்திலுள்ள இவ்வூரில் முதன் முதல் நில அளவை செய்யப்பட்டது. முதன்முதலில் பிள்ளையார் சுழி போடப்பட்ட பகுதியாதலால் அவருக்கு விருப்பமான பண்டத்தின் பெயரால் மோதகம் என்று பெயர்பெற்றது. (தமி.ஊர்)]*

**மோதகமரம்** *mōdaga-maram,* பெ.(n.) (பீநாறி) நீண்ட மரவகை; fetid tree.

*[மோதகம் + மரம்]*

**மோதகவல்லிமரம்** *mōdaga-vallimaram,* பெ.(n.) கொழுக்கட்டை மரம்; a tree.

**மோதபர்** *mōdapar,* பெ.எ. (adj.) நம்பிக்கையான (செங்கை.); reliable, respectable, trustworthy.

**மோதபர்குடி** *mōdapar-kuḍi,* பெ.(n.) நம்பிக்கையின் குடித்தனக்காரன் (செங்கை.); respectable tenant of substantial means.

*[மோதபர் + குடி]*

**மோதம்** *mōdam,* பெ.(n.) 1. மகிழ்ச்சி; joy, rejoicing, gladness. *"முன்புற்றது கண்டெழு மோதமுறா" (வேதாரணி. பிரமோப. 16).* 2. களிப்பு; intoxication. 3. நறுமணம்; smell, scent, perfume. 4. ஓமம் (மலை.); Bishop's weed.

**மோதமம்** *mōdamam,* பெ.(n.) வெள்ளுமத்தை; dhatura berring white flowers.

**மோதமரம்** *mōdamaram,* பெ.(n.) குதிரை பிடுக்கன் மரம்; a tree.

**மோதயந்தி** *mōdayanti,* பெ.(n.) காட்டுமல்லிகை (மூ.அ.); wild jasmine.

**மோதல்** *mōdal,* பெ.(n.) கைகலப்பு, சண்டை, தகராறு; clash. *'மாணவர் மன்றத் தேர்தல் தொடர்பாக மாணவர்களுக்கிடையே மோதல் ஏற்பட்டது' (உ.வ.).*

*[மோது → மோதல். 'அல்' தொ.பெ.ஈறு]*

**மோதலை**[1] *mōdalai,* பெ.(n.) 1. முகதலை; front piece or part of a cloth. *"மோதலை முண்டு பார்வைப் புறமாதலால் கெட்டியாய் நெய்யப்பட்டிருக்கும்" (நாஞ்.).* 2. போர்முனை (இ.வ.); battle-front.

*[முகத்தலை → மோதலை]*

**மோதலை**[2] *mōdalai,* பெ.(n.) கைம்மாற்றுக் கடன்(இ.வ.); temporary loan.

*[முகதலை → மோதலை]*

**மோதவம்** *mōdavam,* பெ.(n.) நறுமணம்; perfume, scent, smell.

*[மோதம் → மோதவம்]*

**மோதனங்கமூலி** *mōdanaṅga-mūli,* பெ.(n.) சித்தாமணக்கு; castor plant

**மோதானி** *mōdāṉi,* பெ.(n.) மல்லிகை; jasmine.


மோதானி

**மோதானிகம்** *mōdāṉigam,* பெ.(n.) குட மல்லிகை; jasmine bearing flowers with many whorls.

**மோதிரக்கள்ளி** *mōdira-k-kaḷḷi,* பெ.(n.) கொடிவகை (மூ.அ.); a creeper.

*[மோதிரம் + கள்ளி]*

**மோதிரக்கன்னி** *mōdira-k-kaṉṉi,* பெ.(n.) நீண்ட செடிவகை (வின்.); climbing flax.

ம. மோதிரக்கண்ணி; க. மோதிரக்கண்ணி.

*[மோதிரக்கண்ணி → மோதிரக்கன்னி]*

**மோதிரப்பாட்டு** *mōdira-p-pāṭṭu,* பெ.(n.) நாடகநூல்வகை; a dramatic poem. *"நாடகச் செய்யுளாகிய மோதிரப் பாட்டுங் ——— கடகண்டும்" (தொல். பொ. 492, உரை).*

*[மோதிரம் + பாட்டு]*

**மோதிரம்** *mōdiram,* பெ.(n.) தங்கம், வெள்ளி போன்ற மாழைகளால் செய்யப்படுவதும் விரலில் அணிந்து கொள்வதுமான சிறுவளையமான விரல்அணி, கணையாழி; finger-ring. *"சுறாவே றெழுதிய மோதிரந் தொட்டாள்" (கலித். 84, 23), 'குட்டுப்பட்டாலும் மோதிர விரலால் குட்டுப் பட வேண்டும்' (பழ.).*

மறுவ. விரற்செறி, கணையாழி.

ம. மோதிரம்; [redacted]. மோதிர.

*[முகம் → முகர் = அரசனது முகம் அல்லது தலையுருவம் பொறித்த முத்திரை. முக + திரம் – முகத்திரம் → மோதிரம் = முத்திரையிட்ட விரலணி. முத்திரை மோதிரம் என்னும் வழக்கை நோக்குக. (வ.வ.2,72)]*

முதலில் மோதிரம் முத்திரையுடையதாக இருந்தது. பின்னர் முத்திரையில்லாத மோதிரம் அணியும் பழக்கம் உண்டாக அதிலிருந்து வேறுபடுத்திக் காட்ட முத்திரை அடை சேர்த்து முத்திரை மோதிரம் [redacted] வழங்கும் வழக்கம் ஏற்பட்டது.


மோதிரம்

**மோதிரமாறுதல்** *mōdira-māṟudal,* பெ.(n.) கிறித்தவ மதத்தார் மணஞ் செய்யும் போது மணமகனும் மணமகளும் கணையாழியை மாற்றிக் கொள்ளுகை (கிறித்.); exchange of rings between bride and bridegroom at their marriage.

*[மோதிரம் + மாறுதல். மாறு → மாறுதல். 'தல்'. தொ.பெ.ஈறு.]*

**மோதிரமுருந்து** *mōdira-murundu,* பெ.(n.) குரல் வளையில் காணப்படும் மோதிரத்தைப் போன்ற வட்டமான இள எலும்பு; cricoid cartilage.

*[மோதிர + முருந்து]*

**மோதிரவிரல்** *mōdira-viral,* பெ.(n.) சுண்டு விரலுக்கு அடுத்த விரல்; ring-finger.

ம. மோதிரவிரல்.

*[மோதிரம் + விரல். மோதிரம் அணியும் விரல். விரி → விரல்.]*


மோதிரவிரல்

**மோதிரவிளையாட்டு** *mōdira-viḷaiyāṭṭu,* பெ.(n.) 1. திருமணத்தில் குடத்து நீரில் மோதிரமிட்டு மணமக்கள் எடுத்து ஆடும் விளையாட்டு (வின்.); an item in the marriage festivites in which the bride and bridegoom pick out a ring dropped

into a pot of water. 2. மோதிரத்தை ஒளித்து எடுக்கும் பிள்ளை விளையாட்டு வகை (இ.வ.); a children's game of hiding a ring and finding it.

*[மோதிரம் + விளையாட்டு]*

**மோதிரம்வைத்தல்** *mōdiram-vaittal,* பெ.(n.) மோதிரத்தை ஒளித்து எடுக்கும் பிள்ளை விளையாட்டு வகை (இ.வ.); a children's game of hiding a ring and finding it.

*[மோதிரம் + வைத்தல். 'தல்'. தொ.பெ.ஈறு.]*

ஆடுவாரெல்லாம் இருகட்சியாகப் பிரிந்து கொண்டு, கட்சிக் கொருவராக இருவரொழிய ஏனையரெல்லாம், கட்சி வாரியாய் இரு வரிசையாக எதிரெதிர் உட்கார்ந்து கொள்வர். உட்காராத இருவரும் தத்தம் கட்சி வரிசையின் பின்னால் நின்று கொண்டிருப்பர். அவருள் ஒருவர் ஒரு மோதிரத்தைக் கையில் வைத்துக் கொண்டு குனிந்து தம் வரிசையில் ஒவ்வொருவர் பின்னாலும் அதை வைப்பதாக நடித்து, யாரேனும் ஒருவர் பின்னால் வைத்து விட்டு வரிசை நெடுகிலும் சென்றபின் நிமிர்ந்து நிற்பர். எதிர் வரிசைக்குப் பின்னால் நிற்பவர், மோதிரம் வைக்கப்பட்ட இடத்தை இன்னாருக்குப் பின் என்று சுட்டிக் கூற வேண்டும். சரியாய்ச் சொல்லிவிடின், அடுத்த முறை எதிர் வரிசையின் மோதிரம் வைத்தல் வேண்டும்; இல்லாவிடின் முன் வைத்தவரே வைத்தல் வேண்டும். இங்ஙனம் தொடர்ந்து ஆடப்பெறும். கீழேயிருப்பவர் ஆட்டு நெடுகலும் உட்கார்ந்துகொண்டே யிருப்பர் (த.வி.129).

**மோதிரைகெங்கை** *mōdirai-gengai,* பெ.(n.) சீந்திற்கொடி; moon creeper.

**மோதினி** *mōdiri,* பெ.(n.) 1. மான்மணத்தி (கஸ்தூரி) (மூ.அ.); musk. 2. மல்லிகை; jasmine.

**மோது[1]-தல்** *mōdu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. ஒரு பரப்பில் வேகமாக இடித்தல், புடைத்தல் (பிங்.); to hit, strike, smite, butt. *"கனகநிற வேத னபயமிட மோது கரகமல"* (திருப்பு. 543), *'வேகமாக வந்த பேருந்து மரத்தின் மேல் மோதியது'* (உ.வ.). 2. தாக்குதல்; to blow against, dash against, push against with force. *"மோது முது திரையால் மொத்துண்டு"* (சிலப். 7, கட்டுரை. 7). 3. அப்புதல் (வின்.); to plaster, put as, [redacted] earth to a mud wall. *"சுவர்க்கு மண் மோதுகிறது".* 4. சண்டை போடுதல்; to fight, clash, as of nations. *'போரில் இரண்டு நாடுகளும் கடுமையாக மோதிக்கொண்டன'* (உ.வ.). 5. விளையாட்டு, தேர்தல் போன்றவற்றில் போட்டியிடுதல்; to clash, meet in games, in election etc. *'இறுதிப் போட்டியில் தமிழ் நாட்டணியும் கருநாடக அணியும் மோதிக்கொண்டன'* (உ.வ.). *'நண்பர்களா யிருந்த இருவரும் வரும் தேர்தலில் மோதிக்கொள்ள இருக்கின்றனர்'* (உ.வ.).

ம. மோதுக; க., தெ., பட. மோது.

*[முள் → முட்டு → மொட்டு = தலையில் வாங்கும் குட்டு. முள் முத்து மொத்து. மொத்துதல் = உடம்பிற் கையாலும் கருவியாலும் அடித்தல். முத்து → மொத்து → மொது → மோது. மோதுதல் = முட்டுவதினும் சற்று மெலிதாய்த் தாக்குதல்]*

**மோது[2]** *mōdu,* பெ.(n.) தாக்கு; blow, stroke. *'அவனை ஒரு மோது மோதினான்'.*

க. மோடு.

*[முத்து → மொத்து → மொது → மோது]*

**மோது[3]** *mōdu,* பெ.(n.) 1. வைக்கோற் கட்டு (இ.வ.); bundle of straw. *'மோதுகட்டி யிழுத்தாய் விட்டது, சுவாமி புறப்படலாம்'* (இ.வ.). 2. எண்ணெய் வடிக்கும் பொருட்டுச் சேர்த்துக் காய்ச்சும் நீர்; water added to

crushed castor-beans and heated, in extracting oil.

தெ. மோத (வெற்றிலைச் சிறுகட்டு).

*[முள் → முழு → முழுது = முழுமை. முழு → முது → மொது → மொத்து → மொத்தம் = ஒருவகைப் பொருள் அல்லது பலவகைப் பொருள்கள் எல்லாம் சேர்ந்த முழுத்திரட்சி (மு.தா.214) முழு → முது → மொது → மோது]*

**மோதுகடுக்காய்** *mōdu-kaḍukkāy,* பெ.(n.) கடுக்காய்த் தோல்; outer skin of the gall nut.

**மோதை** *mōdai,* பெ.(n.) வசம்பு (சங்.அக.); sweet flag.

**மோந்தை[1]** *mōndai,* பெ.(n.) முகம்; the face (சேரநா.).

ம. மோந்த; க. மோதி; தெ. மோமு; பட. மோந்தெ.

*[முகம் → முகந்தை → மோந்தை]*

**மோந்தை[2]** *mōndai,* பெ.(n.) தோற்கருவி வகை; a kind of drum. *"மோந்தை முழாக்குழ றாள மொர் வீணை" (தேவா. 349, 5).*

ம. மொந்தா.

*[முள் → மொள் → மொண்டை → மொந்தை = கள் முகக்குங்கலம், மொந்தை போன்ற தோற்கருவி. (மு.தா.289). மொந்தை → மோந்தை.]*



மோந்தை[2]

**மோப்பநாய்** *mōppa-nāy,* பெ.(n.) பெரும்பாலும் கள்ளத்தனமான அல்லது இடர்ப்பாடுடைய பொருள்களை முகர்ந்து கண்டறியும் வகையில் காவல் துறையால் பழக்கப்படுத்தப்பட்ட நாய்; sniffer dog. *'வைப்பகத்தில் நடந்த கொள்ளையை துப்புத் துலக்குவதற்கு மோப்ப நாய்கள் வரவழைக்கப்பட்டன' (உ.வ.).*

*[மோப்பம் + நாய்]*

**மோப்பம்** *mōppam,* பெ.(n.) 1. மணத்தை மூக்கால் உணர்வது; scent, smell. *'காட்டிலுள்ள விலங்குகள் தம் மோப்பத் திறனால் மனித நடமாட்டத்தை அறிந்து விடுகின்றன' (உ.வ.).* 2. மூக்கு (யாழ்.அக.); nose.

*[மும்கம் → முகர் = முகம், மூக்கு. முகர்தல் = மணமறிதல். முகர் → மோர் → மோ. மோத்தல் = மணமறிதல். மோ → மோப்பு → மோப்பம் = மணமுகர்வு (வே.க.4, 4)]*

**மோப்பம்பிடி-த்தல்** *mōppam-piḍi-,* 4 செ. குன்றாவி.(v.t.) மணத்தால் உணர்ந்து கண்டறிதல்; to scent, to discern by smell, as hounds on a track. *'கொலை நடந்த இடத்திலிருந்து மோப்பம் பிடித்துக் கொண்டு ஓடிய நாய் அருகிலுள்ள சாலையில் போய் நின்றது' (உ.வ.).* 2. காமவிருப்பத்துடன் (விச்சையுடன்) ஒருத்தியைத் தொடர்தல்; to follow a woman with improper desire.

*[மோப்பம் + பிடி-,]*

**மோப்பி[1]** *mōppi,* பெ.(n.) மோப்பம் பார்க்க (யாழ்.அக.); see *mōppam.*

*[மோப்பம் → மோப்பி]*

**மோப்பி²** *moppi,* பெ.(n.) கைம்பெண் (இ.வ.); widow, used disrespectfully.

தெ. மோபி; க. மோபு.

**மோப்பு** *moppu,* பெ.(n.) அன்பு; desire, amour. *"முஷ்டிவாங்கிப் பயலோ மோப்பாச்சு" (விறலிவிடு. 772).*

**மோப்புக்கயிறு** *moppu-k-kayiru,* பெ.(n.) முறுக்குக் கயிறு; twisted rope.

*[முறுக்கு + கயிறு – முறுக்குக் கயிறு → மொறப்புக் கயிறு → மோப்புக்கயிறு]*

**மோம்** *mom,* பெ.(n.) உரைகல்லில் ஒற்றும் கருப்பு மெழுகு; ▪ black coloured wax with which the rubbed gold or silver on the touch stone is pressed against.

**மோம்பழம்** *mom-balam,* பெ.(n.) நன்மணமுள்ள கனி; delicious, fragrant fruit. *"மோம்பழம் பெற்றாற் போலே" (ஈடு. 3, 5, 3).*

**மோய்** *moy,* பெ.(n.) பெண்பால் பெற்றோர்; a female parent, mother. *"உன் மோயின் வருத்தமும்" (திவ். பெருமாள். 9, 9).*

மறுவ. அம்மனை, அவ்வை, அன்னை, ஆய், ஈன்றாள், தாய், பயந்தாள், யாய்.

*[தம் + ஆய் → தமாய் → மோய். இனி அம்மாய் → அம்மோய் → மோய் விளி பொருட்டமைந்த வடிவமுமாம்]*

**மோயன்** *moyan,* பெ.(n.) 1. பணியாட்கள் (வின்.); establishment. 2. கோயிற் படித்தரக்காரர் (இ.வ.); members of a temple establishment.

**மோர்¹** *mor,* பெ.(n.) நீர்விட்டுக் கடைந்த தயிர்; buttermilk, curd diluted with water. *"நாண் மோர் மாறும் ............ ஆய்மகள்" (பெரும்பாண். 160). 'மோரைத் தெளித்தாலும் திருமணம் (கலியாணம்) தான், முத்தைத் தெளித்தாலும் திருமணம் (கலியாணம்) தான்' (பழ.).*

ம. மோர்; க. மொசரு, மசரு (தயிர்); து. மொசரு (தயிர்); குட. மோரி, கட்டிமோரி (தயிர்); கோத. மொசர்; துட. மொர்; பட. மொசரு (தயிர்).

*[முள் → முளி. முளிதல் = பொங்குதல். முள் → முறு. முளி தயிர் = நன்றாய்த் தோய்ந்த தயிர். முண்டகம் = கள். (முள்) → முர → முரப்பு. முரத்தல் = புளித்தல். முர → மோர் (மு.தா.63)]*

**மோர்²** *mor,* பெ.(n.) தேன்; honey.

**மோர்³** *mor,* பெ.(n.) முகர் பார்க்க; see *mugar.*

*[முகர் → மோர்]*

**மோர்க்களி** *mor-k-kali,* பெ.(n.) மோரோடு அரிசிமாச் சேர்த்துச் செய்த களியுணவு; ▪ kind of repast made of buttermilk and rice flour.

*[மோர் + களி]*

**மோர்க்கறி** *mor-k-kari,* பெ.(n.) மோர்க் குழம்பு பார்க்க; see *mor-k-kulambu.*

*[மோர் + கறி]*

**மோர்க்குழம்பு** *mor-k-kulambu,* பெ.(n.) மோர் சேர்த்துச் செய்யுங் குழம்பு வகை (இந்துபாக. 11); a kind of sauce made in buttermilk. *'பெரியவருக்கு மோர்க்குழம்பு மிகவும் பிடிக்கும்' (உ.வ.).*

*[மோர் + குழம்பு]*

**மோர்க்கூழ்** *mōr-k-kūḻ,* பெ.(n.) மோர்க்களி (இ.வ.) பார்க்க; see *mōr-k-kaḷi.*

*[மோர் + கூழ்]*

**மோர்ச்சாற்றமுது** *mōr-c-cāṟṟamudu,* பெ.(n.) மோர்ச்சாறு பார்க்க; see *mōr-c-cāṟu.*

*[மோர் + சாற்று + அமுது]*

**மோர்ச்சாறு** *mōr-c-cāṟu,* பெ.(n.) மோர் சேர்த்துச் செய்த சாறு; a kind of sauce prepared with butter milk.

*[மோர் + சாறு]*

**மோர்மிளகாய்** *mōr-miḷagāy,* பெ.(n.) மோரிலிட்டுப் பக்குவபடுத்திய மிளகாய்; chillies cured with buttermilk. *'பழைய சோற்றுக்கு மோர்மிளகாய் இருந்தால் நன்றாக இருக்கும்' (உ.வ.).*

*[மோர் + மிளகாய். மிளகு + காய் – மிளகாய்.]*

**மோர்மிளகு** *mōr-miḷagu,* பெ.(n.) மோர் மிளகாய் பார்க்க; see *mōr-miḷagāy.*

*[மோர் + மிளகு]*

**மோரடகம்** *mōraḍagam,* பெ.(n.) மோரடம்[1] பார்க்க; see *mōraḍam*[1].

*[மோரடம் → மோரடகம்]*

**மோரடம்[1]** *mōraḍam,* பெ.(n.) 1. கரும்புவேர் (மூ.அ.); root of sugar-cane. 2. வீழிப்பூடு (தைலவ. தைல.); a straggling shrup with simple oblong leaves and greenish flowers.

*[முருடு → முரடு = கரட்டுத்தன்மை. முரடு → மொரடு → மோரடு → மோரடம் = கரடு முரடாகக் காணப்படுவது]*

**மோரடம்[2]** *mōraḍam,* பெ.(n.) பெருங் குரும்பை (மலை.); bowstring hemp.

**மோரடி** *mōraḍi,* பெ.(n.) கரும்புத்தட்டை; ■ top portion of sugarcane with leaves.

**மோரம்** *mōram,* பெ.(n.) பழையவரிவகை; an ancient tax. *"மோரமும் இலைவாணியப் பாட்டமும் திங்கட் காசும்" (T.A.S.i, 165).*

**மோரி** *mōri,* பெ.(n.) சிறுவடிகால்; small water course, channel, gutter. *'தன் வயலுக்கு மோரி ஒன்று வெட்டினான்' (இ.வ.).*

**மோரிசுவாழை** *mōricu-vāḻai,* பெ.(n.) ஆனை வாழை; a kind of plantain.

**மோரு-தல்** *mōru-,* 3 செ.குன்றாவி. (v.t.) முகர்தல்; to smell.

*[முகர் → மோர் → மோரு (கொ.வ.)]*

**மோரெண்ணெய்** *mōr-eṇṇey,* பெ.(n.) மோர் சேர்த்துச் செய்யும் மருந்தெண்ணெய் (நாஞ்சி.); a medicinal oil prepared with buttermilk.

*[மோர் + எண்ணெய்]*

**மோரை** *mōrai,* பெ.(n.) 1. முகம் (இழிவுக் குறிப்பு) (கொ. வ.); face, a word of contempt. *'அவன் முகரையைப் பார் எப்படியிருக்கிறதென்று' (உ.வ).* 2. முகவாய்க் கட்டை; chin. 3. முகப்புப்பக்கம்; front portion.

ம. மோர்; க., பட. மோரெ; தெ. மோர; து. மோணெ, மோனெ.

மறுவ. முகவாய், மோவாய், மொகரை.

*[முகம் → முகர் = முகம், மூக்கு. முகர் → முகரை = பழிக்கப்படும் முகம். முகரை → மோரை = பழிக்கப்படும் முகம், முகவாய்க் கட்டை (வே.க.4,4)]*

**மோரைக்கட்டை** *mōrai-k-kaṭṭai,* பெ.(n.) மோரை பார்க்க; see *mōrai.*

தெ. மோரகொட்டுலு.

*[முகரை → மோரை + கட்டை]*

**மோரைக்கயிறு** *mōrai-k-kayiṟu,* பெ.(n.) மாட்டின் வாயைச் சுற்றிக் கட்டுங் கயிறு (நாஞ்சி.); rope tied round the mouth of bulls.

*[முகரைக்கயிறு → மோரைக்கயிறு]*

பெரும்பாலும் 'ஆ' வைப் பிடித்துக் கட்டுவதற்கு ஏற்றதாக அமைவது மோரைக் கயிறு, மூக்கணாங் கயிறு (எருதுக்கு), கொம்பு ஆகியவற்றையும் பிடித்துக் கட்டுவதற்குப் பயன் படுத்துவதுண்டு.

**மோரோடம்** *mōrōḍam,* பெ.(n.) செங் கருங்காலி; red catechu. *"பாதிரி.......... மாமலர் நறுமோரோடமொடு" (நற். 337).*

**மோவம்** *mōvam,* பெ.(n.) மோகனீயம் பார்க்க; see *mōgaṉiyam.* *"மோழை மோவத்தினுக்கும்" (மேருமந். 103).*

**மோவாய்** *mōvāy,* பெ.(n.) 1. முகத்தில் வாய்க்குக் கீழுள்ள இடம் (வின்.); chin. *"குச்சி னிரைத்த குரூஉ மயிர் மோவாய்" (புறநா. 257).* 2. தாடி (வின்.); beard.

மறுவ. முகரை, மோரை.

தெ. மோவி (உதடு); துட. மொய் (தாடி).

*[முகவாய் → மோவாய் (வே.க.4,5)]*

**மோவாய்க்கட்டை** *mōvāy-k-kaṭṭai,* பெ.(n.) மோவாய் 1 பார்க்க (கொ.வ.); see *mōvāy1.*

*[மோவாய் + கட்டை]*

**மோவாய்க்கட்டைபிடி-த்தல்** *mōvāy-k-kaṭṭai-piḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) மோவாய்தாங்கு-தல் பார்க்க (கொ.வ.); see *mōvāy-tāṅgu-,*

*[மோவாய் + கட்டை + பிடி-,]*

**மோவாய்தாங்கு-தல்** *mōvāy-tāṅgu-,* 5 செ.குன்றாவி. (v.t.) கெஞ்சுதல்; to beg, make entreaties, [redacted] by touching another's chin.

*[மோவாய் + தாங்கு-,]*

**மோவாய்பிடி-த்தல்** *mōvāy-piḍi-,* 4 செ. குன்றாவி.(v.t.) மோவாய்தாங்கு-தல் பார்க்க; see *mōvāy-tāṅgu-,*

*[மோவாய் + பிடி-,]*

**மோவாயெலும்பு** *mōvā-y-elumbu,* பெ.(n.) முகரையெலும்பு; lower jaw-bone.

*[மோவாய் + எலும்பு]*

**மோழல்** *mōḻal,* பெ.(n.) பன்றி (பிங்.); swine.

*[(மொழு) → மோழை → மோழல் = மொட்டை முகமுள்ள பன்றி (மு.தா. 101)]*

**மோழலம்பன்றி** *mōḻalam-paṉṟi,* பெ.(n.) ஆண்பன்றி; boar. *"மோழலம் பன்றியோடு முளவுமா" (சீவக. 1233).*

*[மோழலம் + பன்றி. மொழு → மோழை → மோழல் → மோழலம்]*

**மோழனை** *mōḻaṉai,* பெ.(n.) காட்டுமல்லிகை (சங்.அக.); wild jasmine.

**மோழி** *mōḻi,* பெ.(n.) மோழிக்குழம்பு பார்க்க; see *mōḻi-k-kuḻambu.*

மோழிக்குழம்பு *mōḻi-k-kuḻambu,* பெ.(n.) புளிக்கோசு போன்ற குழம்பு வகை; a mild sauce in imitation of a Malay curry.

*[மோழி + குழம்பு]*

மோழை[1] *mōḻai,* பெ.(n.) 1. கொம்பில்லாத விலங்கு; hornless or dehorned cattle. *'ஏழையைக் கண்டால் மோழையும் பாயும்'.* 2. மொட்டை (யாழ்.அக.); anything defective. 3. மரத்தின் அடிமுண்டம் (வின்.); stump, block. 4. மடமை; stupidity. *"மோழை மோவத்தினுக்கும்" (மேருமந். 103).* 5. குமிழி; bubble. *"அண்ட மேழை யெழ" (திவ். திருவாய். 7, 4, 1).* 6. மடு; pool. *"ஆழியா னென்று மாழ மோழையிற் பாய்ச்சி" (திவ். பெரியாழ். 3, 7, 4).* 7. கஞ்சி (பிங்.); gruel. 8. காடி; vinegar. 9. வெடியுப்பு; nitre.

ம. மோல; க. மோளெ.

*[(மொழு) → மோழை = மொட்டை, கொம்பில்லா மாடு, மர அடி முண்டம். (மு.தா.101)]*

மோழை[2] *mōḻai,* பெ.(n.) 1. வெடிப்பு; cleft, crevice. 2. கீழாறு; subterranean water-course. *"மண்டலங் கிழிந்த வாயின் மறிகடன் மோழைமண்ட" (கம்பரா. பொழிலிறு. 60).*

*[முள் → முண்டு. முண்டுதல் = பன்றி முகத்தாள் கிளைத்தல் (மு.தா.257). முள் → முளை → முழை → (மொழை) → மோழை]*

மோழைக்கறுப்பு *mōḻai-k-kaṟuppu,* பெ.(n.) நெல்வகை (இ.வ.); a kind of paddy.

*[மோழை + கறுப்பு]*

மோழைக்கொம்பன் *mōḻai-k-komban,* பெ.(n.) கொம்பு வளர்ச்சியறும்படி சுடப்பெற்ற கொம்புள்ள மாடு; ox with horns hindered in their growth, dehorned cattle.

*[மோழை + கொம்பன். கொம்பு → கொம்பன். 'ன்' உடைமை குறித்த ஈறு]*

மோழைக்கொம்பு *mōḻai-k-kombu,* பெ.(n.) வளர்ச்சியறும்படி சுடப்பட்ட கொம்பு (வின்.); horn hindered from growing by being burnt.

*[மோழை + கொம்பு. கொள் → கொம் → கொம்பு = வளைந்த கோடு, வளைந்த விலங்கின் தலைமேல் அமையும் உறுப்பு]*

மோழைபுறப்படு-தல் *mōḻai-puṟa-p-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) கீழாறு வெளியே தோன்றிப் பாய்தல் (வின்.); to gush out, as water from a subterranean.

*[மோழை + புறப்படு-,]*

மோழைபோது *mōḻai-pōdu,* பெ.(n.) மோழை உருவாதல்; forming hole in the field, by crabs.

மறுவ. கீழாறு போடுதல், மடு போடுதல், பேடு போதல்.

*[மோழை + போது]*

மோழைமிதி *mōḻai-midi,* பெ.(n.) வயலில் நண்டால் உண்டாக்கப்பட்ட ஒட்டை (மோழை) யை மிதிப்பது; treading the hole in the field.

*[மோழை + மிதி]*

மோழைமுகம் *mōḻai-mugam,* பெ.(n.) பன்றி (நிகண்டு.); swine.

*[மொழு → மோழை + முகம். மொட்டை முகமுள்ள பன்றி. மோழல் = பன்றி. (மு.தா. 101)]*

**மோழைமை** *mōḷaimai,* பெ.(n.) 1. மடமை; stupidity. *"முன்பு சொன்ன மோழைமையால் முட்டை மனத்தீரே" (தேவா. 188, 8).* 2. கேலிப் பேச்சு; word of ridicule. *"முன் பெலாஞ்சில மோழைமை பேசுவர்" (தேவா. 359, 4).*

*[(மொழு) → மோழை = மொட்டை (மு.தா.101), மோழை → மோழைமை = அறிவு மழுங்கிய நிலை, மடமை]*

**மோழைவழி** *mōḷai-vaḷi,* பெ.(n.) நுழைவழி (திருக்காளத். பு. அரும்.); narrow gate or opening.

*[மோழை + வழி]*

**மோளு–தல்** *mōḷu-,* 12 செ.கு.வி. (v.i.) சிறுநீர் கழித்தல்; to pass urine, to urinate. *'பிள்ளை படுக்கையில் மோண்டு விடுகிறது' (உ.வ.).*

*[முள் → மொள் → மொண்டான் = நீர்மொள்ளுங் கலவகை. மொள் → மொண்டை → மொந்தை = மொள்கலம். மொள் → மோள். மோளுதல் = சிறுநீர் பாய்ச்சுதல் அல்லது கழித்தல் (வே.க.4,92). மோள் → மோட்டிரம் → மோத்திரம் → மூத்திரம். வடமொழியில் மோள் என்னும் பகுதி அல்லது வினை இல்லை. மூத்திரம் என்னும் வினைப்பெயரே உள்ளது. வினைப் பகுதியினின்று வினைப்பெயர் அமையுமேயன்றி, வினைப் பெயரினின்று வினைப் பகுதி அமையாது (மு.தா. 276)]*

**மோறா[1]–த்தல்** *mōṟā-,* 7 செ.கு.வி. (v.i.) 1. அங்காத்தல்; to gape. *"நரசிம்மத் தினுடைய மோறாந்த முகத்தையும்" (ஈடு, 4, 8, 7).* 2. சோம்பியிருத்தல்; to be lazy. *"மோறாந் தொரொரு கானினையா திருந்தாலும்" (கேவா. 1051, 3).*

தெ. மோராத்திலு; க. மோராதி.

**மோறை[1]** *mōṟai,* பெ.(n.) முருட்டுத்தனம்; wildness, savageness. *"மோறை வேடுவர் கூடிவாழ்" (தேவா. 919, 4).*

*[முகரை → மோரை = பழிக்கப்படும் முகம். மோரை → மோறை = (இயல்பாய் இல்லாமல்) முரட்டு முகத்தோற்றம், முரட்டுத்தனம்]*

**மோறை[2]** *mōṟai,* பெ.(n.) 1. மோவாய்; chin, used in contempt. *'நான் உன் மோறையைப் பெயர்ப்பேன்'.* 2. மோறைக் கட்டை பார்க்க; see *mōṟai-k-kaṭṭai.*

தெ. மோறா; து. மோரீ.

*[முகரை → மோரை → மோறை]*

**மோறைக்கட்டை** *mōṟai-k-kaṭṭai,* பெ.(n.) முகம் (கொ. வ.); face, used in contempt.

*[முகரைக்கட்டை → மோரைக்கட்டை → மோறைக்கட்டை]*

**மோனகந்தாள்** *mōṉakandāḷ,* பெ.(n.) உடும்பு; guana.



மோனகந்தாள்

**மோனை[1]** *mōṉai,* பெ.(n.) 1. மோனைத் தொடை பார்க்க (தொல். பொ. 404); see *mōṉai-t-toḍai.* 2. முதன்மை; first. *"மோனை மங்கலத் தியற்றுவ" (உபதேசகா.*

*சிவபுண். 63). "மோனையா மெனவுரைத்த சவணத்திற்கு" (வேதா. சூ. 131).*

*[முகம் → முகப்பு = முள் மண்டபம், முனைப் பகுதி. முகம் → முகன் → முகனை → மோனை = சீர்களின் முதலிடம், அவற்றின் முதலெழுத்துகள் ஒன்றி வரவல், முகப்பு (மு.தா.36)]*

**மோனை²** *mōṉai,* பெ.(n.) மகன் (யாழ்ப்.); sonny, used as a term of endearment in addressing a child.

ம. மோன் (மகன்).

*[மகன் → மொ(க)ன் → மோன். மோன் → மோனை]*

**மோனைத்தொடை** *mōṉai-t-toḍai,* பெ.(n.) செய்யுட்டொடை ஐந்தனுள் சீர்களின் முதலெழுத்து ஒன்றி வரத் தொடுப்பது (இலக். வி. 723, உரை); a versification in which the first letters of all or some feet of a line alliterate, one of five *toḍai, q.v.*

*[மோனை + தொடை. தொடு → தொடை]*

ஒலிப்பு முறையால் முதலெழுத்து ஒன்றி வருவது மோனை.

*'அகரமுதல எழுத்தெல்லாம் ஆதி*
*பகவன் முதற்றே உலகு'*

இங்கு முதலடியில் முதல் சீரில் வரும் அகரம் நான்காம் சீரில் வரும் ஆகாரத்திற்கு மோனை அ, ஆ, ஐ, ஔ நான்கும் தமக்குள் ஒன்றனுக்கொன்று மோனையாகவும், இ, ஈ, எ, ஏ நான்கும் தமக்குள் ஒன்றனுக்கொன்று மோனையாகவும், சகரமும் தகரமும் தமக்குள் மோனையாகவும், ஞகரமும் நகரமும் தமக்குள் மோனையாகவும் வரும். யகரமும் ஞகரமும் மோனையாக வருதலும் ஏற்கத்தக்கதே. மெய்யெழுத்துகள் உயிர்மெய்யாக வரும் பொழுது முன்னர் குறிப்பிட்ட உயிரெழுத்துக்குத் தக்கபடி அமையும். அதாவது ச,சா,சை,சௌ தமக்குள் மோனையாகவும் த,தா,தை,தௌ தமக்குள் மோனையாக வரும். சு,சூ,செ,சே தமக்குள்ளும், தி,தீ,தெ,தே தமக்குள்ளும் மோனைகளாக அமையும். இவ்வாறே பிறவும் அமையும்.

# மௌ

**மௌ** *mau,* பெ.(n.) தமிழ் நெடுங்கணக்கில் 'ம்' என்ற மெய்யெழுத்தும் 'ஔ' என்ற உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய் (அசை) எழுத்து; the syllabic letter formed by adding the vowel (diphthong) 'au' to the consonant 'm'.

*[ம் + ஔ = மௌ]*

**மௌவல்** *mauval,* பெ.(n.) 1. காட்டு மல்லிகை; wild jasmine. *"ஞாழன் மௌவல்" (குறிஞ்சிப். 81).* 2. முல்லை (சூடா.); Arabian jasmine. 3. தாமரை; lotus. *"மௌவ னீண்மலர் மேலுறை வானொடு" (தேவா. 1213, 13).*

**மௌவறி** *mauvaṟi,* பெ.(n.) காட்டு மல்லிகை; wild jasmine.

**மௌவாலி** *mauvāli,* பெ.(n.) குதிரைவாலி; a plant.



மௌவாலி

